(விளக்கப



திருச்சி-தென்னூர்

தி. அர. நடேசன் பிள்ளை

எழுதியது.



1943

—



[விலை ரூ. 1—12—0

# தமிழர்

## (திராவிடர்)

# மதச்சுருக்கம்

(விளக்கப் படங்களுடன்)




திருச்சி-தென்னூர்

**தி. அ. நடேசன் பிள்ளை**

எழுதியது.



1943




[விலை ரூ. 1—12—0

# முகவுரை.

நான் படித்த பல புஸ்தகங்களிலிருந்தும், சில பெரியார்களிடமிருந்தும், நேரில் தெரிந்துகொண்டவைகளிலிருந்தும், இப்புஸ்தகம் தொகுக்கப்பட்டது. நான் முதலில் இது விஷயமாக சில நண்பர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது, இவ்விஷயங்களை நான்மட்டும் தெரிந்திருப்பதும், என்னோடு அழிந்து விடுவதும் நலமல்லவென்றும், மற்றவர்களுக்கும் தெரியும்படி எழுதி அச்சிட்டு வெளியிடுதல் நலமென்றும் சொன்னதை ஒப்புக்கொண்டு இந்நூல் எழுதலானேன்.

சமீப காலத்தில் தோன்றின இவ்வுலகத்திலுள்ள மற்ற மதங்களெல்லாம், உண்டான காலமும், உண்டாக்கினவர்கள் பெயர்கள் முதலியவைகளும், தெரிந்திருக்கின்றன. ஆனால் நம் தமிழர்மதம், சைவமதம் என்பது வரையறுக்க முடியாத காலமுதல்கொண்டே, அநேக ஆயிரம் வருஷம்முதல்கொண்டே, இருந்து வருகிறது. உண்டாக்கியவர் பெயர் முதலியவும் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் அவைகளைப்பற்றி அநேக பெரியார்கள் சில ஆயிரம் வருஷங்களுக்கு முன்னிட்டே பேசியிருக்கிறார்கள். சுமார் 15,000 வருஷங்களுக்கு முன்பிருந்தே, சங்ககால முதற்கொண்டே, நம் நாடு, நாகரீகம், கலை, மொழி, வணிகம், மதம் முதலியவற்றில், தலைசிறந்து விளங்கிற்றென்று ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அக்காலத்தில் நமது மதம் தனக்கு நிகரற்று விளங்கி நின்றது. அதன் உண்மையை ஆராயில் இப்பவும் நிற்கிறது. இனியும் நிற்குமென்றும் துணிபு. ஆகவேதான் சைவசமயம்தான் எல்லாவற்றிற்கும் தாய் சமயமென்று சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாம் ஒரே குலம், எல்லாம் ஒரே சமயம் என்று சொன்னது நமது சமயம். ஆரியர்களுக்கு, வேதமும் உபநிஷதமும், கிறிஸ்தவர்களுக்கும், இஸ்லாமியர்களுக்கு மவர்கள் மதம் கற்பித்தது நம் மதம். அப்படியிருந்த நமது சமயம், நாடோடியாய் நம் நாட்டிற்கு வயிர்பிழைக்கவந்த ஓர் கூட்டம், தனது சூழ்ச்சியால், நமது எல்லாவற்றிலும், நமது மதத்திலும் ஆதிக்கம் பெற்றதிலிருந்து நமது மதம் இப்போது இந்நிலைக்கு வந்திருக்கிறது. நம்மினத்தாரில் சிலர், நம்மிடத்தில் கற்றுக்கொண்ட வேறு சில [illegible] சேர்ந்துகொண்டு

நம்மை பரிகசிக்கும் நிலைக்கும் வந்[illegible]டோம். தவிர ஆரியத்திற்கு அறிவை பறிகொடுத்த அடிமைத் தமிழர்களான ஒரு சிலரும், சமய அறிவு வேறு, வெறும் இலக்கண இலக்கிய அறிவு வேறு என்று உணராத நம்மில் புலவர்களாகிய ஒரு சிலரும் சமயத்தில் புகுந்து, குருடும் குருடும் சேர்ந்து இருட்டுட்டில் குருட்டாட்ட மாடினவென்று சொல்லப்படுவதைப்போல் இந்த கீழ் நிலைக்கு கொண்டுவந்து விட்டார்கள். ஆகவேதான் சைவ திருமுறைகளில் ஒன்றாக கருதப்படும் திருமூலர் திருமந்திரம் என்பதின் பதிப்பில் ஒன்றில், முகவுரையாக எழுதியதில், வெறும் இலக்கண இலக்கியம் படித்தவர்களால் இதன் பொருளை உணர முடியாதென்றும், வெறும் தத்துவங்கள் மாத்திரம் தெரிந்தவர்களாலும் இதன் பொருளை உணர முடியாது என்றும் எழுதியிருக்கிறார்கள்.

'தமிழ்நாடு', 'தமிழ்மொழி' என்ற கிளர்ச்சி ஏற்பட்டு, தமிழர் மதம் இன்னதென் றறிந்துகொள்ள அவா கொண்டுள்ளவர்கட்கும், சமய ஒற்றுமை வேண்டுமென்று எழுதி மக்கள் மனம் அந்நெறியில் படருமாறு பேசுபவர்கட்கும், உண்மையை உணரவும், உணர்த்தவும், சங்கங்கள் அமைத்து அதன்வாயிலாகத் தொண்டுபுரிபவர்கட்கும், சைவ ஆகமங்களின் நுண் பொருள்களையும் வைணவ சம்பிரதாய உட்பொருள்களையும் விளக்கமாகத் தெரிந்து, அதை மக்கள் பலருக்கும் அறிவிக்க வேண்டியது, சமய நிலையத் தலைவர், ஆலயப் புரவலர்களின் கடமையென்று எண்ணுபவர்கட்டும், இந்நூல் ஒரு சிறிதாவது பயன்தருமென்று, எண்ணி, உலகப் பெரும்போரினால் காகிதவிலை மிகுந்துள்ள இந்நாளில் இந்நூலை வெளியிட்டுள்ளேன். எனினும் இந்நூல் அடக்க விலைக்கே கொடுக்கப்படுகிறதென்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வடமொழி பயின்றால்தான் சமயம் அறிந்து கொள்ளலாம், அதில்தான் எல்லாமிருக்கின்றதென்பது ஒருசிலர் எண்ணம். அது உண்மையல்ல. வடமொழி நூல்கள் அத்துவிதத்தைப்பற்றித்தான் சொல்லும். நமது மதம் எல்லாவற்றிற்கும் மேலான ஞானமதம், உண்மையைக் காணச் சொல்லும் மதம். தமிழில்தான் நமது முடிபான சமயமும், முடி[illegible]ணும் மார்க்கமும் சொல்லப்பட்டிருக்கிறது. த[illegible]ழ்மத நூல்களில், ஏன், எல்லாமத நூல்களிலுமே, வி[illegible]ங்கள் எல்லாம், குழூஉக்குறியில், மறை

பொருளிலேயே சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த விஷயங்களை கொஞ்சம் தெரிந்த நான், தமிழ்மொழியில், மிகவும் தேர்ச்சியில்லாத நான், தற்சமயம் இதை எழுத முற்பட்டேன். முக்கண்ணன் எழுதிய நூலுக்கு நக்கீரர் குற்றம் கண்டுபிடித்தார் என்றால், ஞானநூலுக்கு இலக்கண இலக்கிய குற்றமிருக்குமென்பது தெரியக்கிடக்கிறது. ஆகையால் இந்நூலைப் படிக்கும், தலைமாணுக்கர்களாகிய தமிழ் உடன்பிறந்தோர்கள், இதில், இதுவும் ஞானத்தைப்பற்றி பேசும் நூலாகையால், உள்ள குற்றங்களைக் கவனியாது குணங்களைமட்டும் கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இதை அச்சிட்டு வெளியிடுவதில், அச்சுப் பிரதிகளை திருத்தி எனக்கு உதவிய கரந்தைக் கூட்டுறவு மின்னியக்கப் பதிப்பகத்தார்க்கும் இன்னுமற்ற என் நண்பர்களுக்கும், மற்றும் இதைத் தொகுப்பதில் எனக்கு உதவிய என் நண்பர்களுக்கும் எனது நன்றி உரித்தானது.

டி. அர. நடேசன் பிள்ளை.



## அறிவிப்பு.

சுமார் 5,000 வருஷங்களுக்கு முன் பிருந்தே எகிப்து தேசத்திலும், பக்கத்து தேசங்களிலுமிருக்கும் உலகயதிசயங்களென்று மேல்நாட்டாராலும் கருதப்படும் மாபெரும்கட்டிடங்களும், உருவச்சிலைகளும், இந்தியாவில் மகஞ்சோதரோ, ஆரப்பாமிடங்களில் கட்டப்பட்டவைகளும், நம் குமேரியர், திராவிடர், கலை, நாகரீகம், சமயமுமென்பது பற்றி யொருநூல் சீக்கிரத்தில் வெளிவரும்.

## பொருளடக்கம்.

௨

# தமிழர் (திராவிடர்) மதச் சுருக்கம்.

---

## பாலபாடம்.

மதத்தைப்பற்றித் தெரிந்துகொள்ளுமுன் மதத்தில் உள்ள சில முக்கியமான, மறுக்கமுடியாத, உண்மையான விஷயங்களை முதன்மையாக நாம் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது.

1. நம் கண்முன் இருக்கும் இந்தப் பிரபஞ்சம், உலகம், ஐந்து வஸ்துக்களால் ஆயது. அவையாவன:--பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்கிற மண், நீர், தீ, காற்று, வெளி என்பன.

2. நம் உடலும், சரீரமும், இந்த ஐந்து வஸ்துக்களால் ஆனவையே.

பிருதிவி, மண்ணால் ஆனது—உரோமம், நரம்பு, தோல், மாமிசம், எலும்பு.

அப்பு, நீரால் ஆனது—சுக்கிலம், இரத்தம், வியர்வை, சிறு நீர், வாய் நீர்.

தேயு, தியால் ஆனது—சங்கமம், ஆலசியம், நித்திரை, தாகம், பசி.

வாயு, காற்றினால் ஆனது—தத்தல், ஓடல், இருத்தல், நடத்தல, கிடத்தல்.

ஆகாயம், வெளியால் ஆனது—ஆசை.

3. இவைகளைத் தவிர நம்மிடத்தில் அந்தக்கரணங்கள் என்று ஐந்துள ; அவையாவன:—சித்தம், மனம், புத்தி, அகங்காரம், உள்ளம்.

இவைகளில் உள்ளம் என்பதை நீக்கி அந்தக்கரணம் நான்கு என்பாரும் உண்டு. இன்னும் சிலர் அகங்காரம் என்பதையும் நீக்கி அந்தக்கரணம் மூன்று என்பாருமுண்டு.

4. நமக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐந்து இந்திரியங்கள் உறுப்புக்கள் இருக்கின்றன. இவைகளுக்கு ஞான இந்திரியங்கள் அல்லது அறிவு உறுப்புக்கள் என்று பெயர். இவை ஐந்தும் தனித்தனியே ஐந்து தொழில்களைச் செய்கின்றன.

5. இந்த உலகத்தில் இருப்பவைகளை நம் அறிவைக் கொண்டு பார்த்தால், இந்த உலகத்தில் உயிரில்லா வஸ்துக்களென்றும், உயிருள்ள வஸ்துக்களென்றும் இரு பெரிய பிரிவாக உள்ளன. அந்த உயிருள்ள வஸ்துக்களை இன்னும் உற்று நோக்கினால், இந்த அறிவுகளில் ஒன்றையே உடைய அதாவது மரம், செடி போன்ற ஓரறிவுடையனவென்றும், சில இரண்டறிவுள்ள நத்தைபோல் இரண்டறிவுடையனவென்றும், சில மூன்றறிவுள்ள எறும்புபோல் மூவறிவுடையனவென்றும், சில நான்கறிவுள்ள வண்டுபோல் நான்கறிவுடையனவென்றும், சில ஐந்தறிவுள்ள பக்ஷி, மிருகம்போல் ஐந்தறிவுடையனவென்றும் இந்த ஐந்து அறிவுகளுடன் நல்லது கெட்டது என அறியும் பகுத்தறிவுடன், ஆறு அறிவுடையவை, நாம் என்றும், இவ்வாறாக இருக்கின்றன. இந்தப் பகுத்தறிவுடைய மனிதர்களாகஇருப்பது சுலபத்தில் கிடைக்கமுடியாத சந்தர்ப்பம் (Golden opportunity of a rational being and sovereign blessings of God consciousness) என்று ஒரு பெரியார் கூறியிருக்கிறார்.

6. நமக்கு தொழில் செய்யும் தொழில் உறுப்புக்கள் கன்மேந்திரியம் என்ற ஐந்துண்டு. அவையாவன:—

வாக்கு கொடுக்கும் வாய்; இடுதல், ஏற்றல் செய்யும் கைகள்; நடக்கும் கால்கள்; மலஜலம் கழிக்கும் குதம்; ஆனந்தத்தைக் கொடுக்கும் குய்யம்.

7. நம்மிடம் ஐந்து வாயுக்கள் உள்ளன, அவையாவன:

வியாணன், இது இரத்தத்தை எங்கும் பரவச் செய்து தேகத்தைத் தாங்கி நிற்கும்.

பிராணன், இது இருதயத்திலிருந்து சலித்துக்கொண்டே பசி, தாகங்களை உண்டாக்கும்.

அபானன், இது இருதயத்திலிருந்து மலஜலங்களை வெளித்தள்ளும்.

சமானன், இது நாபியிடமிருந்து உண்ட அன்னபானாதிகளைச் சமானம் செய்யும்.

உதானன், இது கண்டத்திலிருந்து உஸ்வாசம், நிஸ்வாசம் செய்யும்.

இவை தவிர இன்னும் வேறு ஐந்து உப வாயுக்கள் உண்டு. அவையாவன:—

நாகன், இது தேகத்தை முறுக்கிக் கொட்டாவி விடச் செய்யும்.

கூர்மன், இது விக்கலையும், ஏப்பத்தையும் உண்டாக்கும்.

கிரிகரன், இது தும்மலை உண்டாக்கும்.

தேவதத்தன், இது சிரித்தல், சோகம் முதலியவற்றை உண்டாக்கும்.

தனஞ்சேயன், இது பிராணன் நீங்கியபின் தேகத்தில் 5 நாள் தங்கியிருந்து சதை வீங்கி வெடிக்கச் செய்யும்.

8. உயிருள்ள வஸ்துக்கள் உற்பத்தியாகும் வகை நான்கு. அவை:—

ஒன்று வியர்வை, அழுக்கு முதலியவைகளிலிருந்து உண்டானது.

இரண்டாவது விதைகளிலிருந்து உண்டாவது.

மூன்றாவது முட்டையிலிருந்து உண்டாவது.

நான்காவது யோனிப்பையிலிருந்து உண்டாவது.

9. உலகத்திலுள்ள வஸ்துக்கள் நமக்கு 7 வகையாகத் தோற்றப்படுகின்றன. அவையாவன:—

தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்.

10. நமக்கு 8 அங்கங்கள் இருக்கின்றன. அவையாவன:-

கைகள் இரண்டு, கால்கள் இரண்டு, தோள்கள் இரண்டு, மார்பு, நெற்றி.

11. நம் உடல் 8 வஸ்துக்களால் ஆனது. அவையாவன:—

மயிர், தோல், தசை, கொழுப்பு, எலும்பு, நரம்பு, ஜவ்வு, இரத்தம்.

12. எட்டுவித சக்திகள் உண்டு. (சித்தர்படி)
அணுத்தன்மை, பருமை, விண்டன்மை, மென்மை, விரும்பிய செய்தல், நிறை உண்மை, ஆட்சியனுதல், கவர்ச்சி.

13. நமக்கு மூன்றுவித குணங்களுண்டு. அவையாவன:

சத்துவம், இது சுத்த சாந்தம், ஜீவகாருண்யம், கடவுள் பக்தி கடவுள் சிந்தனை முதலியவற்றை யுடையது.

இராசதகுணம், இது உலக விஷயங்களிலும், உலக போகத்திலும் பிரியமுடையது. துவேஷம், உரோஷம், சாதாரண கோபம், ஆசை இவையாவும் இராசதகுணங்களே.

தமோகுணம், இது தன்னை மறந்த கோபம், அதிக ஊண் புசித்தல், அதிக நித்திரை, மயக்கம் முதலிய இழிவான குணங்களை யுடையது.

இம் மூன்று குணங்களும் எப்போதும் ஒன்றோடொன்று கலந்தேயிருப்பினும் ஒருபோதும் மூன்றும் சமமாயிராது. எப்போதும் ஏதாவதொன்றுமட்டும் மேலோங்கியும் மற்ற இரண்டும் தாழ்ந்துமே இருக்கும்.

இம் மூன்றில் ஒவ்வொன்றுமே தனித்தனியே மூன்று பிரிவாக உண்டு. அதாவது, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் இராசதகுணம், சத்துவத்தில் தமோகுணம்; இராசதத்தில் சத்துவம், இராசதத்தில் இராசதம், இராசதத்தில் தமம்; தமத்தில் சத்துவம், தமத்தில் இராசதம், தமத்தில் தமம்; என ஒன்பது பிரிவென்று சொல்வாருமுண்டு.

14. நமக்கு இருக்கும் புத்தி ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதாவது :—

மிருத்துபுத்தி—அதாவது மண். மண் சுவற்றில் ஆணி அடிப்பதும் மறுபடியும் அதைப் பிடுங்கிவிடுவதும் சுலபம். ஆசானிடம் கேட்டவற்றை மாணவன் உடனே அறிந்துகொண்டு சற்று நேரத்தில் அதை மறந்து விடுவதாகும்.

தாருபுத்தி—அதாவது மரம். பச்சைமரத்தில் ஆணி அடிப்பது சுலபம். பிறகு அதைப் பிடுங்குவது கஷ்டம். அதுபோல் ஆசானிடம் கேட்டவற்றை மாணக்கன் சுலபமாக மனதில் பதித்துக்கொண்டு, அதை மறவாமலும் அதிகம் தெரியாமலும் இருத்தலுமாம். பட்டமரத்தில் ஆணி அடிப்பதும் கஷ்டம். அப்படி அடித்தாலும் சீக்கிரத்தில் அது விழுந்துவிடும். அதுபோல் கேட்ட விஷயங்கள் புத்தியில் பதிவது கஷ்டம். அப்படிப் படித்தாலும் கொஞ்ச காலத்தில் மறந்துபோம்.

சிலாபுத்தி—கருங்கல்லில் நாலு துளைகள் செய்து ஒரு துளையில் உளிவைத்து அடித்தால் மற்ற துளைகள் வழியாயும்

பிளந்து கல் இரண்டாய்ப் பிளந்துபோம். அதுபோல் தக்க சமயங்களில் குறிப்பான ஒரு பொருளைக் கூறினால் அதைக் கொண்டு மற்றவற்றையும் தெரிந்துகொள்வது.

வேணுபுத்தி—மூங்கில், மூங்கில் கணுவில் ஒரு பக்கம் உளி வைத்து அடித்தால் இரு பக்கங்களிலும் பிளந்துகொள்வதுபோல் ஒரு விஷயத்தைக் கேட்டதுகொண்டே முன்பின் தொடர்களையும் தெரிந்துகொள்ளுதல்.

தைலபுத்தி—எண்ணெய். கிணற்றுத் தண்ணீர்மேல் ஒரு துளி எண்ணெய் விட்டால் அது தண்ணீர் முழுதும் பரவி விடல்போல் ஆசான் சுருக்கமாய்ச் சொன்னதைக்கொண்டே பூரண விஷயங்களையும் தெரிந்துகொள்வது.

15. இதைப்போலவே மாணக்கர்களில், படிப்பவனில், மூன்று பாகுபாடுகள் உண்டு. அவை தலை மாணாக்கன், இடை மாணாக்கன், கடை மாணாக்கன் என்பனவாம்.

தலை மாணாக்கன்—இவன் அன்னத்திற்கும் பசுவிற்கும் ஒப்பிடப்பட்டிருக்கிறான். அன்னம், பாலும் தண்ணீரும் கலந்து வைத்தால் தண்ணீரை நீக்கிப் பாலைக் குடிக்குமாம். பசு, தான் முதலில் தின்ற தீனியை ஒரு இடத்தில் படுத்து மறுபடி வாயிற்கொண்டுவந்து அசைபோட்டு விழுங்குவதுபோல், படித்தவைகளில் கெட்டதை விடுத்து நல்லதை எடுத்துக் கொள்ளுதல், படித்தவற்றை பிறகு ஆலோசித்து அதிகப் படுத்திப் பதிவு செய்துகொள்ளல்.

இடைமாணாக்கன்—இவன் மண்ணிற்கும் கிளிப்பிள்ளைக்கும் ஒப்பிடப்பட்டிருக்கிறான். மண் இட்ட பயிரையே உரத்துக்குத் தக்கவாறு விளையச் செய்யும். கிளிப்பிள்ளை தனக்குச் சொல்லிக் கொடுத்ததையே திருப்பிச் சொல்லும். அவைகளுக்கு அதிகமாக ஒன்றும் சொல்லத் தெரியாது. உள் பொருள்களையும் தெரிந்துகொள்ள ஆற்றலில்லை. அது போல் இத்தவித மாணாக்கன் தான் படித்ததையே சொல்லத் தெரியுமே தவிர அதிகமாக ஒன்றும் தெரியாது.

கடை மாணாக்கன்—இவன் பன்னாடை, ஓட்டைக்குடம் இவைகளுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறான். பன்னாடை தன் மேலிட்டவற்றில்சத்தைவிட்டுச்சக்கையைப்பற்றிக்கொள்ளும். ஓட்டைக் குடம் தனக்குள் விடப்பட்ட தண்ணீரை ஒழுகிப் போக விட்டுவிடும். அதுபோல் இந்த மாணாக்கன் தனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டவைகளில் நல்லவைகளை விட்டுக் கெட்டவைகளையே பிடித்துக்கொள்வான். தனக்குச் சொல்லிக் கொடுத்தவைகளை அறவே மறந்து விடுவான்.

16. நம்மிடம் மூன்றுவிதமான :மலமான, அழுக்கான குணங்களுண்டு. அவையாவன:—

ஆணவம் என்கிற, அகங்காரம் என்கிற, மமதை, கன்மம் என்கிற செயல்கள், மாயை என்கிற பொய்.தோற்றம், என்கிற அஞ்ஞானம். இந்தக் கர்மத்தில் உண்டாவது காமம், குரோதம், உலோபம்என மூன்று. காமம் என்பது சகல ஆசைகளும், ஆசை கிட்டாவிட்டால் உண்டாகிறது குரோதம், பொருமை முதலியன. அதனிமித்தம் அதை ஆற்றிக்கொள்ள நாம்செய்யும் உலோபம் என்கிற தீச்செயல்கள். இந்தக் காமம், குரோதம், உலோபம் என்பவைகளுடன் மோகம், மதம், மாச்சரியம் என்பவற்றைச் சேர்த்து சொல்வாருமுண்டு.

17. ஸ்தலசுத்தம், சரீரசுத்தம், ஆத்மசுத்தம் அல்லது இடசுத்தம், உடல்சுத்தம், மனசுத்தம் என்கிற மூன்று சுத்தங்களுண்டு.

18. நமது உடலில் மொத்தம் 72,000 நாடிகள் இருக்கின்றன. அவைகளில் 1008ஐ முக்கியமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளிலும் 108ஐ முக்கியமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளிலும் ஆறு ஆதாரங்கள் என்கிற ஆறு நாடிகள் முக்கியமாக வைக்கப்பட்டிருக்கின்றன. அவை மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, என்பவைகளே.

19. நாம் நித்தம் 21,600 மூச்சுவிடுகிறோம் என்றும் அவை சாதாரணமாக ஒவ்வொன்றும் 12 அங்குல நீளமுள்ளவை என்றும் கணக்கு எடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த மூச்சுகளுக்குச் சாதாரணமாக இடமூக்கு, வலமூக்கு என்கிற இடகலை பிங்கலை நாடிகள்தான் காரணம் என்றும், இவைகளை அடக்கப்பட்ட, விசேஷ மூச்சுக்கு நமது நெற்றியில் புருவமத்தியில் இருக்கும் சுழிமுனை நாடிதான் காரணம் என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது.

20. கோசங்கள் ஐந்து உள்ளன. கோசம் என்றால் உறை அல்லது போர்வை. இவைகள் நம் ஆன்மா தன் நிஜ உருவத்தை அறியாவண்ணம் அதை மூடிக்கொண்டிருக்கின்றன. கோசங்கள் ஐந்தும்:—

அன்னமயகோசம்— இது அன்னத்தால் விருத்தியடைந்து கடைசியில் பூமியில் அழிவதாகிய இந்த ஸ்தூல சரீரமாகிய மாமிச உடலே.

பிராணமயகோசம்—இது கன்மேந்திரியங்களோடுகூடிய பிராணனே.

மனோன்மயகோசம் — இது ஞானேந்திரியங்களோடு கூடின மனம்.

விஞ்ஞானமயகோசம் — இது ஞானேந்திரியங்களோடு கூடிய புத்தி.

ஆனந்தமயகோசம்—இது அஞ்ஞானம் என்கிற காரண தேகம், உடல்.

21. சிரவணாதிகள் மூன்று என்று குறிக்கப்பட்டிருக்கிறது. அவை

சிரவணம்—இது பிரம்மான்ம ஐக்யத்தைக்கூறும் வேத வாக்யத்தின் தாத்பரியத்தைக் குருமுகமாக விசாரித்தறிதல்.

மனனம்—இது சிரவணத்தால் விசாரித்து உணர்ந்த பொருளை புத்தியால் சிந்தித்தல்.

நித்தியாசனம்—இது மேல் சொல்லப்பட்ட இரண்டிலும் துணிந்த பிரம்மானுபவத்தில் சித்தம் அசைவற நிலைத்து நிற்கச்செய்தல்.

22 சமாதி சட்சம் பத்தி என்கிற ஆறுகுணங்கள் உண்டு. அவையாவன :—

சமம் என்பது அகக்கரணதண்டம். இது உள்ளே இருக்கும் கரணங்களாகிய மனம், சித்தம், புத்தி முதலியவற்றை அடங்கிய மனம்.

தமம் என்பது புறக்கரணதண்டம். மேற்கூறியபடி அடக்கப்பட்ட மனதை இந்திரியங்களின் வழியேசென்று விஷய சுகங்களை யடையவொட்டாது தடுத்தல்.

விடல் என்பது பெண், தனம், ஜாதியபிமானம் முதலிய சகல கருமங்களையும் துக்கத்திற் கேதுவென்று உணர்ந்து அவற்றில் பிரவேசியாது வெறுத்துவிடல்.

சகித்தல் என்பது காமக் குரோதாதி குணங்களை அடக்குதலும்; நேரும் சுகதுக்கங்களைப் பொறுத்துக்கொள்ளுதலும்.

சமாதானம் என்பது சித்தத்தை விஷயங்களில் செல்லவொட்டாது தடுத்து, கேட்டறிந்த ஞான விஷயங்களிலும் ஈஸ்வர சிந்தனையிலுமே சதா நிலைத்திருக்கும்படி செய்தல்.

சிரத்தை என்பது ஆசானிடத்திலும் ஞானநூல்களிலும் பக்தியும் அன்பும் வைத்தல்.

23. படிப்பவர்களில் மூன்று வகையுண்டு.

ஒருவகை தன்னுடைய அறிவு விர்த்திக்காகப் படிப்பவர்கள்.

மற்றொன்று மேடைப் பிரசங்கத்திற்காகப் படித்தல். இதில் படித்தவனுக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. பிறர் தன்னை மதிக்கும் பொருட்டுப் படித்து பிரசங்கம் செய்தல்.

மூன்றாவது, அதிலிருக்கும் குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்காகப் படித்தல். இதில் இருக்கும் குற்றத்தை மிகைப் படுத்தியே கூறுவார்கள்.

24. இந்த உலகத்தில் உற்பத்தியாவது, உற்பத்தியானது இருத்தல், பிறகு அழிதல் என மூன்று வகையுண்டு.

25. எது உற்பத்தியாகிறதோ அது காலக் கிரமத்தில் அழிந்தே போகிறது.

26. மனம், வர்க்கு, காயம் என மூன்று விஸயங்கள் உண்டு.

27. சத்து, சித்து, ஆனந்தம் என மூன்று விஷயங்கள் உண்டு. இவைகளில்:—

சத்துஎன்பது முக்காலங்களிலும் கெடாமல்இருப்பது.

சித்து என்பது விஷயங்களின் வேறுபாடுகளை அறிவது. சுயம்பிரகாசமுடையதாய், தன் பிரகாசத்தாலேயே யாவற்றையும் பிரகாசிக்கச் செய்வதே சித்தின் இலக்கணம்.

ஆனந்தம் என்பது இஷ்டப்பட்ட வஸ்து கிடைத்து அதை அனுபவிக்கும்போது உண்டாகும் திருப்தியே ஆனந்தம் என்பது.

28. ஞானிகளின் தன்மை, நான் என்ற தற்போதமும், நான் பிர்மமாக இருக்கிறேனென்ற வாசனையும் அடியோடொழிந்து, நினைப்பு மறப்புமற்று, ஏகப்பிரம்ம சொரூபமாக நின்றுவிடுவதே. இதுவே முடிவான நிலை. இதுவே சிந்தனையற்று, நினைந்ததுமற்று, நினையாமையுமற்று, நானென்பதற்று, யாவுமற்று, தன்னந்தனியே நிற்குமிடம். இதுவே பிறப்பற்ற விடம்.

29. ஞானிகள் பிரம்மவித்து, பிரம்மவான், பிரம்மவரியான், பிரம்மவரிட்டன் என நான்கு படியா யிருக்கிறார்கள்.

முதல் பிரம்மவித்துபடியில் இருப்பவர் சில சமயம் அந்த ஞான நிலையிலிருந்து மற்ற சமயம் உலக ஞானத்தோடு

இருப்பார்கள். இருந்தாலும் இறந்தகால விஷயத்தையும் கருதமாட்டார்கள். வரப்போகும் விஷயத்தையும் சிந்தியார்கள். உலகத்தில் தாமரை இலையில் தண்ணீர் இருப்பது போல் இருப்பார்கள்.

இரண்டாவது பிரம்மவரன் படியில் இருப்பவர்கள் அதிக நேரம் ஞானநிலையில் இருப்பார்கள். தனக்கு பசிவரும் வேளையில் உணர்ச்சி வந்து, ஆகாரம் வாங்கி உண்டு, மறுபடியும் ஞானநிலைக்குப் போய்விடுவார்கள்

மூன்றுவது பிரம்மவரியான் படியிலிருப்பவர்கள். அப்படியே ஞானநிலையிலிருப்பார்கள். தனக்குப் பசிவருவதும் தெரியாது இருப்பார்கள். அந்த நேரம் தெரிந்து பக்கத்திலிருப்பவர்கள் அவர்களைத் தொந்தரவு செய்து உலக நினைவுக்குக் கொண்டுவ்ந்து உண்வு கொடுப்பார்கள். அதை உண்டபின் அவர்கள் மறுபடியும் ஞானநிலைக்குப் போய்விடுவார்கள்.

நான்காவது பிரம்மவரிட்டன் படிக்கு போனவர்கள் தன்னை முற்றிலுமே மறந்து ஞானநிலையி லிருப்பார்கள். யார் தன்னை எந்த வேளையானாலும், தொந்திரவு முதலியன செய்தாலும் அந்த நிலையைவிட்டு ஒருபோதும் மாறுமலிருப்பவர்கள். இப்பேர்ப்பட்டவ்ர்களுக்குத்தான் இறப்பில்லை, பிறப்பில்லை.

28. ஞானிகள் என்பவர்கள் பிரம்மம் அல்லது இருக்கும் ஒன்றைஉணர்ந்தவர்கள். இவர்களுக்குப் பொதுவாக பத்து குறிகளுண்டு. அவை (1) குரோதமின்மை (2) உலோபமின்மை (3) அகங்காரமின்மை (4) பஞ்ச இந்திரியங்கள் அடக்கல் (5) சமை (6) தமை (7) சனப் பிரியத்துவம். (8) கொடை (9) அபயம் (10) வைராக்கியம்.

இவைகளுக்கு எதிரிடையாக உள்ள பத்து குறிகளையுடையவர்கள் அஞ்ஞானிகள்.

இந்த பத்து குறிகளை வேறுவிதமாகச் சொல்வாருமுண்டு.

29. அஞ்ஞான பூமிகள் ஏழு என்று கூறப்பட்டுள்ளது.

பீஜசாக்கிரம்—நித்திரையினின்று விழிப்புக்கு வருமுன் மாயையோடு சம்பந்தப்பட்டிருந்த ஆத்மா, அற்ப அறிவு மாத்திரமான நிலையே பீஜசாக்கிரம் எனப்படும்.

சாக்கிரம்—மேற்கணட பீஜம்போன்ற அறிவினிடத்தில் முன்னில்லாத அக மமதைகள், சூட்சுமமாக உண்டாகும் நிலையே சாக்கிரம் எனப்படும்.

மகாசாக்கிரம்—பிறகு யான், எனது என்ற அக மம தைகள் திடமாகவும் விரிவாகவும் உதிப்பது.

சாக்கிர சோப்பனம்—சாக்கிரத்தில் தான் அறிந்தவை களையும், அறியாதவைகளையும் கொண்டு மனோராச்சியம் செய்தல்.

சோப்பனம்—சாக்கிரத்தில் அனுபவித்தவைகளையும், அனுபவியாதவைகளையும், நித்திரையில் காண்பதாகிய கனவே சொப்பனம் என்பது.

சோப்பன சாக்கிரம்—முன்பு கண்டுமறந்த சொப்ப னத்தை மறுபடி சாக்கிரத்தில் காண்பது சொப்பன சாக்கிரம் அல்லது சொப்பன நனவு.

சுழுத்தி—மேற்கண்ட ஆறு அவஸ்தைகளுமின்றி கருவி காரணங்கள் யாவும் ஒடுங்கி அஞ்ஞான இருள் மூடி யிருக்கும் நித்திராவஸ்தை.

30. ஞான பூமிகளென்று ஏழு கூறப்பட்டிருக்கின் றன. அவையாவன:—

சுபேச்சை—பிரம்ம ஞானத்தை அடைய உண்டாகும் ஆசை. நாம் மூடத்தனமாக இந்த நிலையில்லாத அழியக் கூடிய உலகத்தையும் அவைகளின் போகங்களை நம் பிறப்பு இறப்பு என்னும் பெரும் துன்பத்தில் இருக்கிறோம் என்று உணர்வுபிறந்து இனி எல்லா கருமங்களையும் நிவர்த்திசெய்து, மோக்ஷமடையவேண்டுமென்ற வைராக்கியம் கொள்ளல்.

விசாரணை—மேற்கண்டபடி வைராக்கியம் கொண்ட வன் குரு, பெரியார் இவர்களை அடைந்து சாத்திர விசாரணை செய்து அப்யசித்தல்.

தநுமானசி—சாத்திர ஆராய்ச்சியாலும், குருவின் உபதேசத்தாலும், பிரபஞ்சம் அநித்தியம் என்ற உண்மை தோன்றி மனைவி, மக்கள், பொருள் முதலியவற்றிலுள்ள ஆசையை விடல்.

சத்துவாபத்தி—மேற்சொன்ன மூன்று வழியில் அப்ய சித்து, சத்துவ வாசனையுடைய மனிதனிடத்தில் உண்மை அறிவுதித்து சத்ரூபப் பிரம்மமே தானென அறிந்து அதை யடைய அப்யசித்தல்.

அசம்சக்தி—இதற்கு விஷயசம்பந்தமின்மை என்ற பொருள். அதாவது சத்துவாபத்தியின் வலியால் பிரபஞ்ச முழுதும் அகண்ட பிரம்ம சொரூபம் என்று கண்டு அநுபவ மடைந்து எல்லா விஷயங்களின் சம்பந்தமும் உணர்வும் இல்லாமல் நீக்கிவிடல்.

பதார்த்த பாவனை — வெளியிலும் உள்ளும் எவ்வித பொருள்களின் தோற்றரவுமில்லா திருத்தல், சமாதி அப்பியாசவலியால் திருபுடி (காண்பான், காக்ஷி, காக்ஷிப் பொருள் என்பவை). யற்று இரண்டற்ற ஆனந்தநிலை யடைதல்.

துரியம்—இது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று வஸ்துக்களுக்கும் அப்பாற்பட்டது. பூரண மௌனமாய், தன்னாலும், பிறராலும் பகிர்முகப்படாமல் நிர்விகல்ப சமாதி நிலையடைவது.

இந்த ஏழுவகை பூமிகளையும் வேறுவிதமாக கூறுவாரு முண்டு.

31. அவ்ஸ்தைகளில் ஜாக்கிராவஸ்தை, சொப்பனாவஸ்தை, சுழுத்தியவஸ்தை என மூன்று பிரிவாக உள்ளன.

ஜாக்கிராவஸ்தை—இது நாம் விழித்திருக்கும்போது ஜாக்கிரதையுடனிருக்கும் நிலைமை. இது சமயத்தில், நமது ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, ஞானேந்திரியங்களால் அறியக்கூடிய விஷயங்கள் 5, கன்மேந்திரிய விஷயங்களால் செய்யும் தொழில்கள் 5, பிராணாதிவாயுக்கள் 10, அந்தக் கரணங்கள் 5, ஆக 35 தத்துவங்கள் வேலை செய்கின்றன.

சொப்பனாவஸ்தை—இது நாம் சொப்பன நிலையிலிருக்கும் போதிருக்கும் நிலையாம். இந்த சமயத்தில், ஞானேந்திரியங்கள் விஷயங்கள் 5, கன்மேந்திரிய தொழில்கள் 5, பிராணாதி வாயுக்கள் 10, அந்தக்கரணங்கள் 5, ஆக 25-ம் வேலைசெய்கின்றன.

சுழுத்தி—இதில் ஆன்மா தொழிலற்று சுகமாய் நித்திரை செய்கிறது. அப்போது ஆன்மா தன்னை மறந்து சுகத்திலிருந்தாலும் அஞ்ஞான நிலையிலிருக்கிறது. இதற்குக் கேவலநிலை என்று பெயர். இப்போது பிராணன், சித்தம் ஆக 2 தத்துவங்கள்தான் வேலை செய்கின்றன.

இதற்குமேல் துரியம், துரியாதீதம் என இரண்டு நிலைகளுண்டு. இவை மற்ற அவஸ்தைகள் போல் தினமும் அனுபவிக்கக் கூடியவையல்ல. அடிக்கடி அனுபவிக்கக் கூடியவையுமல்ல. எப்போதேனும் ஒரு சமயம் ஒருவர் அபாயகரமான காயம் படுதல், வியாதியடைதல், முதலிய காரணங்களால் மூர்ச்சையடைகிறார்கள். அப்போது அவர்களுக்கு சுரணை (உணர்ச்சி) இல்லை. அப்போது யாராவது கூப்பிட்டாலும், தட்டினாலும் எழுந்திருப்பதில்லை.

இந்த நிலைக்கு துரிய அவஸ்தை என்று பெயர். இதற்கு மேலுள்ளது துரியாதீதம் என்பது. துரியத்திற்கும் அப்பாலுள்ளது. இந்த நிலைக்கு சென்ற ஆன்மா மறுபடி திரும்பி சாக்கிரத்திற்கு வருவது அசாத்தியம்.

32. திரிபுடி என்று மூன்றுண்டு. அவை ஞாதுரு, ஞேயம், ஞானம் அல்லது காண்பான், காணப்படும் பொருள், காணும் காக்ஷி அல்லது அறிவு என்பன.

33. இவ்வுலகத்திலுள்ள மனிதர்களை நாம் சற்று பகுத்தறிவைக் கொண்டு உற்றுநோக்கினால் நமக்குச் சில விஷயங்கள் தோன்றும் ஒன்று யாருமே எப்போதும் சுகமாக இருந்ததும் கிடையாது. யாரும் எப்போதும் கஷ்டம் அனுபவித்துத் துக்கமாக இருந்ததுமில்லை. எல்லாருக்கும் சுகமும், துக்கமும் கலந்து இருக்கும். சிலருக்கு சுகமும், துக்கமும் சமமாக இருக்கிறது. சிலருக்கு சுகம் அதிகரித்தும் சிலருக்குத் துக்கம் அதிகரித்தும் இருக்கிறது. சிலர் பணக்காரனாக இருப்பதும், சிலர் தரித்திரராய் இருப்பதும், சிலர் நல்லசரீரத்துடனிருப்பதும், சிலர் வியாதியால் பிடிக்கப்பட்டவராக இருப்பதும், சிலர் குழந்தைகள் அதிகரித்துக் காப்பாற்ற வழியற்றிருப்பதும், சிலர் சகல சொத்துடனிருந்தாலும் பிள்ளைப்பேறு இல்லாதிருப்பதும் சிலர் மனம், வாக்கு, காயத்தினாலும் யாதொரு கெடுதலும் செய்யாதிருந்தாலும் அவர்களுக்கு சகலவித கஷ்டங்கள் வருவதும், சிலர் சகல அக்கிரமங்கள் செய்தாலும் சுகமாய் இருப்பதும் போன்ற அநேக விஷயங்கள் புலப்படும்.

இயற்கையாக எல்லாம் உண்டாகிறதென்றால் ஏன் இப்படி எல்லாம் நடக்கிறது என்றும், கடவுள் ஒருவர் உண்டாக்குகிறார் என்றால் பாரபட்சமற்று அன்பாயுள்ளவர் ஏன் இப்படி எல்லாம் செய்கிறார் என்றும் யோசிக்கவேண்டும். இதற்கெல்லாம் காரணம் இல்லாமலில்லை. காரணம் நாம் முற்பிறப்பில் செய்த நன்மை தீமைகளே இப்படி எல்லாம் பிரதிபலிக்கும். சுக துக்கமாக வருகின்றன. இதைத்தான் கர்மவினை என்றும், வினைப்பயன் என்றும், தலைவிதி என்றும் சொல்வது. அதாவது நாம் முற்பிறப்பில் செய்த நன்மை தீமைகளுக்கேற்ப இப்பிறப்பில் சுகதுக்கமாக வருகிறது. இந்தப்பிறவியில் நாம் செய்யும் நன்மை தீமைகளுக்கேற்ப மறுபிறப்பில் சுகதுக்கம் ஏற்படும்.

கர்மத்தை பிராரப்தகர்மம், சஞ்சிதகர்மம், ஆகாமிய் கர்மம் என மூன்றாக பிரிக்கப்பட்டிருக்கிறது. பிராரப்தம்

என்பது நாம் முற்பிறப்பில் செய்த வினைக்கு வினை அதிகமாக இருந்தால் இப்பிறப்பில் நாம் அநுபவிக்கக்கூடிய அளவு வந்த வினையே பிராரப்த கர்மம் என்பது. முற்பிறப்பில் பாக்கி இருக்கும் வினையே சஞ்சிதகர்மம் என்று சொல்வது. இப்பிறப்பில் நாம் செய்யும் வினைதான் ஆகாமியகர்மம்.

34. முன் சொன்னபடி மனிதர்களைக் கவனித்தால் சிலர் மிகவும் அறிவாளிகளாய் இருப்பதும், சிலர் அறிவிலிகளாய் இருப்பதும், சிலர் யூகிகளாய் இருப்பதும் சிலர் வாயாடிகளாயிருப்பதும் சிலர் வாதிப்பதில் சமர்த்தராயிருப்பதும் பலவிதமாக தோன்றும். இதற்கும் காரணம் உண்டு. அதாவது முற்பிறப்பில் கடைசிகாலத்தில் இருந்த அறிவோடு இப்பிறப்பு வந்திருக்கிறது; இந்த அறிவை இப்பிறப்பில் விருத்திசெய்த அளவிற்கு மறுபிறப்பில் அறிவு வரும்.

35. நமக்கு மூன்று உடல்களுண்டு என்று சொல்லப்பட்டிருக்கின்றன. அவையாவன :—ஸ்தூல சரீரம், காரண சரீரம், சூக்கும சரீரம், அல்லது மாமிச உடல், காரண உடல் அறிவு உடல் எனப்படுவன. நாம் இறந்தால் இந்த மாமிச உடல் விழுந்து அழிந்துவிடுகிறது. காரண உடலும், அறிவு உடலும், மறுபிறவிக்கு வேறு மாமிச உடலுடன் வருகிறது. முற்பிறவியில் செய்த நன்மை தீமைகள் மறுபிறவியில் சுக துக்கத்திற்கு காரணமாயிருந்ததால் அந்த கர்மம் காரணமாயிருத்தலால், அந்த கர்மம் காரண உடலென்று அழைக்கப்படுகிறது. முற்பிறவியில் கடைசியில் இருந்த அறிவுடன் மறுபிறவி வருவதால் முற்பிறவியில் இருந்த அறிவிற்கு அறிவு உடல் என்று அழைக்கப்படுகிறது.

36. விஷய ஞானத்தில் பிரயோஜனமில்லை. அதனால் உண்மையை உணரமுடியாது. அனுபோக ஞானந்தான் வேண்டும். இதனால்தான் உண்மையை உணரமுடியும்.

---

## மதங்களின் விருத்தி.

---

டார்வின் துரை நாமெல்லாம் முதலில் குரங்கிலிருந்து வந்தோமென்று சொன்னாலும் பொதுவாக மிருகப் பிறவியிலிருந்துதான் மனிதப்பிறவி வந்தது. அதாவது ஐந்தறிவுள்ள ஜீவன்களிலிருந்து ஆறறிவுடைய மனிதப்பிறவி வந்ததென்பது

எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். முதலில் உண்டான மனிதப்பிறவிகள் இப்போது இருக்கும் மனிதர்களைப்போல் அவ்வளவு அறிவில் சிறந்தவர்களாக இருக்கவில்லை. அப்போது அவர்கள் இப்போதைப்போலன்றி நாகரீகம் அற்றவர்களாயும், மூர்க்கத்தனமாகவு மிருந்தார்கள். அப்போது அவர்களுக்குக் கடவுளைப்பற்றியும், மதங்களைப் பற்றியும் ஒன்றும் தெரியாது. அவர்களுக்கு மூளை வரவர விருத்தியாக அறிவு கொஞ்சம் கொஞ்சமாக வளர ஆரம்பித்தது. அப்போது அவர்களுக்கு உலகத்திலுள்ள சில பொருள்கள் சாதாரணமாகவும், சில பொருள்கள் அசாதாரணமாகவும் தோன்றின. அப்போது அவர்களுக்கு சூரியன், சந்திரன், நெருப்பு, இடி, மழை முதலியவைகள் அசாதாரணமாகத் தோன்றின. அப்போது அவைகளை ஆச்சரியத்தோடும், மதிப்போடும் பார்த்து வணங்கினார்கள். அப்போது அவைகள் அவர்களுக்குத் தெய்வங்களாகத் தோன்றின. இந்த நிலைதான் இன்னும் ஆரியர்களுக்கு இருக்கின்றது. இன்னும் கொஞ்ச அறிவு வளர அவர்களுக்கு உலகத்தில் ஏதோ ஒருவித சக்தி இருக்கிறதென்றும் ஆதலால்தான் உலகத்தில் பலவித மாறுதல்கள் ஏற்படுகின்றன என்றும், விருத்தியாகிக்கொண்டு போகின்றனவென்றும் புலப்பட்டது. இந்த சக்தியை ஒரு சாரார் இயற்கை என்றும், மற்றொரு சாரார் அது ஒரு தனி சக்தி யென்றும் வைத்துக்கொண்டார்கள். இவர்களில் முதல்வகுப்பைச் சேர்ந்தவர்கள் நாஸ்திகர் என்றும், பிந்தின வகுப்பைச் சேர்ந்தவர்கள் சாக்தர்கள் என்றும் அழைக்கப்பட்டார்கள். அந்த இருதிறத்தாரும் அழைக்கப்பட்ட வார்த்தைகளில் வித்தியாச மிருந்தாலும், கொள்கைகளில் ஒன்றேதானென்று நன்கு விளங்கும். அவர்களுக்கு இன்னும் அறிவு வளர, அவர்கள் கடவுள் என்று ஒருவர் உண்டென்றும், அவர்தான் இவ்வளவிற்கும் காரணம் என்றும், மாறுதல்கள் அவருடைய தொழில்புரியும் சக்தி என்றும் உணர்ந்தார்கள். அப்போது கடவுள் என்பவர் வேறாகவும், உலகமும் மற்றுமுள்ள பொருள்கள் எல்லாம் வேறாகவும் தோன்றின. இதற்குத்தான் துவைதமதம் என்று சொல்லப்பட்டுளது. இந்த நிலையில்தான் இப்போது உலகத்திலிருக்கும் கிறிஸ்துவமதம், இஸ்லாமியமதம் இப்போது இருக்கும் இந்துமதம் என்று சொல்லப்படுகிறதும் இருக்கின்றன. அப்புறம் அறிவு வளர, கடவுளை வெளித்தேடி புலப்படாமல் உள் நோக்கி ஆராயும்பொழுது அவர்களுக்கு கடவுளும் நாமும் ஒன்றுதான்; மாயைதான், அஞ்ஞானம்தான் அப்படிப் பிரித்துக் காட்டுகிறது என்று உணர்ந்தார்கள். வெளி, ஆகாசமும்

கடாகாசமும்போலும், அல்லது ஒரு பெருந் தீயிலிருந்து ஒரு சிறு பொறி பறந்து சுற்றி மறுபடியும் அத்தீயில் கலப்பது போலும் என்று உணர்ந்தார்கள். இந்நிலைக்குத்தான் துவைதாத்வைதம் என்று சொல்வது. இன்னும் அறிவு வளர, இன்னும் ஆழ்ந்து உள்நோக்க அவர்களுக்கு நாம் தான் கடவுள், கடவுள் நம்மில்தானிருக்கிறார், (தத்துவம் + அசி) கடவுள் என்று தனியாக ஒருவருமில்லை என்று உணர்ந்தார்கள். இந்த நிலைக்குத்தான் அத்துவைதம் என்று சொல்லப்பட்டது. இன்னும் அவர்களுக்கு அறிவு வளர, ஞானம் உண்டாக, இன்னும் உள் நோக்கிப் பார்க்க அவர்களுக்குப் புலப்பட்டது, இருப்பது ஒன்றேதானென்றும் அஞ்ஞானத்தால்தான் எல்லாப் பொருள்களும் நாம ரூப வித்தியாசித்துத் தோன்றுகின்றன என்றும் புலப்பட்டது. ஆதலால்தான் உலகத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் வெவ்வேறு பெயர்கொண்டு அழைக்கப்படுகின்றன என்றும் புலப்பட்டது. இன்னும் அதிகமான ஞானம் வளர அப்படி இருக்கும் ஒன்று ஒரு சுடர் அல்லது ஜோதி என்றும் புலப்பட்டது. இன்னும் அதிகமாக ஞானம் விருத்தியாகி பூரண ஞானம் உண்டானால் அதுவும் எல்லாம் கடைசியில் ஒரே வெளியாகிவிடும் என்றும் உணர்ந்தார்கள். இதுதான் ஞானத்தின், அறிவின்முடிபு.

ஆகவே உலகத்திலுள்ள எல்லா மனிதர்களும் அவரவர்கள் அறிவிற்கேற்ப, உணர்ச்சிக்கேற்ப மேலே சொல்லப்பட்ட அறிவின் படிகளில் எதுபடுகிறதோ, பிடிக்கிறதோ அந்தப்படியிலிருந்து உணர்கிறார்கள்.

---

## விபூதியின் தத்துவம்.

---

இந்த சமயம் விபூதியின் தன்மையையும் மகிமையையும்பற்றி எழுதலாமென்று எழுதியிருக்கிறேன். விபூதியானது பசும் சாணத்தையும் கோமியத்தையும் ஏற்பட்ட காலத்திலும் விதத்திலுமாக மந்திரத்துடன் செய்யப்பட்ட பஸ்பம். சாதாரணமாக ஆங்கில முறையில் Phyenile, cresol முதலிய வஸ்துக்களை உபயோகப்படுத்தி அநேகவிதக் கிருமிகளைக் கொன்று, அநேகவித வியாதிகளைத் தடுத்திருக்கிறார்கள். அதுபோலவே நமது ஆன்றோர்கள் வீடுகளில் சாணத்தைக் கொண்டு மெழுகியும், கோமியத்தைப் புரோட்சித்தும் அநேக வியாதிகளைத் தடுத்துவந்தார்கள். நாமும் செய்தோம். நாமும்

செய்துவருகிறோம். ஒரு மருந்தை புடம் வைத்து சுத்தம் செய்து பஸ்பமாக்கிக்கொண்டால் அதற்குக் குணமும் சக்தியும் உண்டு. அப்படிப்பட்ட பஸ்பம் மந்திரத்துடன் செய்தால் விசேஷ சக்தி யுண்டு.

அப்படி பஸ்பமாக்கிய விபூதியை நமது திரேகத்திலிருக்கும் ஆயிரத்தெட்டு நாடிகளில் முக்கியமாக உள்ள நாடிகள் இருக்கும் பாகங்களில் அணிவதால் நாம் அநேக வியாதிகளைத் தடுத்துவருகிறோம். அப்படி அணிவதால் நாம் தெரிந்துகொள்ளுவது என்னவென்றால்:—

(1) அப்படி விபூதியாகிய நீரை நம் திரேகத்தில் அணிவதால் நாம் அநேகம் பாடுபட்டு வளர்த்துவரும் நாற்றமுடைய இந்த சரீரம் கடைசியில் ஒன்றுக்கும் உதவாத சாம்பலாய் போவதை நாம் அறியக் கிடக்கிறது. "ஈரைந்து மாதமாய் வைத்த சூளை அருமையா யிருப்பினும் அரைக்காசுக்கு உதவாது" என்னும் வாக்கியத்தைக் கவனிக்கவேண்டியது.

(2) நம் திரேகத்தில் அணிந்திருக்கும் விபூதி ஈசனானால் அதிலிருக்கும் ஓர் அணு நாம் ஆகவே நாம் ஈசன் அம்சத்தின் ஒரு பகுதி என்பதை நிரூபிக்கிறது. "சிவோகம்" என்பதைக் கவனிக்கவேண்டியது.

(3) நாம் அணிந்திருக்கும் விபூதியின் அணுக்களும் ஒவ்வொரு உயிராக இருக்க உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் நம்மைப் போன்றதுதான் என்று நாம் அறியவேண்டியிருக்கிறது.

(4) நாம் அணிந்திருக்கும் விபூதி உலகமானால் அதிலிருக்கும் ஓர் அணுவாகிய நாம் உலகத்திற்கு ஓர் திரணமாத்திரம்தான். ஆகவே நாம் பெரியவர் என்று மமதைகொள்வதைவிட்டு ஆணவம் நீங்கி மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்.

(5) விபூதியினால் நாம் மூன்று பட்டை யிடுகிறோம். அது மதத்திலுள்ள மூன்றைக் குறிக்கிறது. அதாவது:—

(a) பதி, பசு, பாசம் என்கிற மூன்று.

(b) படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் ஈசுவரன் செய்யும் முத்தொழில்.

(c) ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்கள்.

(d) காமம், குரோதம், லோபம் என்ற மூன்று குற்றங்கள்.

(e) திருபுடி, ஞானம், ஞேயம்-ஞாதுரு என்ற மூன்று.

(6) பக்தி, உபாசனம், ஞானம் என்ற மூன்று சாதனங்கள் ஒன்றின்பிறகு ஒன்ருக அடைந்து, தன்னைத் தாம் உணர்ந்து தன்னிலே, ஈசனை அறிந்து, ஈசனுடன் கலந்து ஆனந்திக்கவேண்டி யிருக்கிறது. அதுவே "தத்துவமசி", அதுவே "அகம்பிரம்மாஸ்மி", அதுவே "சிவோகம்." 'தேடித் தேடொணு தேவனை என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன்' என்பதை நாம் கவனிக்கவேண்டியது. பஞ்சாக்ஷரத்தின் நடு அக்ஷரமாகிய சிவனைக் குறிக்கிற சி என்னும் அக்ஷரம் நமது திரேகத்தில் இருதயம் இருக்கும் ஸ்தானத்தில் வைத்திருப்பதையும் கவனிக்கவேண்டியது. ஜீவாத்மாவாகிய இரஷபத்தின்மீது சிவன் வீற்றிருப்பதையும் கவனிக்கவேண்டும்.

ஈசுவரனுடன் கலந்து ஆனந்திக்க நம்முள்ளிருக்கும் ஈசனை நாம் காணவேண்டி யிருக்கிறது அதற்கு சாதனம் நம்மை நாம் உணரவேண்டியது. அதற்கு ஞானம் வேண்டும்.

அதற்கு புறப்பற்று அகப்பற்றுநீங்கி மனது ஒருநிலைப் படவேண்டி யிருக்கிறது. அப்படி மனது ஒருநிலைப்பட பயிற்சிக்க உபாசனம், பூசை, அநுஷ்டானம் வேண்டியிருக்கிறது. மனது ஒருநிலை படாத பூசையும், அநுஷ்டானமும், உபாசனமும் பயனற்றதாகும். அப்படிப்பட்ட சரியான உபாசனத்திற்கு ஆத்ம சுத்தம் வேண்டும். அதற்குமுன், ஸ்தல சுத்தமும், சரீர சுத்தமும் வேண்டும் இவைகளெல்லாம் சைவரவே நமக்கு முதலில் உள்ளன்புடைய பக்தி வேண்டும். ஆக்வே பக்தி முதல் ஒன்றின்மேல் ஒன்ருக பயிற்சித்து விருத்தி செய்து எல்லோருக்கும் ஈசுவரனுடன் கலந்து ஆனந்திக்கும் பாக்கியம் கிடைக்குமாறு ஈசுவரன் கிருபை செய்வாராக.

---

## ஆலயமும் வழிபாடும்

பொதுவாக சிவாலயமும், விஷ்ணுவாலயமும் அமைப்பில் ஒன்றுபோல் தான் இருக்கும். ஆலயங்களின் அமைப்பு முக்கியமாக நான்கு காரணத்திற்கு அமைக்கப் பட்டிருக்கிறது. முதலாவதாக நாம் எப்படி, எப்பொழுது கடவுளை அடையலாம் என்று தெரிந்து கொள்வதற்கும், இரண்டாவதாக கடவுள் நம் இருதயத்திலே இருக்கிருர் என்று தெரிந்து கொள்வதற்கும், மூன்ருவதாக எல்லா உயிர்

களிலும் கடவுள் இருக்கிறர் என்று தெரிவிப்பதற்கும், நான் காவதாக கிரமப்படி ஆலயத்திற்குப் போய் சரிவரத் தொழுது நம்இந்திரியங்களைக் கொஞ்சம்கொஞ்சமாக அடக்கப் பழகுவதற்கும் ஆலயம் அமைக்கப்பட்டிருக்கிறது.

முதல்:—நாம்கோயிலில் கடவுள்விக்ரகஉருவமாயிருக்கும் இடத்திற்குப்போகவேண்டுமானல், முதலில்கோயிலின் குளத்தில் கைகால்அலம்பி, கோபுரவாசலைத்தாண்டி,பலிபீடத்தைத் தாண்டி, துவஜஸ்தம்பத்தைத் தாண்டி, நந்தியைத் தாண்டி, மகாமண்டபமும், பிறகு அர்த்தமண்டபமும் போய், பிறகு கருப்பக்கிரகம் போய்க் கடவுளை அடைகிறோம். இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்னவென்றால்:—

கைகால் சுத்தம்செய்கிறமாதிரி நாம் இருதயம் சுத்தம் செய்து, ஆத்மசுத்தியுடன் இருந்து, மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழுஅல்லது ஒன்பதுவாசல்படியுள்ள கோபுரத்தைத் தாண்டும்மாதிரி மும்மலங்கள்,பஞ்சேந்திரியங்கள்,எழுவகைத் தோற்றம்,நவதுவாரங்களையும் அடக்கிக்கடந்து,பலிபீடத்தைத் தாண்டும்மாதிரி, நான்எனது என்னும்ஆணவத்தையும் அகங்காரத்தையும் அடக்கி, துவஜஸ்தம்பம் மாதிரி வைராக்கியத்துடனிருந்து, அகக்கரணம் புறக்கரணங்களை அடக்கி, ஸ்திரி,தனம், ஜாதியபிமானம் (முதலியவை) துக்கத்திற்கேதுவென்று வெறுத்து, காம குரோதங்களை அடக்கி, சுக துக்கங்களைச் சமமாகப் பொறுத்து, சித்தத்தை விஷயங்களில் செல்லவிடாமல்தடுத்து, கடவுளின் சிந்தனையிலே சதா நினைத்திருக்கும்படி செய்து, கடவுளிடத்தில் பூரண பக்தி வைத்து, நந்தி, சதாகடவுளையே நோக்கிக்கொண்டிருக்கிறமாதிரி, வெளி நீங்காமல் சதா கடவுளின்பேரில் ஞாபகத்தை வைத்து, சபா மண்டபம் போகும் மாதிரி அந்த ஞாபகத்தை அதிகமாக விருத்தி செய்து, அர்த்தமண்டபம் போகும் மாதிரி ஷை ஞாபகத்தை இன்னும் அதிகமாக விருத்திசெய்து, தன்னைத் தானேமறந்து, தன்சரீரத்திற்கு என்ன நேரிட்டாலும் உணர மாட்டாத அளவாய் மறந்து, கடவுளை நினைத்து இருந்தால் கருப்பக்கிரகத்தில்இருக்கும்கடவுளை அடைவதுபோல் கடவுளை உணரலாம், அடையலாம்.

இரண்டாவது:—மூன்று,ஐந்து,ஏழுவாசல்படிகள் உள்ள கோபுரம் பஞ்சப்பிரகாரம் உள்ளகோயில்மத்தியில்இருபுறமும் வழி உள்ள கருப்பக்கிரகத்தில் கடவுள் இருக்கும் மாதிரி மும்மலம், பஞ்சேந்திரியம், நவதுவாரங்கள், பஞ்சகோசம் உள்ள இந்த சரீரத்தில் மத்தியில் இருபுறமும் குழாய் வழியுள்ள இருதயத்தில் கடவுள் இருக்கிறர் என்று தெரிவிக்கிறது.

மூன்றாவது:— மூலஸ்தானத்தின் கருப்பக் கிரகத்தின் மேலிருக்கும் கோபுரத்தின் உச்சியில் இருப்பது ஒரு சுமார் ஆயிரத்தெட்டு இதழ்களையுடைய தாமரைப்பூ கவிழ்த்து வைக்கப்பட்டாற்போலும், சுமார் ஆயிரத்தெட்டு ஜீவராசிகளும் கடைசியில் ஒரு கடவுளில் முடிகிறதென்றும், அதுவும் கடைசியில் ஒன்றுமில்லாத வெளியாகி விடுகிறதென்றும் தெரிவிக்கிறது.

கர்ப்பக்கிரகத்திற்கு முதல்பிரகாரத்தில் சிவன்கோயில்களில் ஒருபக்கம் சின் முத்திரையுடனிருக்கும் தக்ஷிணாமூர்த்தி உருவமும், அடுத்தாற்போல் பராசக்தியின் உருவமும், அடுத்தாற்போல் எப்பொழுதும் தன்னை மறந்து நிஷ்டையிலிருக்கும் சண்டிகேஸ்வரர் உருவமும் இருக்கின்றன. இந்தப்பிரகாரம் சுற்றி இவைகளெல்லாம் தாண்டித்தான் கர்ப்பக்கிரகம்போய் உள்ளிருக்கும் கடவுளாகிய உருவத்தைக்கண்டு, பிறகு கர்ப்பக்கிரகம் உள்ளிருக்கும் கடவுளை அடைகிறோம். இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்னவென்றால், தக்ஷிணாமூர்த்தி சின் முத்திரைப்பக் குறிக்கும் மாதிரி முதலில் நாம் மும்மலங்களை நீக்கவேண்டும். பிறகு பராசக்தி மாதிரி சக்தியைக் கொண்டு மூலாதாரத்திலிருக்கும்நாடியை மேலே சகஸ்ராதார நாடிக்குக்கிளப்பி சண்டிகேஸ்வரர்மாதிரி தன்னை மறந்து சகச நிஷ்டைகூடினால் கடவுளைக் காணலாம். பிறகு அவருடன் இரண்டறக்கலக்கலாம். தானே அதுவாகலாம் என்று குறிக்கிறது.

தவிர முதல்பிரகாரம் ஒருவிசேஷ அமைப்பாயுள்ளது. அதன் வடமேற்கு மூலையில் ஒரு விநாயகர் கோயிலும், வடகிழக்குமூலையில் மயில் வாகனத்தின் மேலிருக்கும் ஒருதலை முருகன்கோயிலும், தென்கிழக்கு மூலையில் ஆறுமுகனென்ற சுப்பிரமணியன் கோயிலும் இருக்கின்றன. இவைகளைத் தாண்டித்தான் கர்ப்பக்கிரகம் போய் கடவுள் என்ற ஜோதி என்ற ஒன்றைக்காணவேண்டியிருக்கிறது. இவை நாம் அந்த ஜோதி அல்லது ஒன்றை அறிய, காண இருக்கும் படிகளைக் குறிக்கின்றன.

இவைகளில் விநாயகர்உருவம் கடவுள் என்பவர் எல்லா உயிருள்ள வஸ்துக்களிலும் இருக்கிறார் என்பது. ஆகையால் முதலில் அதைத் தாண்டுவது, எல்லா உயிர்களும் நம்மைப் போன்றவையே, ஆகையால், அன்பேசிவம்என்ற, எல்லா உயிருள்ள வஸ்துக்களிடத்தும் அன்பாயிருக்கவேண்டும். ஆகவே தான் திருவள்ளுவர் 'அந்தணர்என்போர் அறவோர், மற்றெவ்வுயிருக்கும் செந்தண்மை பூண்டொழுகலான்' என்று சொல்லி

யிருக்கிறார். இரண்டாவதாக முருகனை தாண்டுவதென்பது, முருகன்மயிலின்மேல்உட்கார்ந்தும்,உட்காராமலும் இருப்பது போல், மயில்என்ற மாயையை அடக்கி, உட்கார்ந்தும் உட்காராமலும் இருப்பதுபோல், உலகத்திலிருந்தும் இல்லாதது போல், பற்றற்று இருக்கவேண்டும். இதைத் தான் நிஷ்காம கருமம் என்பது. இதைத்தான், ஒவ்வொருதுறையிலும் எவ்விதம் பற்றற்று இருப்பது என்பதை விரிவாக திருவள்ளுவர் தமது திருக்குறளில் அழகாக விளக்கியிருக்கிறார். மூன்றாவதாக, ஆறுமுகன் என்கிற சுப்பிரமணியனைத் தாண்டுவதென்பது, இப்படியெல்லாம்கடந்து பூரணஞானம்அடையவேண்டும் அப்படி ஞானம் அடைந்தால்தான் ஜோதி என்ற ஒன்றைக் காணலாம், உணரலாம். பிறகு அத்துடன் இரண்டறக் கலக்கலாம் என்று உணர்த்துகிறது.

நான்காவது:—தினம்ஒருதரம் இரண்டுதரமாவது கோயிலுக்குப்போய்க் கடவுளை வணங்கவேண்டும். அப்படிவணங்குவதாவது வீட்டைவிட்டுப்புறப்படும்பொழுதே கடவுளைநினைத்து, கை கால் சுத்தி செய்து, நெற்றிக்கிட்டு, அதுமுதல் கடவுளைத் தவிர வேறொன்றையும் மனதில் வையாமல், பெருமூச்சு விடும்படி வேகமாய் நடந்தால் மனம் ஒடுங்காதாகையால், அடிமேல் அடிவைத்து மெதுவாய்நடந்து, கோயிலை அடைந்து, கோபுர வாசலைத்தாண்டி, ஐந்துபிரகாரங்களையும்கடந்துசென்று, சபா மண்டபம், அர்த்தமண்டபம்தாண்டி, கருப்பக்கிரகத்தின்முன் நின்று மனதை வேறெதிலும் செல்லவிடாமல் விக்ரகத்தையே நோக்கி நின்றால் முதலில் அந்த விக்ரகம் கண்ணில்லாவிட்டாலும் கண்ணிருப்பதுபோலவும், நம்மைப் பார்ப்பது போலவும் புன்முறுவல்செய்வதுபோலவும்நமக்குத்தோன்றும். இப்படியே சிந்தித்துநின்றால் வரவர கண்தானாகவேமூடி கடவுள் நம்முன் நிற்பதுபோலவே தோன்றும். இதில் இன்னும் சென்றால் நாம் ஒருவர் கோயிலுக்குப் போயிருக்கிறோமென்றும், தியானம் செய்துகொண்டிருக்கிறோமென்றும், நினைவில்லாமல் தன்னை மறந்துநிற்போம். அந்தசமயத்தில் நமக்குஎதிரில் ஒரே அந்தகாரமாய், இருளாய்த்தோன்றும். பின்னும் பழகினால் ஜோதி தோன்றும். பின்னும் பழகினால் ஈசனே ஆத்மசொரூபமாய்த் தோன்றும்.

முக்கியமான விஷ்ணுவாலயங்களில் வெளியிலிருந்து கடவுளிருக்கும் இடத்திற்கு பதினெட்டுப்படிகள் தாண்டிப் போகவிருக்கிறது. அதாவது நாம் நம் மூன்றுவித பஞ்சேந்திரியங்களையும், மூன்று அந்தக் கரணங்களையும் அடக்கினால்தான் கடவுளைக் காண முடியும் என்று தெரிவிக்கிறது.

இத்துடன் நாம் முக்கியமாய் செய்ய வேண்டியது ஒன்றுண்டு. அநேகமாக எல்லா கோயில்களிலும் பெரியமணி ஒன்றிருக்கும். அதை கோயிலில் பூஜை நடக்கும் போது சுற்றுப்பக்கம் இருப்பவர்களெல்லாருக்கும் கேட்கும் படியாய் அடிக்கச் செய்கிறார்கள். அந்தச் சமயத்தில் ஒலி சப்தத்தைக்கேட்ட எல்லாரும்கொஞ்சநாழிகையாவது இந்திரியங்கள் எல்லாவற்றையும் அடக்கி, மனதை ஒடுக்கி, கடவுள் பேரில் வைக்கவேண்டும். இப்படி கொஞ்சம் கொஞ்சமாய் செய்தால் நமக்கு மனது ஒடுங்கும். பழக்கம்விருத்தியடையும்.

---

## விநாயகர் தத்துவம்.

விநாயக உருவம் ஒரு அசாதாரண உருவம் ஒற்றைக் கொம்புடைய ஒரு யானைத் தலையுடன், மனித சரீரமும், நான்கு கைகளும், பூதம் மாதிரி குறுகிய கனத்த கால்களும் உடைய உருவம். பெருத்தவயிறுடன் ஒரு பெருச்சாளி அல்லது மூஷிகத்தின்மேல் வலது காலை கீழே தொங்கவிட்டு இடது காலை மேலே மடக்கிவைத்து உட்கார்ந்திருக்கிறது. அந்த உருவம் வலது ஒரு கையில் யானையை அடக்கும் ஆயுதமாகிய மழுவென்பதை வைத்துக் கொண்டிருக்கிறது. ஒரு இடது கையில் பாசக் கயிறு என்பதை வைத்திருக்கிறது. மற்றொரு வலது கையில் தன் ஒடிந்த வலது தந்தத்தை வைத்துக்கொண்டிருக்கிறது. மற்றொரு இடது கையில் அடிப்பக்கம் உருண்டையாயும் மேல்பக்கம் கோபுர மாதிரியும் உருவமுள்ள மோதகம் என்னும் இனிப்பைக் கொடுக்கும் ஒரு தின்பண்டம் இருக்கிறது. துதிக்கையில் ஒரு குடத்தில் நீர் இருக்கிறது. இந்த உருவத்தின் பூசைக்குச் சிறப்பாக உபயோகப்படுத்துவது அறுகம்புல்.

அறுகம்புல் பூசைக்கு உபயோகப் படுத்தப்பட்டு பெருச்சாளி வாகனத்தின்மேல் மோதகத்துடனும், யானைத் தலையுடனும் மனித சரீரத்துடனும் இருக்கும் உருவம் ஓரறிவு முதல் ஆறு அறிவுள்ள ஜீவன்களிலும் கடவுள் இருக்கிறார் என்று உணர்த்துகிறது. அவர் கையில் இருக்கும் தின்பண்டம் உருவத்திலும் சேராமல் உருவம் இல்லாததிலும் சேராமல் இருப்பதைப்போல் கடவுள் உருவமுடையவரென்றும் உருவாருபமுடையவரென்றும் அருவமுடையவரென்றும் ஏற்படுகிறது. ஒற்றைத் தந்தத்தை உடைய யானை ஆண் என்றும், பெண் என்றும், இரண்டும் இல்லாதது என்றும் சொல்லப்படுவதுபோல் கடவுள் ஆண் என்றும் பெண் என்றும்

இரண்டும் இல்லாத அலி என்றும் இதுகளில் ஒன்றும் இல்லாதவர் என்றும் ஏற்படுகிறது. விலங்கின் தலையும், மனித உடலும், தேவர் கையும் பூதக் கால்களுடைய உருவத்திலிருந்து கடவுள் தேவர், மக்கள், நரகர், விலங்கு முதலிய எல்லா ஜீவன்களிலும் இருக்கிறார் என்று உணரவிருக்கிறது. அவர் முகத்தில் ஒடிந்த கொம்பிலிருந்து புறப்பட்டு நேரே நெற்றிக்குப் போய் பிறகு நெற்றிக்கு வலப்புறமாக வந்து, முழுதாயுள்ள தந்தத்தின் வழியே வந்து துதிக்கையில் போய் முடிந்தால் நமக்கு உண்டாகிறது ஓ என்னும் எழுத்து. இது ஓங்காரத்தைக் குறிக்கிறது. ஆகவே இந்த உருவம் ஓங்கார உருவம் என்று சொல்லப்படுகிறது. ஓம் என்பது அ, உ, ம் என்ற மூன்று எழுத்துக்கள் சேர்ந்தது. இக்கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைச் செய்கிறார் என்று உணர்த்துகிறது. பெருத்த வயிறு உலகங்கள் எல்லாம் தன்னுள் அடக்கம் என்று உணர்த்துகிறது. சாதாரணமாகவே உட்கார்ந்திருக்கும் எல்லா தெய்வ உருவத்திலும் வலது காலை தொங்கவிட்டு இடது காலை மேலே தூக்கி இருப்பதுபோல் இதிலும் இருக்கிறது. தொங்கவிட்ட கால் தற்கால முடிவு வந்தபோது அந்த சீவனுக்கு அதனதன் கன்மத்திற்கு ஏற்றவாறு மறுசென்மம் கொடுத்து பூமியில் மறுபடியும் விடுவதைக் காட்டுகிறது. இடது காலை மேலே தூக்கி இருப்பது நற்கருமத்தினால் பக்குவம் வந்த சீவன்களுக்கு முத்தியை கடவுள் கொடுக்கிறார் என்று உணர்த்துகிறது. அப்படித் தன்னிடம் முக்திக்கு வந்த சீவன்களுக்கு இடது கையிலிருக்கும் தித்திப்பான மோதகம்போல் இனிப்பான ஆனந்தத்தைக் கொடுக்கிறார்.

இதற்கெல்லாம் வழி என்னவென்றால்:—யானை மும்மலங்களுள்ள பிராணி, தலையிலிருக்கும் மதம் தவிர இரண்டு தாடைகளிலும் மதம் ஒழுகும் பிராணி, அதைப்போல் நாம் நம்முடைய மும்மலங்களையும் நீக்கவேண்டும். அவர் இடது கையில் பாசக் கயிறும், வலது கையில் அங்குசமும் இருக்கின்றன. மதங்கொண்ட யானையைப் பாசக்கயிற்றினால் கட்டி அங்குசத்தால் குத்தி அடக்குவதுபோல் நாம் நம் மத யானையாகிய ஆணவத்தை, கர்வத்தை அடக்கவேண்டும். துதிக்கையில் தண்ணீர் குடம் வைத்திருப்பது நாம் கடவுளை பூசை செய்து பக்தி பண்ணவேண்டும் என்று உணர்த்துகிறது. வலது மற்றொரு கையில் இருப்பது கெட்டியான கூர்மையான ஆயுதம். அது எதிரியைக் கொல்லும் ஆயுதம். அதாவது அஞ்ஞானத்தைக் கொன்று ஞானத்தை அடையவேண்டும்

என்று குறிக்கிறது. இப்படி மலங்களையும் ஆணவத்தையும் அடக்கி பக்தி செய்தால் ஞானம் உண்டாகும். அப்படி ஞானம் உண்டானால் முக்தி பெறலாம்.

விநாயகர் சித்தி, புத்தி என்ற இருமனைவிகளை மணக்காமல் மணந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு மனைவிகளே சித்தம், புத்தி என்று சொல்லப்பட்ட விஷயங்கள் நல்ல சித்தத்துடனும், சரியான புத்தியுடனுமிருந்தால் ஞானம் உண்டாகும் என்பது பொருள்.

விநாயகர் = வி + நாயகன் என்றால், தனக்கு மேல் பெரியவன் இல்லாதவன் என்று பொருள்.

---

## நடராசர் தத்துவம்.

நடராசர் உருவத்தைக் கவனித்தால் ஒரே வளைவுள்ள திருவாட்சிக்குள் முழந்தாளிட்டிருக்கும் ஒரு மனிதன் மேல் நடராசர், வலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கி நடனம் செய்கிறபடி இருக்கும். அவருக்கு நான்கு கைகள். ஒரு கை தமருகம் என்ற உடுக்கையை ஆட்டிக்கொண்டிருக்கும் மாதிரியும் மற்றொரு வலது கை தூக்கி உள்ளங்கை முன்புறமாகக் காட்டி அமர்த்தும் மாதிரியுமிருக்கும். ஒரு இடது கை நெருப்பை வைத்துக்கொண்டும் மற்றொரு இடதுகை தூக்கின இடது காலைக் காட்டிக் கொண்டும் இருக்கும். இருண்ட தலை மயிர் தூக்கி உச்சியில் முடி போட்டும் அதில் ஒரு பெண்ணும் மூன்றாம் பிறைச் சந்திரனும், இருபுறங்களிலும் முச்சடைகளுமிருக்கின்றன. சாதாரணமாக இருக்கும் இரண்டு கண்களுடன் நெற்றியில் மூன்றாவது கண்ணுமுண்டு. புன் சிரிப்புள்ளவாயுண்டு. நெஞ்சு தவிர மற்ற பாகங்களில் சர்ப்ப ஆபரணமுண்டு. தொண்டை, விஷம் உண்டு அங்கேயே தங்கப்பட்டு நீலகண்டமாக இருக்கிறது. அரையில் புலித்தோலுண்டு. மேற்படி வளைவுகளில் முடிச்சுகள் உண்டு.

உடுக்கையை அசைத்து அடிப்பதனால் கடவுள் எல்லாப் பொருள்களையும் படைக்கிறார் என்றும், அமர்த்திக் காட்டிய கையால், படைத்த பொருள்களை காப்பாற்றுகிறார் என்றும், ஒரு கையில் இருக்கும் அக்கினியால் தற்கால முடிவின்போது மேற்படி பொருள்களை அழிக்கிறார் என்றும், ஊன்றிய பாதத்தால் மேற்படி அழிக்கப்பட்ட பொருள்களை அதனதன் கர்மத்திற்கும், செய்கைக்கேற்றவாறும் மாற்றி அமைக்கிறார் என்றும், எடுத்தாடிய பாதத்தால் கர்மம்தீர்ந்து

முடிவு காலம் வந்தபோது மறுபிறப்பில்லா அருளைக்கொடுக்கிறார் என்றும் அதை நிச்சயித்து உணர்த்துவதற்கு அந்தப் பக்கம் நீட்டி யிருக்கும் நான்காவது கையால் காட்டுகிறார் என்றும், அப்படி தன் ஐந்து தொழில்களையும் இடைவிடாது செய்கிறார் என்ற மாதிரி எப்பொழுதும் நடனம் செய்து கொண்டிருப்பது உணர்த்துகிறது.

முழந்தாளிட்டு வலதுகாலின் கீழிருக்கும் மனிதன் 'முயலகன்,' என்று சொல்லப்படுகிறான். மும்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்பவைகளைக் குறிக்கின்றான். அவனது நிமிர்ந்து தூக்கிய தலை ஆணவத்தைக் குறிக்கின்றது. வளைந்த உடல் கன்மத்தைக் குறிக்கிறது. வளைந்து மேல் தூக்கிய கால்கள் மாயையைக் குறிக்கின்றன. மிதித்திருக்கிற மாதிரி நமது மலங்களை நீக்கி நமக்கு அவர் உதவி செய்கிறார்.

அவர் தலையின் உச்சியில் முடிபோடப்பட்ட கருங் கூந்தலானது உலகத்திலுள்ள இருண்ட மாயையைக் குறிக்கின்றது. உலகத்திலுள்ள மாயா சம்பந்தமான பொருள்கள் அந்தக் கூந்தலில் இருக்கின்றன. முதலாவது நம்மை உலகில் பந்தப்படுத்துபவை பெண்ணும் பொருளுமாம். பெண்ணை அம்முடியிலிருக்கும் பெண், மூன்றாம் பிறையின்குணம் பருவம் வரைக்கும் வளர்வதும் பிறகு 15 நாள் தேய்வதுமாம். அது போலவே பொருள் எப்பொழுதும் யாரிடத்தும் நிலைத்திருப்பதில்லை. ஒரு காலத்தில் வளர்வதும் பிறகு குறைவதுமே. ஒருபுறமுள்ள முச்சடை காமம், குரோதம், உலோபம் என்ற முக்குற்றங்களையும், மற்றொரு புறமுள்ள முச்சடை ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் குறிக்கின்றன. இவைகளில் நாம் சம்பந்தப்பட்டிருக்கும் வரையில் நம்மை அஞ்ஞானம் என்னும் இருள் சூழ்ந்து கொண்டிருக்கிறதென்றும், நாம் அந்த இருளினின்றும் நீங்கினால்தான் நமக்கு ஞானமாகிய ஒளிஉண்டாகுமென்றும் மேற்கூறியகுறிகள் உணர்த்துகின்றன.

அவருக்குள்ள சாதாரண கண்கள் இரண்டும் இச்சை, கிரியை என்ற இரண்டுசத்திகளையும், நெற்றிக்கண் ஞானசத்தியையும் குறிக்கின்றன. சாதாரண இரண்டு கண்களையும் மூடி நெற்றிக்கண்ணைத் "திறப்பதுபோல் உயிர்கள் இச்சையையும் கிரியையும் அடக்கி ஞானத்தை எழுப்பவேண்டும்."

புன்முறுவலுடன் உள்ள உதடுகள் உண்மையாய்த் தன்னை நாடிவருகிறஅன்பர்களை அன்புடன்வரவேற்று அருள் புரிகிறார் என்பதை உணர்த்துகின்றன.

அவர் உண்ட விஷமும் தொண்டையில்நின்றுவிட்டது. மற்றும்விஷமுள்ளசர்ப்பங்களை அவர்ஆபரணமாக அணிந்தும் அவையெல்லாம் மார்பைச் சுற்றி நின்று விடுகின்றனவே தவிர ஒன்ருவது மார்பினிடம் செல்லவில்லை. அதைப்போல கடவுளை அடையவிரும்புகிறவர்கள் விஷம்போலுள்ள விஷயங்களை மனதினுங்கூட நினையாமல் தூய்மையான மனதுடன், இருதயத்துடன் இருக்கவேண்டும்என்று உணர்த்துகிறது. குரூரமான புலித்தோலைஅரையில் அணிந்திருப்பதும் அத்தோல் அதற்கு மேல் போகாமலிருப்பதும் குரூரத்தையும் அப்படியே நீக்க வேண்டும் என்று உணர்த்துகிறது.

ஒரேவளைவுள்ள திருவாட்சி 'ஓ'என்னும்ஓங்காரத்தைக் குறிக்கிறது ஆகவே இவ்வளவும் ஓங்காரத்தில் அடங்கி இருப்பதைக் குறிக்கிறது. திருவாட்சியிலுள்ள முடிச்சுகள் ஓவிலிருந்து மற்ற எழுத்துக்கள் உண்டாயின என்பதைக் குறிக்கின்றன.

நடராச உருவத்தில் சிலவற்றில், மேல் இடது கையில் துள்ளி ஓடும் மானின் பின்காலைப் பிடித்திருப்பதாகவும், மேல் வலதுகையில் மழுவைத்திருப்பதாகவும் இருக்கும். துள்ளி ஓடும் மானைப் பிடித்திருப்பது, ஓரிடத்தில் இல்லாமல் எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் மனதை அடக்க வேண்டுமென்றும், மழுவை வைத்திருப்பது மதயானை போன்ற ஆணவத்தை அடக்கவேண்டுமென்றும் குறிக்கின்றன.

---

## விஷ்ணுவின் தத்துவம்.

சிவன் ஞான தெய்வமென்றும், விஷ்ணு உலகமார்க்க தெய்வமென்றும் பெயர். சிவன் பரிசுத்தமான தூயவெண்மையான நீற்றைத் தரித்துக்கொண்டுள்ளார். காம் மலங்களையும் மற்றுமுள்ள உலகப்பற்றுகளையும் அழித்தால்தான் ஞானமுண்டாவதுபோல் சரீரத்தை எரிக்கும் இடமாகிய சுடுகாடும் உருத்திரனுக்கு(சிவனுக்கு)இருப்பிடமாகக் காட்டப்பட்டிருக்கிறது. உலகமார்க்கத்திலுள்ளவர்களுக்கு, உலகக்கட்டில் உள்ளவர்களுக்கு, மாயா சம்பந்த இருள் சம்பந்தப்பட்டவர்களுக்கு அவர்கள் தன்மையைப்போல் இருண்ட, கருத்த, நீலமேகம் போன்ற நிறமாக விஷ்ணுவின் உருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. உலக சம்பந்தமுள்ளவர்களுக்கு ஆசை அதிகமாக இருப்பதுபோல், விஷ்ணுவிற்கு பொன்னுசை பூமியாசையைப்

போல் (பொன்) இலக்குமிஎன்றும் பூமிஎன்றும் அல்லது இலக்குமிதேவி, பூதேவி என்றும் இரண்டு மனைவிகள் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். விஷ்ணுவும், தொழில்செய்யும், அதாவது நிற்கும் விஷ்ணுஎன்றும், நித்திரைசெய்யும்விஷ்ணு அதாவது சேஷசயன விஷ்ணு என்றும் இருதிறப்படும்.

விஷ்ணுவின் இடதுகையில் பாஞ்சசன்னியம் என்னும் சங்காயுதமிருக்கிறது. இது விஷ்ணு தன் ஐந்தொழில்களைச் செய்கிறாரென்பதைக் குறிக்கிறது. ஐந்தொழில்களாவன :— உற்பத்திசெய்தல், உற்பத்தி செய்தவற்றைக் காத்தல், காலம் வந்தபோது அவைகளை அழித்தல், அழித்தவற்றைக் குற்றத்திற்கேற்ப, கர்மத்திற்கேற்ப மாற்றியமைத்தல், பக்குவம்வந்த போது முக்தியைக்கொடுத்து அருள்செய்தல் என்பன. வலது கையில் சதா சுற்றிக்கொண்டேயிருக்கும் வளையம்போன்ற சக்கரமிருக்கிறது. அதாவது அமைப்பில் எதுவும் ஒரேநிலையாக இருக்காது, ஒவ்வொன்றும் மேலும் கீழுமாகவும், முன்னும் பின்னுமாகவும் சதா வந்து கொண்டே இருக்குமென்றும் உணர்த்துகிறது. அவரது மற்றொருகையில் கதையிருக்கிறது. அதுதன்னை உண்மையாக நாடி வந்தவர்களுக்கு அவர்கள் மலங்களை, மாயையை, அடித்துத்துரத்துகிறாரென்று குறிக்கிறது. மற்றொரு இடது கையில் தாமரை மலர் இருக்கிறது. சுமார் 1008 இதழ்களின் ஆதரவு ஒரே காம்புபோல் சுமார் 1008 வகை ஜீவ ராசிகளும் தன் ஒருவனையே கடைசியாய் அடைகின்றன என்னும் குறிக்கிறது.

படுத்திருக்கும் விஷ்ணு பாற்கடலில் மூன்று சுற்றுச் சுற்றிக்கொண்டிருக்கும் ஆதிசேஷன் என்னும் பாம்பாகிய படுக்கையின்மேல் படுத்திருக்கிறார். இலக்குமியும், பூமியும் கால்பக்கம் சும்மா உட்கார்ந்திருக்கிறார்கள் நான்கு தலையுள்ள பிரமன் அவரது தொப்புளின் மேலுள்ள தாமரை மலரில் அமர்ந்திருக்கிறார். ஒருவன் யோக நித்திரை செய்ய வேண்டுமானால் அவன் பொன்மேலும், பூமிமேலுமுள்ள ஆசையை நீக்கவேண்டும். அதுபோல இலக்குமியும், பூமிதேவியும் நீக்கப்பட்டு கால் பக்கம் உட்கார்ந்திருக்கிறார்கள். ஐந்துவகையான ஐந்து இந்திரியங்களையும் அடக்க வேண்டும். அதுபோல் அவர் ஐந்து தலைகளை உடைய பாம்பின்மேல் படுத்திருக்கிறார். முப்பாழையும், மூன்றுஉலகங்களையும், மூன்று சரீரங்களையும் கடக்க வேண்டுமென்று அந்தப் பாம்பு மூன்று சுற்று சுற்றிக்கொண்டிருக்கிறது. அப்படி உலகப்பற்று நீங்கி யோக நித்திரை செய்வதுபோல் வெட்டவெளியாகிய பரந்த




படுத்திருக்கும் விஷ்ணு

பரிசுத்தமான பாற்கடலில் அவர் நித்திரை செய்கிறார். அப்படிப்பட்டவர்களுக்கு இறப்புமில்லை பிறப்புமில்லை என்பது போல் படைப்புக் கர்த்தாவாகப் பாவிக்கப்படும் பிரம்மா அவர் தொப்புளில் வந்து தங்கிவிட்டான். உற்பத்தி நான்குவிதம்:— அதாவது அழுக்கிலிருந்தும், விதையிலிருந்தும், முட்டையிலிருந்தும், கருப்பப்பை, யோனியிலிருந்துமாகும். அதுபோல் பிரம்மாவுக்கு நான்கு தலைகள் உண்டு. சகலஉயிருள்ள வஸ்துக்களையும் பிரம்மா படைக்கிறார் என்பதுபோல் அவன் 1008வகை ஜீவராசிகளைக்குறிக்கும் தாமரைமலரில் இருக்கிறான். அந்தத் தாமரை விஷ்ணுவின் தொப்புளிலிருந்து கிளம்பி யிருப்பது போல் ஜீவராசிகளெல்லாம் கடைசியில் விஷ்ணுவில் போய் ஒடுங்குகின்றன.

விஷ்ணுவிற்கு அறிகுறி நாமம். இது இரண்டுவெள்ளைக் கோடுகளும் அவற்றின் மத்தியில்ஒரு சிவப்பு அல்லது மஞ்சள் கோடும்கொண்டது. வெள்ளைக்கோடுகள் ஒருவித வெள்ளை மண்ணாலும், சிவப்பு அல்லது மஞ்சள்கோடு மஞ்சள்பொடியாலும்இடப்படுகின்றன. இரண்டு வெள்ளைக்கோடுகளும் பரிசுத்தமான பரமாத்மா, ஜீவாத்மா என்பன இரண்டையும் குறிக்கின்றன. அந்த இரண்டுகோடுகளும் ஒரேவித வெள்ளை மண்ணால்போடுவதுபோல்இரண்டுஆத்மாக்களும்ஒன்றேயென்றும், இரண்டு வெள்ளைக்கோடுகளையும் பிரித்துக்காட்டுவது மத்தியிலிருக்கும் மஞ்சள் கோடுபோல மயையே இரண்டாத்மாக்களையும் பிரித்துக்காட்டுகிறதென்றும் கிடைக்கின்றது. (குறிப்பு:— யாராவது இறந்துவிட்டால் அதுசமயம் சிவப்புகோடு நீக்கி இரண்டுவெள்ளைக்கோடுள்ள நாமத்தைமட்டும் போடுவார்கள். அதாவது மாயைநீங்கி அந்த ஜீவன் அதாவது ஜீவாத்மா பரமாத்மாவை அடைந்துவிட்டது என்பதைக்காட்ட).

நாமம்இருவகைப்படும். தென்கலை அல்லது பாதம்உள்ள நாமம். வடகலை அல்லது மொட்டை நாமம். இவைகளில் தென்கலையாருக்குத் தோத்திரமெல்லாம் தென்மொழியாகிய தமிழிலே. வடகலையாருக்குத் தோத்திரமெல்லாம் வடமொழியாகிய சமஸ்கிரதத்திலே. இதிலிருந்தே அவர்களின் வித்தியாசம் தெரிந்து கொள்ளலாம். தென்கலையார் எல்லாம் தமிழர்கள். வடகலையரெல்லாம் ஆரியர்கள். ஆகையினால் இவர்களுக்குள் ஒருவருக்கொருவர் சம்பந்தம் கிடையாது. ஆகையினால்தான் இவர்களுக்குள் என்றும் தீராதசண்டை. ஆதியில் விஷ்ணுகோயில்கள் எல்லாம் தென்கலையாரிடந்தானிருந்தன. ஆரியர்களுக்குச் சக்தியும் அதிகாரமும் ஏறஏற ஒவ்வொன்றையும் தென்கலையாரிடமிருந்து கைப்பற்றி வருகிறார்கள்.

எல்லாம் போனாலும் நாளதுவரை மாறாதிருப்பது ஒன்றே. அதாவது பெருமாளை, விஷ்ணுவைத்தொட்டு பூசிப்பது அதாவது அர்ச்சகர் பதவிமட்டும் இன்றும் தென்கலையார்கள் வசமாகவே யிருக்கின்றது.

---

## இலிங்கம்.



இலிங்கம், உருவம் உள்ளது என்றும் சொல்லலாம். உருவம் இல்லாதது என்றும் சொல்லலாம். இதை உருவருவம் என்றும் சொல்லலாம். அதுபோலவே கடவுள் உருவமாக நாடுகிறவர்களுக்கு உருவியாகவும், உருவருவமாக நாடுகிறவர்களுக்கு உருவருவியாகவும், அருவமாக நாடுகிறவர்களுக்கு அருவியாகவும் தோன்றுவார்.

உலகில் உயிருள்ள ஜீவன்கள் எல்லாம் சுக்கிலம் சுரோணிதம் என்பவைகளின் சேர்க்கையால் உண்டாகின்றன என்று தெரிகிறது.

உயிருள்ள ஜந்துக்கள் முதல்முதலில் எடுக்கும் உருவம் இதுவே. வேண்டுமானால் பூவிலிருந்து பிஞ்சு உண்டாவதற்கு முன் இதே உருவத்துடனிருப்பதைக் கவனித்துப் பார்க்கலாம்.

இலிங்க உருவத்தைக் கவனித்தால், கவிழ்ந்த மரக்கால் மாதிரியும் அதன் கீழ் கோமுகம் ஒன்றும் அதன்கீழ் உடுக்கு மாதிரி பீடமும் இருக்கும். மேல்பாகம் அ என்ற எழுத்தின் பகுதியும், மத்தியபாகம் உ என்ற எழுத்தின் பகுதியும், கீழ்ப்பாகம் ம அல்லது ய என்ற எழுத்தைப் போலவுமிருக்கும். அதாவது அ உ ம் அல்லது அ உ ய என்பதை அவ்வுருவம் குறிக்கிறது. தவிர அ உ ம் என்றது கடவுள் முத்தொழில் புரிகின்றார் என்பதையும், அ உ ய என்பது கடவுளும் உயிரும் உடலின் மேலிருக்கிறார்கள் என்பதையும் குறிக்கிறது. அதாவது ஓங்கார சொரூபத்தைக் குறிக்கிறது.

பதியைக் குறிக்கும் எழுத்தாகிய அ என்ற உருவமே இலிங்கம். வடலூரில் இராமலிங்க சுவாமிகள் எட்டுபக்கம் உள்ள ஒரு கட்டிடத்தின் மத்தியில் ஒரு தீபத்தை ஜோதியை வைத்து அதை ஆறுதிரைகளால் மறைத்து வைத்திருக்கிறார். ஒரு விசேஷ தினத்தில் அந்த ஆறு திரைகளையும் நீக்கி உள்ளிருக்கும் தீபம் ஜனங்களால் தரிசிக்கப்படுகின்றது. இத்ன்

பொருள் என்னவென்றால் எட்டு அங்கங்களுடைய நம் சரீரத்தின் உள்ளே ஜோதியாகிய கடவுள் இருக்கிறார். அதை ஆறு திரைகள் மறைத்திருக்கின்றன. அந்த ஆறு திரைகளும் நீங்கினால் நமக்குக் கடவுள் தரிசனம் கிடைக்கும் என்பது. மயிர், தோல், எலும்பு, தசை, நரம்பு, இரத்தம், பிராணவாயு, அபானவாயு ஆகிய எட்டு வஸ்துக்களால் உண்டான இச்சரீரம் அல்லது இரண்டு கால்கள், இரண்டு கைகள், மார்பு, நெற்றி, இரண்டு கண்கள் ஆகிய எட்டு அவயவங்கள் அடங்கிய இச்சரீரத்தின் மத்தியாகிய இருதயத்தில் கடவுள் இருக்கிறார். அதை தரிசிக்க ஆறுதிரைகளை நீக்கவேண்டியிருப்பதுபோல் நாம் (1) இயமம் அல்லது புறப்பற்று நீக்கி (2) நியமம் அல்லது மனதை ஒடுக்கி (3) ஆசனம் அல்லது விதிப்படி ஆசனத்திலிருந்து (4) பிராணாயாமம் செய்து அல்லது சுவாசத்தை ஒடுக்கி (5) பிரத்தியாகாரம் அல்லது இந்திரியங்களை அடக்கி (6) தாரணை அல்லது மனதை ஒரு நிலையில் நிறுத்தினால் நமக்கு ஆத்ம தரிசனம் அல்லது கடவுள் தரிசனம் கிடைக்கும்.

ஒவ்வொரு கோவில்களிலும் வருஷத்திற்கு ஒரு தரம் பிரம்ம உத்ஸவம் என்று பத்து தினங்களுக்கு நடைபெறுகிறது. அதில் பிரதி தினமும் காலையிலும் மாலையிலும் ஒவ்வொருவித வாகனத்தில் கடவுளின் உருவத்தைவைத்து வீதி சுற்றி வரச் செய்யப்படுகிறது. அதாவது ஒவ்வொரு வாகன ரூபமாக இருக்கும் வஸ்துக்களிலும் கடவுள் இருக்கிறார் என்று காட்டுவதற்கும், வீதிவருவது ஜனங்கள் எல்லாருக்கும் அதை உணர்த்துவதற்குமாகும். அவைகளில் இரத உத்ஸவம் என்பது முக்கியமாக வைக்கப்பட்டிருக்கிறது. அதாவது, இரதம் நம் சரீரத்தைக் குறிக்கிறது. இரதம், நம் சரீரம் பல தத்துவங்களுடன் அமைக்கப்பட்டிருப்பதுபோல், அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, நம் சரீரத்தில் கடவுள் இருக்கிறார் என்பதை உணர்த்த, சிவாலயங்களில் இடப வாகனமும் வைணவ ஆலயங்களில் கருடவாகனமும் முக்கியமாகக் கருதப்பட்டிருக்கின்றன. அவைகள் பசுவில் பதி அடக்கம் என்று உணர்த்துகின்றன.

---

## சுப்பிரமணியர் தத்துவம்.

சுப்பிரமணியர் உருவம் ஒரு புன் சிரிப்புள்ள முகத்துடன், இனிமையான, சிவந்த அதாவது சூரியன் புறப்படும்

அல்லது மேற்குத் திசையில் முடியும்போது இருக்கும் நிற முடன், ஒரு மயில்வாகனத்தின்மேல், ஆறு தலைகளுடன், பன்னிரெண்டு கைகளுடன், அவைகளில் ஒரு கையில் சேவல் பொறித்த கொடியைப் பிடித்துக்கொண்டு, ஒரு கையில் வேல் என்ற ஆயுதத்துடன், இரண்டு மனைவிகளுடன் இருக்கிறது. ஒரு மனைவி சூரியன் உதயமாகும்போது மலரும் தாமரை மலரை வைத்திருக்கிறாள். மற்றொருத்தி சூரியன் மேற்குத் திசைக்குச் செல்லும்போது மலரும் கருங்குவளை மலரை வைத்திருக்கிறாள்.

இது நமக்கு என்றும் நிலைத்த ஆனந்தத்தைக் கொடுக்கும் ஞானத்தை உருவமாக அமைக்கப் பட்டிருக்கிறது. அந்த ஞானம் ஆனந்தத்தை கொடுக்கிறது என்பதைப் புன்முறுவல் உள்ள முகம் குறிக்கிறது. புறப்படும் சூரியனின் தோற்றமும், மறையும் சூரியனின் தோற்றமும் நமக்கு எவ்வளவு இனிமையைக் கொடுக்கிறதோ அவ்வளவு இனிமையை அவர் கொடுக்கிறார் என்பதை அவருடைய நிறம் குறிக்கிறது. தவிர, இந்த வேளைகள்தான் நமதுசாந்தத்திற்கும், மனம்தியானிப்பதற்கும் பொருத்தமாயிருக்கிறது ஆகவேதான் அந்த வேளைகளில் தியானம் அல்லது அநுட்டானம் செய்யவேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நமது ஞானத்திற்கு முக்கியமாகத் தடையாயிருப்பது நம் மும்மலங்களாகிய ஆணவம், மாயை, கன்மம். இவைகளை நாம் ஞானத்தால் நசிக்கச்செய்தல்வேண்டும் என்பதை உணர்த்த கந்தசஷ்டி என்ற உற்சவம் கொண்டாடுகிறார்கள். அதாவது அன்று சுப்பிரமணியர், யானைமுகாசுரன், சிங்கமுகாசுரன், சூரபதுமன் என்ற மூன்று அரக்கர்களைத் தன் கையிலிருக்கும் வேலாயுதத்தாற் கொன்று, மயிலின்மேல் ஏறி உட்கார்ந்து சேவல் பொறித்த கொடியைப் பிடித்ததாகக் கொண்டாடப்படுகிறது. அம்மூன்று அரக்கர்களே, ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்கள். அந்த அரக்கர்களைக் கொல்லும் வேலே ஞானம் என்னும் ஆயுதம். எல்லாருடைய மனதையும் இலேசாகக் கவரக்கூடிய நிறத்தையுடைய மயிலே மாயை. அதைவென்று அடக்குவதே அதைக் கீழே இருக்கச் செய்து மேலே அமருதல். சேவல் ஒரு கர்வமுள்ள, என்றும் தலை நிமிர்ந்த பட்சி. ஆணவத்தை அடக்குவதுபோல் அந்த உருவத்தைப் பொறித்த கொடியை கையில் பிடித்துவிட்டார். அவருக்கு இருக்கும் இருமனைவிகளும், இச்சை, கிரியை என்பவைகளைக்குறிக்கின்றன. சூரியன் புறப்படும்போதும், முடியும் போதும்தான் நமக்கு அதிகமாக

இச்சைகளும் கிரியைகளும் உண்டாகின்றன. இதை அவர்கள் கையிலிருக்கும் அந்தந்த வேளைகளில் மலரும் பூக்கள் குறிக்கின்றன. ஆனல் அந்த இரண்டையும் நீக்க வேண்டுமென்பதை உணர்த்தவே அவர் தன் இரண்டு மனைவிகளையும் சற்று விலக்கியே வைத்திருக்கிருர்.

அவரது ஆறுதலைகளும் நமது முக்கியமான ஆறு நாடிகளைக் குறிக்கின்றன அவையே ஆறு ஆதாரம் என்றும், ஆறு எழுத்துக்கள் என்றும், ஷடாச்சரம் என்றும் சொல்லப்பட்டவை. அவரது பன்னிரெண்டு கைகளும் அவைகளுக்கு அடுத்த முக்கியமான பன்னிரெண்டு நாடிகள். இவைகளைக் குறிக்கவே நாம் நமது உடலில் அந்த பதினெட்டு நாடிகள் இருக்கும் பதினெட்டு இடங்களில் விபூதிப்பட்டை இடுகிறேம். இந்த பதினெட்டு நாடிகளை, முறுக்கி இருக்கும் நாடிகளைத் தளர்த்தி நிமிரச் செய்தால்தான் நமக்கு ஞானம் உண்டாகும் என்று உணர்த்த அவருக்கு ஆறுதலைகளும் பன்னிரெண்டு கைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அப்படி ஞானம் உண்டானல் நாம் அஞ்ஞானத்தைப் போக்கலாம். தவிர ஆறுவித சமயங்களும் (பிறகு உண்டான கிறிஸ்துவ, இஸ்லாமிய, பிரம்ம சமாஜம் முதலிய மதங்கள் நீங்கலாக) அந்த ஒருஞானத்தில் முடிகிறதென்று உணர்த்தவும் அவருக்கு ஆறுதலைகள் உண்டு.

அவர் மயிலின்மேல் பட்டும் படாமலுமாக இருக்கிருர். நாம் இந்த அஞ்ஞான உலகத்திலிருப்பது தாமரையின்மேல் இருக்கும் தண்ணீர்போல் பட்டும்படாமலுமிருக்கவேண்டும். அப்போதுதான் இலேசில் அஞ்ஞானத்தை நீக்கமுடியும். அல்லாமல் அதில் ஒட்டிக்கொண்டால் அவ்வளவு இலேசாக விடமுடியாது.

இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளவேண்டியது என்னவென்ருல் எல்லா சமயங்களும் கடைசியில் ஒரே ஞானத்தில்தான் போய் முடிகிறது. ஒரு மரத்தைத் தலைகீழாகக் கவிழ்த்தால் எப்படிச் சிறுகிளைகள் பெருங்கிளைகளில் சேர்ந்து பிறகு ஒரே அடிமரத்தில் சேர்ந்து கடைசியாக ஒரே ஆணிவேராகப் போய் அதுவும் ஒரு சிறுமுனையில் முடிந்து ஆகாயத்தில் போய் விடுகிறதோ, அதேபோல் எல்லா கிளை மதங்களும் பிற மதங்களும் ஒரே ஞானத்தில் முடிந்த பிறகு சிதம்பர இரகசியத்தில் போய் முடிகின்றன. அப்படி ஞானத்தை அடைய நாம் நம் மலங்களை அடக்கவேண்டும். பிறகு அந்த இரண்டு சத்திகளையும் நீக்கவேண்டும். ஆறு ஆதாரங்களையும் தாண்ட

வேண்டும். அப்படி ஞானம் அடைந்தால் தூங்காமல் தூங்கி சுகம் பெறுவதுபோல், நிலையான ஆனந்தத்தில் இருக்கலாம்.

---

## காளியின் தத்துவம்

காளி என்பது காலி என்பதிலிருந்து வந்தது. காலி செய்பவள் காளி அதாவது எல்லாம் அழிக்கும்தொழிலையுடையவள் காளி. இவள் ஒருப்படுத்திருக்கும் சிவன்மேல் ஒருகாலை ஊன்றிநிற்பவள். சாதாரணமாக சிவமதத்தில் அதிகப் பற்று உடையோர் இதில் தங்கள் சிவனை அவமானப்படுத்துவதாகவும், சிவனைத்தாழ்மைப்படுத்திக்காளியை மேன்மைப்படுத்துவதாகவும் நினைக்கக்கூடும். சாத்தாரணமாக தென் இந்தியாவில் சிவனை அதிகமாக வணங்குகிறார்கள். ஆனால்வட இந்தியாவில் காளி அல்லது துர்க்கையைத்தான் அதிகமாக வணங்குகிறார்கள். சிவனை மிதித்திருப்பது அவனை அவமதித்ததாக ஆல்ல. எல்லாம் கடந்த கடவுளை சிவனாக வைக்கப்பட்டிருக்கிறது. அவர் எல்லாம் அற்றவர். அவர் எல்லாம் அற்றவர் என்றால் இந்தஉலகம் நமக்கு முன் இருக்கிறது; இவ்வுலகத்தில் அநேக செயல்கள் நடந்து வருகின்றன. இப்படி நடப்பதை அவர் சக்தி நடத்துவதாக வைத்து சக்தியாகிய காளியை வைக்கப்பட்டிருக்கிறது. கடவுள் ஒருவர் இருக்கும்போது சக்திதனியாயிராது. அந்தக் காளி தன் சக்தியை கடவுளாகிய சிவனிடத்திலிருந்து கிரகிக்கிறாள். இதைத்தான் அவள் சிவன் மேல் காலைவைத்துநிற்பது குறிக்கிறது.. சாதாரணமாக காளி சுடுகாட்டில் இருப்பதாக வைக்கப்பட்டிருக்கிறது. சுடுகாடு என்பது சவங்களை எல்லாம் எரிக்கும் இடம். இவள் எல்லாவற்றையும் அழிப்பவள் ஆகையால் இவளுக்கு இருப்பிடம் சுடுகாடாக வைக்கப்பட்டிருக்கிறது. சில காளி உருவங்களில் தலையில் நெருப்புச்சுடர்மாதிரி சிவந்த உருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக நெருப்புக்குத்தான் எல்லாம் எரிக்கும் குணம் உண்டு. இவள் எல்லாவற்றையும் எரிப்பதால் இவளுக்கு அந்த உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதே மாதிரிதான் அந்த சக்தியைக் குறிக்கும் மேரீ என்னும் தெய்வத்தைத் தொழும் சில வகுப்புக் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் தலையில் அந்த நெருப்புச்சுடர் உருவமுள்ள ஒருமாதிரி சிவந்தநிறமுள்ள முக்கோண வடிவமுள்ள பாகையைச் சூடிக்கொள்கிறார்கள். காளி என்பதும், துர்க்கை என்பதும், சக்தி என்பதும், மாரி என்பதும், மேரீ என்பதும், மரியம்பீ என்பதும் ஒன்றே.

காளியின் உருவத்தைக் கவனித்தால், அது விழித்த கண்களும், கோரைப்பற்களும்உள்ள கோரஉருவமாயிருக்கும். நாக்கு நீண்டு நுனியில் இரத்தம் வழியும் மாதிரி இருக்கும். கழுத்தில்அநேகதலைகளால்ஆக்கப்பட்ட மாலைஒன்றை அணிந்திருக்கிருள். நிர்வாணமா யிருக்கிருள். அநேக கைகள் கொண்ட ஓர் கோர்வையை இடுப்பில் தரித்திருக்கிருள். வலது ஒருகை அபயம்கொடுக்கும் கைமாதிரி தூக்கி இருக்கிருள். மற்ருெரு வலது கையை கொடுக்கும் கைமாதிரி நீட்டிருக்கிருள். ஒரு இடது கையில் எல்லாவற்றையும் வெட்டக்கூடிய ஒரு இரத்தம் வழியும் வாள் வைத்திருக்கிருள். மற்ருெரு இடது கையில் அப்போது வெட்டப்பட்ட ஒரு தலையை வைத்து இருக்கிருள்.

இவள் எல்லாவற்றையும் அழிக்கும் குணமுடையவள்; ஆகையால் விழித்த கண்களுடன் கோரைப்பற்களுடன் கோர உருவமாகத் தோற்றமளிக்கிருள். அவள் அழிக்கும் குணம் உடையவள் என்பதைக் குறிக்கவே அவள் நாக்கு நீண்டும், இரத்தம்சொட்டிக்கொண்டும் இருக்கிறது. கழுத்தில்இருக்கும் தலைகளால்ஆகிய மாலையானது சிறுபருவம் முதல் வயதுசென்றவர்கள் வரை எல்லாப்பருவத்தினர் தலையும் கொண்டதாக இருக்கிறது. ஆதலால் இன்ன வயது வந்தவர்களைத்தான் இவள் அழிக்கிருள் என்பதில்லை. காலம் வந்தபோது தயை இல்லாமல் எல்லா வயதுடையவர்களையும் அவள் அழிக்கிருள் என்று குறிக்கிறது. அவள் நிர்வாணமாயிருக்கிருள் என்பது அவளுக்குத்தனிப்பட்டது ஒன்றும் வேண்டியதில்லை. அவளுக்கு ஒன்றுமில்லை. அவள் எதுவும இல்லாதவள் என்பதைக் குறிக்கிறது. கைகள் சேர்த்த கோர்வையை இடுப்பில்சுற்றி இருக்கிருள் என்பது உலகத்தில் நடக்கும் சகல தொழில்களையும் அவள்செய்கிருள் என்று குறிக்கிறது. அவளது இடது கைகளை எடுத்துக்கொள்வோம். உலகத்தில் இன்பத்தைவிட துன்பமே அதிகம். ஆகவே அவள் இடதுகை ஒன்றிலிருக்கும் வாள் அதைக் குறிக்கிறது. அதில் படிந்திருக்கும் இரத்தம் அத்துன்பம் சதா இருந்துகொண்டிருக்கும் என்று குறிக்கிறது. இயற்கைக்குமாருக அநேகர் தங்கள் ஆணவத்தால் அநேக காரியங்களைச் செய்யப் பார்க்கிருர்கள். அப்படி அவர்கள் செய்தாலும் அது இயற்கைக்கு விரோதமாக முடியாது. அந்த இயற்கை அதை பாழ்படுத்திவிடுகிறது. அதையே அவளது மற்ருெரு இடது கையிலிருக்கும் அப்போது வெட்டிய தலை குறிக்கிறது. அவள் இப்படி எவ்வளவு அழிக்கும்

தொழிலை செய்தாலும் அவள் இயற்கைச் சக்திக்கு நல்ல குணமும் உண்டு. அவள் நன்மையையும் செய்கிறாள். இதையே அவளது வலது கைகள் காட்டுகின்றன. நன்மையைச் செய்கிறவர்களுக்கு, நான் காப்பாற்றுகிறேன் என்றுகாட்டுகிறதற்கு அவள் வலது கைகளில் ஒன்று தூக்கி அபயம் கொடுப்பதாகக் காட்டுகிறது. நன்மை செய்பவர்களுக்கு அவள் வேண்டியதை பரிந்து கொடுப்பதாக அவளது மற்றொரு நீட்டிக் கொடுக்கும் வலது கை காட்டுகிறது.

ஆகவே உலகத்தில் நடக்கும் சகல நன்மைக்கும் தீமைக்கும் சக்தியே காரணம். இந்த சக்தியும் தானாக இயங்குவதில்லை. சிவனின் அல்லது கடவுளினின்றே உண்டாகிறது. ஆகவே சக்தி வேலை செய்யாவிடில், தானாக இருப்பதற்கு இல்லாமல் அந்த கடவுளினிடத்தே போய் சேர்ந்து விடுகிறது, ஒடுங்கி விடுகிறது. இதைக் குறிக்கவே சிவன் அல்லது விஷ்ணு கோயில்களில் இராக் காலங்களில் பள்ளி அறை என்று ஒன்று அமைத்து அதில் கடவுளையும், சக்தியையும், அதாவது அம்பாளையும் சேர்த்து வைத்து விடுகிறார்கள். அதாவது சக்தி கடவுளிடம் ஒடுங்கிவிட்டதாக காட்டுகிறார்கள். நாம் இரவில் சக்தியற்றுத் தூங்குகிறோம். சூரியனும் மறைந்து பகலும் ஒளியும் பிரகாசமும் ஒடுங்கிவிடுகிறது. ஆகையால் நாம் நமது சொற்ப அறிவைக்கொண்டு பார்த்து உலகமே, சக்தியே மறைந்து விட்டதாக, ஒடுங்கிவிட்டதாக நினைத்து, கடவுளையும் சக்தியையும் சேர்த்து இரவில் ஒரு அறையில்வைத்து, பிறகு நாம் விழித்தவுடன், சூரியனும் அதன் பிரகாசமும் ஒளியும் உண்டான உடன் சக்தி மறுபடியும் தொழில் செய்கிற மாதிரி அம்பாளை வெளிப்படுத்துகிறார்கள்.

---

## சின்முத்திரையின் தத்துவம்.




0 என்பது கடவுள். 1 என்பது சிவன்; 2, 3, 4 என்பன மும்மலங்கள். 1 என்பது 2, 3, 4 என்பவைகளோடு சேர்ந்திருக்கும் வரைக்கும் 0 என்பது தூரவே இருக்கும் அதாவது சிவன் மலங்களோடு கூடியிருக்கும் வரைக்கும் கடவுள் தூரவே இருப்பார்.




இதில் சீவன் மலங்களை விட்டு விலகி கடவுளை நோக்கிப் புறப்பட்டால் கடவுள் அப்பேர்ப்பட்டவர்களை எதிர் கொண்டழைக்கிறார். கையினால் அப்படிச் செய்து பார்த்தால் விரல்கள் அப்படியே போகும்.




இதுதான் சின் முத்திரை மும்மலங்களை விட்ட சீவன் கடவுளை அடைந்துவிட்டது. 2, 3, 4 என்பவைகளை அறவே நீக்கிப் போன 1 என்பது வழியிலேயே 0 என்பதோடு கூடி விட்டது. இதுதான் ஈசுவரன் தட்சணா மூர்த்தி உருவமாக வந்து கல்லால மரத்தின் கீழிருந்து நான்கு முனிவர்களுக்கும் சொல்லாமல் சொன்ன உபதேசம்.

## இயற்கை.

1. இவ்வுலகம் மண், நீர், தீ, வாயு, ஆகாயம் என்ற ஐந்து முதற் பொருள்களால் ஆயது.

2. இவ்வுலகத்தில் உயிர் உள்ள பொருள்கள், உயிர்இல்லாத பொருள்கள் என இரண்டு வகையுண்டு.

3. உயிர் உள்ள பொருள்கள் நான்கு வகையாகப் பிறக்கின்றன:—விதையிலிருந்தும், அழுக்கிலிருந்தும், முட்டையிலிருந்தும், யோனி வழியாயும் பிறக்கின்றன.

4. உலகத்தில் உள்ளபொருள்கள் ஏழுவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் :—தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள், என்பன.

5. உயிர் உள்ள பொருள்கள் ஆறுவகை :—அதாவது ஓரறிவு முதல் ஆறறிவுவரையில் உள்ளன. அந்த அறிவுகள்:- ஸ்பரிசம், இரசம், கந்தம், உருவம், சத்தம், பகுத்தறிவு என்பன. நாம் ஐந்தறிவுள்ள விலங்குகளைவிடப் பகுத்தறிவுடன் கூடிய ஆறு அறிவுடையவர்கள்.

6. யார் யாருக்கு உடம்பில் மிகுதியாக மயிர் இருக்கின்றதோ அவர்கள் அவ்வளவுக்கவ்வளவு கீழ் நிலையான குணத்துடனிருப்பார்கள், எவ்வளவுக்கெவ்வளவு குறைவாகத்

தேகத்தில் மயிர் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சாந்தத்துடனும், அன்புடனும், மனிதத்தன்மையுடனுமிருப்பார்கள்.

7. நம் சரீரம் அவரவர்கள் ஆராய்ச்சிக்குத் தக்கபடி எட்டு அங்கங்கள் அடங்கியதென்றும்; அதாவது:—மயிர், தோல், எலும்பு, தசை, நரம்பு, இரத்தம், பிராணவாயு, அபானவாயு; அல்லது இரண்டு கால்கள், இரண்டு கைகள், மார், நெற்றி, இரண்டு கண்கள்; அல்லது 1 வது இலக்கமிட்டதில் சொல்லியபடி ஐந்து பூதங்களால் ஆனதென்றும்; அல்லது ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றையும் ஐந்தாக்கி இருபத்தைந்து அங்கங்கள் அடங்கியதென்றும்; அல்லது அதில் ஒன்றை நீக்கி இருபத்து நான்கு அங்கங்கள் அடங்கியதென்றும்; இதை இன்னும் கொஞ்சம் சேர்த்து முப்பத்தாறு அங்கங்கள் அடங்கியதென்றும்; அதை இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தி தொண்ணூற்றாறு அங்கங்கள், அல்லது தத்துவங்கள் அடங்கியதென்றும் சொல்லுவார்கள்.

8. நம் சரீரத்தில் ஒன்பது துவாரங்கள் இருக்கின்றன.

9. நமக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன.

10. இவைகளை உபயோகப்படுத்த ஐந்துவகை செய்கைகள்.

11. இவைகளின் பயனை அறிவிக்கும் ஐந்து வகை அறிவுகள்.

12. நம் சரீரம் ஐந்துவகைத் தொழில்கள் செய்கின்றன:—பேசுதல், இருத்தல், நடத்தல், மலஜலம் கழித்தல் ஆனந்தம் அடைதல் என்பன.

13. மனிதனுக்கு மூன்றுவித குணங்களுண்டு:—உத்தம குணம், மத்திம குணம், அதம குணம்.

14. உற்பத்தியானதெல்லாம் ஒரு காலத்தில் மடியத்தான் செய்யும்.

15. நாம் பிறக்கும்போது நம்கூட ஒன்றும் வரவில்லை. இறக்கும்போதும் ஒன்றும் கொண்டு போவதில்லை

16 இன்று பணக்காரனாக இருப்பவன் நாளைக்கு ஏழை, இன்று ஏழையாயிருப்பவன் நாளை பணக்காரன்.

17. இன்று உயர்ந்த ஸ்திதியில் இருப்பவன் நாளை தாழ்ந்த ஸ்திதிக்கு வருவான். இன்று தாழ்ந்த ஸ்திதியில் இருப்பவன் நாளை உயர்ந்த ஸ்திதிக்கு வருவான்.

18. சிறு பிராணிகளைப் பெரிய பிராணிகள் விழுங்குகின்றன. அவைகளை அதிலும் பெரிய பிராணிகள் விழுங்குகின்றன. இப்படியே ஒன்றை ஒன்று விழுங்கி கடைசியாக உள்ள பிராணிகள் ஒரு விபரீத வஸ்துவால் விழுங்கப்படுகின்றன.

19. உயிர் உள்ளவரைக்கும் இந்த உடலுக்குச் சகலவித மரியாதையும் நடக்கின்றன. அந்த உயிர் நீங்கினால் ஒன்றுக்கும் உதவாத துர்நாற்றமுடைய மாமிச பிண்டமாய்விடுகிறது. அப்போது யாரும் இதை வீட்டிலோ, சமீபத்திலோ வைத்திருக்க விரும்புவதில்லை. எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமோ, அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரமாக வெளிப்படுத்தி, மண்ணில் புதைத்தோ, அல்லது தீயிட்டுக் கொளுத்தியோ அழிக்கிறார்கள்.

20. மரணம் என்பது எவ்வளவு பணக்காரனாயிருந்தாலும், பலசாலியாக இருந்தாலும், அதிகாரம்வாய்ந்தவனாக இருந்தாலும் விடுவதில்லை.

21. மிகவும் சத்துள்ள ஆகாரம் உட்கொள்ளுவதினால் இரத்தம் அதிகரித்து மூர்க்கம் முதலிய துர்க்குணங்கள் அதிகரிக்கின்றன. மிதமான சத்துள்ள ஆகாரத்தை உட்கொள்ளுவதினால் சாந்தம் முதலிய நற்குணங்கள் உண்டாகும்.

22. மேலே எறிந்த கல் மறுபடியும் கீழே வந்து விழுகிறது. ஒரு சுவரின்பேரில் அடித்த பந்து மறுபடியும் அடிக்கச் செய்த பக்கமே திரும்பி வருகிறது. வேகமாகப் போட்டால் வேகமாகத் திரும்பி வருகிறது. மெதுவாகப் போட்டால் மெதுவாகத் திரும்பி வருகிறது.

23 அதுபோலவே மனிதனுக்கு அவன் செய்த வினையின் பயன்படி, திரும்ப பிரதி பலன் வருகிறது.

24 ஒருவன் நல்லவனாக இருந்தும் சில கஷ்டங்களை அனுபவிப்பதும், கெட்டவனாக இருந்தும் சில சுகத்தை அனுபவிப்பதும் இதனால் தான்.

25. தற்காலம் முன் வருஷத்தைவிட அடுத்த வருஷம் சரிவர மழையில்லை என்றும், வெயில் அதிகமாக இருப்பதென்றும், உலகத்தில் பலவித கஷ்டங்கள் உண்டாகின்றன என்பதற்கும் இரண்டுவித சமாதானங்கள் உண்டு. சூரியனைச் சுற்றி வரும் பூமி, வரவர சூரியனைச் சமீபித்துக் கொண்டே போவதால் இவ்விதமான பலன்கள் உண்டாகின்றன என்பது ஒன்று. மற்றொன்று என்னவென்றால் மனிதர்கள் வரவர நெறி தவறி

தீக்குணங்களுடன் தீச்செயல்கள் செய்வதின் பிரதி பலனை அவர்கள் அநுபவிக்கிறார்கள் என்பது.

26. மனிதர் ஒவ்வொருவருக்கும் தலையில் இருக்கும் மூளை 32 பாகங்களையுடையது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொருபாகமும் ஒவ்வொருவித அறிவை இயக்குகிறது. ஒவ்வொருவருக்கும் விசேஷமாக ஒருபாகம்தான் விருத்தியடைந்து அத் சம்பந்தப்பட்ட அறிவு விசேஷித்திருக்கும், சிலருக்கு வாய்பேச்சில் விசேஷித்தும், சிலருக்கு எழுத்து விஷயத்தில் விசேஷித்தும், சிலருக்கு கணக்கு விஷயத்தில் விசேஷித்தும், சிலருக்கு ஞாபசக்தி விஷயத்தில்விசேஷித்தும், சிலருக்கு வாதிக்கும் விஷயத்தில் விசேஷித்தும், இப்படியாக ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விஷயத்தில் விசேஷித்திருக்கும். ஆனால் இந்த 32 பாகங்களில் முக்கியமானவை மூன்று பாகங்கள் தான். அதிலும் அதிக முக்கியமானது ஒன்றுதான். அதுதான் உச்சந் தலையிலிருக்கும் பாகம். இது விருத்தியானால்தான் உண்மை ஞானம் உண்டாகும். இதற்குத் துணையாயிருப்பதும், உதவி செய்வதும், இரண்டு பாகங்கள். அவையாவன:—இரண்டு புருவத்திற்கும் மத்தியில் நெற்றியிலிருக்கும் பாகம் ஒன்று; பின்புறம் மண்டையை ஒட்டினாற்போல் பிடரியில் இருக்கும் பாகம் மற்றொன்று. ஆக இம் மூன்றுந்தான் முக்கியமானவை, மற்ற பாகங்கள் விருத்தியடைவதினால் இவைகளுக்கு பங்கம் ஏற்படும். உண்மை ஞானம் உண்டாகாது.

---

## நமது கடமை.

இருப்பது ஒன்று. அதுவே கடவுள் என்றும், பிரம்மம் என்றும், பரமாத்மாவென்றும், ஆண்டவன் என்றும், சிவன் என்றும், விஷ்ணுவென்றும் சொல்லப்படுகிறது. அதை அனுபவத்தில் உணர்வதே, அடைவதே, அத்துடன் இரண்டறக் கலப்பதே, உண்மை ஞானம் என்று சொல்லப்படுவது. அது அழிவில்லா ஆனந்தத்தைக் கொடுப்பது. அதை அடையவே நாம் இந்த ஆறறிவுள்ள, பகுத்தறிவுள்ள, மனிதப் பிறவியுடன் வந்திருக்கிறோம். அதை இந்தப் பொய்யான, மாயா உலகத்தில், நிலையில்லா, அழியக் கூடிய, பொருள்களின் உணர்ச்சியில், அவைகளின் சொற்ப நேரத்திய ஆனந்தத்தில், மூழ்கி, நாம் வாணாளை வீணாக்குகிறோம். அந்த ஞானம் அடைதற்கு முன் நாம் யார் என்று உணரவேண்டும் இதுவே ஆத்ம ஞானமென்றும், ஆத்ம தரிசனம் என்றும் சொல்லப்

படுவது. இது உண்டானல் பரஞானம் இலகுவில் உண்டாகும். இது வரும்போதுதான் வாதம் உண்டாகிறது. இந்த ஆத்மா வேரு? நம் சிவன் வேரு? அல்லது இரண்டும் ஒன்ரு? இரண்டும் வேறு என்றும் சொல்லலாம். ஒன்றே என்றும் சொல்லலாம். இது அவரவர்கள் பரி பக்குவ நிலையையும், ஞான விருத்தியையும் பொறுத்திருக்கிறது. சிலருக்கு மனச்சாட்சி என்று ஒன்று தோன்றியிருக்கிறது. சிலருக்கு அப்படிப்பட்டதொன்று இருப்பதாகவே உணர்ச்சியில்லை. தோன்றிய சிலருக்குள்ளும் வித்தியாசம் இருக்கிறது. ஒரு சிலருக்கு மட்டும் அது பூர்த்தியாகி, அவர்கள் மனச்சாட்சிக்கு விரோதமான எவற்றையும் செய்யமாட்டார்கள். அதன் சொற்படியே நடப்பார்கள். சத்தியத்துடனும், அன்புடனும், பரிசுத்த மனதுடனும், எதையும் செய்வார்கள். தீய காரியம் எவற்றையும் மனதிலும் நினையார்கள். எவ்வித ஆசையுமில்லாமல், எவ்வித கெட்ட எண்ணமுமில்லாமல் இருப்பார்கள் நான் என்ற ஆணவம் அறவே ஒழித்து நிற்பார்கள். இந்த மனச்சாட்சியே ஆத்மா. ஆகையால்தான் கடவுள் சாட்சிமாத்திரமாக நிற்கிருர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்டவர்களுக்கு நான் என்பது நீங்கி ஆத்மா ஒன்றே நிற்பதால் இவர்கள் இரண்டும் ஒன்ருகவே உணர்வார்கள். இவ்வளவு பக்குவமடையாதவர்கள் சொற்பமாக மனச்சாட்சி சொன்னலும், தன்னுடைய ஆணவம் விடாமல், அந்த மனச்சாட்சி குறிப்பிடுவதையும் உணராமல், ஆணவத்துடன் கூடி எவ்வித செய்கையும் செய்வார்கள். இவர்கள் தன் ஆணவத்துடன் கூடிய சிவன் வேருகவும், மனச்சாட்சியாகிய ஆத்மா வேருகவும் உணருவார்கள். இவர்களைத் தவிர மனச்சாட்சி என்பதே உணராதவர்கள் மூர்க்க ஆணவத்துடன் கொடிய மூர்க்க மிருகத் தன்மையுடனிருப்பவர்கள். கொஞ்சமும், பக்குவமும் அறிவுமில்லாத மிருகத்திற்கு சமானமானவர்கள்.

இதில் "நாம்" என்பது எது என்று விசாரித்து உணர வேண்டியது, அறிவுள்ளவர்கள் கடமை. நமக்கு இருக்கும் இந்திரியங்கள் ஒவ்வொன்றும் நாம் அல்லவென்பது, நான் பார்த்தேன், நான் கேட்டேன், நான் சொன்னேன் என்பன போன்று சொல்லுவதால், இந்த இந்திரியத்திற்கு வேருக நான் என்பது உள்ளது என்று ஏற்படுகிறது. நம் உணர்ச்சியே அது என்ருல் நாம் உணர்ச்சியில்லாமல் தூங்கும் போதும், சுரணையேயில்லாமல் மயங்கிக் கிடக்கும்போதும், அது இயக்கி நான் தூங்கினேன், நான் மயங்கிக் கிடந்தேன் என்று சொல்லுவதால், இந்த உணர்ச்சிக்கு வேருக அது

இருக்கிறதென்பது தெரிகிறது. அதுபோலவே நாம் விடும் மூச்சே அது என்றாலோ மூச்சை அடக்கிச் சிலர் அநேக நாட்கள் இருப்பதால், நான் மூச்சை அடக்கினேன் என்று சொல்லுவதால் அந்த மூச்சும் அல்லவென்று தெரிகிறது. ஆகவே நம் சரீரமும், சரீரத்தை சம்மந்தப்பட்ட எதுவும் நாம் என்று சொல்லப்படுவது அல்ல.

நாம் அந்த ஆத்ம தரிசனம் செய்ய வேண்டுமானால் மனச்சாட்சியை விருத்திசெய்து, அது சொற்படி நடந்து, எல்லாவித ஆசைகளையும் நீக்கி, எல்லாவித கெட்டகுணங் களையும் விட்டு, எவ்வித செய்கைகளையும் செய்யாமல், மனதிலும் நினையாமலிருந்து, நமது இந்திரியங்களை உலகப் பொருள்களில் செல்லவிடாது தடுத்து, உள்நோக்கச் செய்ய வேண்டும். மனதை அந்த ஒன்றின் பேரிலேயே நிறுத்த வேண்டும். அப்படி நிறுத்தப் பழகத்தான், பக்தி செய்ய வேண்டும். அதைவிட்டு மனதில் சகலவித எண்ணங்களையும் வைத்துக்கொண்டும், கடவுளைப்பற்றிய புஸ்தகங்களைப் படித் துக்கொண்டும், செய்கைகளைச் செய்வதாலும், பலன் ஏற் படாது. மனம் எவ்வளவு நேரம் வெளி விஷயங்களில் உலகப் பொருள்களில் பற்றிக்கொண்டிருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு தூரம் நமது ஆத்ம, ஞான, தரிசனம் விலகியே இருக்கும்.

---

## மகாபாரதக் கதை

மகாபாரதம் என்பது சாதாரணமாக ஒருமனிதனுக்கு அவன் ஆயுட்காலத்தில் நடப்பதையே மகாபாரதக் கதையாக எழுதப்பட்டிருக்கிறது. மகாபாரதத்தில், தருமர், பீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்று ஐந்து சகோதரர் களாகிய பஞ்சபாண்டவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குப் பங்காளிகள் துரியோதனாதியராகிய 100 பேர்கள் இருந்தார்கள். பஞ்ச பாண்டவர்களுக்குக் கிரமமாக கிடைக்க வேண்டிய இராஜ்யத்தைத் துரியோதனாதியர்கள் தாங்களே கைப்பற்றிக் கொண்டு அநேக வஞ்சனை வழிகளினால் பாண்டவர்களை வெகு நாள்வரை தங்கள் கிட்டக்கூட வராதபடி வைத்திருந்தார்கள். வெகு நாள் கழித்துக் கிருஷ்ணனைத் துணையாகக் கொண்டு பஞ்ச பாண்டவர்கள் துரியோதனாதியர்களுடன் சண்டை தொடுத்தார்கள். கிருஷ்ணன் அருச்சுனனுக்கு சாரதியா யிருந்து, இரதத்தைச்செலுத்தி, அவனுக்கு வேண்டிய புத்தி மதிகள் சொன்னபடி, அருச்சுனன் துரியோதனாதியர்களை சண்டையில் வென்றான். இதுதான் மகாபாரதத்தின் சுருக்கம்

அதுபோல், நமக்கு இயற்கையாக தர்மம், வீரம், வைராக்கியம், அறிவு, அனுக்கிரகம் என்றஐந்து நல்லகுணங்கள் உண்டு. இவைகளினால்தான் நாம் முக்தியை அடையவேண்டும். அப்படியிருக்க நமக்குச் சிறுவயதில் உடலில் இரத்தம் அதிகம் இருக்கும்போது. உலகஞானம் அதிகம்இல்லாத்போது, ஆணவம் முதல் அநேக தீயகுணங்கள் நம்மைஆட்கொண்டு நம்மைச் செலுத்துகின்றன. அப்படி நாம் அநேகநாள் அந்தத்தீயகுணங்களின் வழியேசென்று சுமார் 35வயதுவரைக்கும் அவஸ்தைப் பட்டு, அநேகக் கஷ்டங்களை அனுபவித்து, உலக பாசங்களில் இடிபட்டுப் பிறகு தெய்வத்தைநாடப் பிரியப்படுகிறோம். அப்போதுதான் கொஞ்சம் ஞானம் உதயமாகிறது. மனச்சாட்சி என்று ஒன்று தோன்றி, "இதைச்செய்யாதே; இதைச்செய். இதுநல்லது; இதுகெட்டது" என்றுநம்மைச்செலுத்துகிறது. (நமக்கு சுமார் 35-வது வயதில் கடைசிப் பல் முளைக்கிறது. அதற்கு 'ஞானப்பல்' என்றே பெயர் வைத்திருக்கிறார்கள். அந்தக் காலத்தில் தான் நமக்குக் கொஞ்சம் ஞானமும் உதயமாகிறது. ஆகையினால்தான் அதற்கு அப்பெயர்போலும்). அதை உணர்ந்து, அதன்படியே நடந்துபோனால், நமக்கு நன்மை உண்டு. ஆனால், அனேகர் அதையும்மதியாமல் மரண பரியந்தமும், மலங்களில்இச்சையைவைத்து, மாயப்பிரபஞ்சத்தில் மூழ்கி மடிகிறார்கள். அவர்களைக்குறித்து நாம் வருத்தப் படுவதைத்தவிர வேறு என்னசெய்யலாம். இனி, மனச்சாட்சியின்படி நடந்து, நாம்நம்முடனிருந்த கெட்டகுணங்களை நீக்கி, நற்செய்கைகளால் முக்தியடைகிறோம்.

நம் நல்லகுணங்களே பஞ்சபாண்டவர்கள். தீய குணங்களே துரியோதனாதியர். ஆணவமே துரியோதனன். கிருஷ்ணனே மனச்சாட்சி. அருச்சுனனே வைராக்யம். நல்ல குணமிருந்தும் வைராக்யம் இல்லாவிட்டால் பிரயோஜனப்படாது. நம் சரீரமே அருச்சுனன் இரதம். அதன் நான்கு குதிரைகளும், நான்கு அந்தக்கரணங்கள். அவைகளின் கடிவாளமே அறிவு. மனச்சாட்சியின்உபதேசப்படிநாம்அறிவைஉபயோகப் படுத்தி, அந்தக்கரணங்களை சரிவர அடக்கி, நம் சரீரத்தை நடத்தி, வைராக்யத்தினால் தீயகுணங்களைநீக்கி, மனதை ஒரே நிலையில் நிறுத்தினால், நமக்கு ஆத்மதரிசனம் கிடைக்கும்.

---

## பிராமணன்.

ஆரியர்களெல்லாம் பிராமணர்களா? - பூணூல் போட்டவர்களெல்லாம் பிராமணர்களா? சந்தியாவந்தனம் செய்கிற

வர்களும், செய்கிற மாதிரி பாவனை செய்கிறவர்களும் பிராமணர்களா? காயத்திரி ஜெபிப்பவர்களும், ஜெபிக்கிரமாதிரி பாவனை செய்பவர்களும் பிராமணர்களா? எச்சில் கோப்பை கழுவுகிறவன் பிராமணனா? புகையிலை போடுகிறவனும் பொடி போடுகிறவனும் பிராமணனா? சிகரெட், சுருட்டு, பிடிக்கிற வன் பிராமணனா? போதை சாப்பிடுகிறவன் பிராமணனா? யாகத்தின் பேரால் புலால், மது சாப்பிடுகிறவன் பிராமணனா? வேசித்தொழில் செய்கிறவன் பிராமணனா? வண்ணான்தொழில் அம்பட்டன் தொழில், சக்கிலித்தொழில் செய்கிறவன் பிரா மணனா? சகலவித ஆசைகளுடனும், குரோத புத்தியுடனும், உத்தியோகம் செய்கிறவன் பிராமணனா? பிரமம் என்றால் இன்னதென்றே உணராதவன் பிராமணனா?

பிரமத்தை அதாவது கடவுளை, சிவனை, விஷ்ணுவை, பரமாத்மாவை, பதியை, உண்மை ஞானத்தை உணர்ந்தவனே பிராமணன். அதை உணர உண்மையாய் பிரயத்தனம் செய் கிறவன், பிரியப்படுகிறவன் பிராமணன், அதற்காக சத்துவ குணத்துடன், உத்தம குணத்துடன் இருப்பவன் பிராமணன். அதற்காக சகலவித ஆசைகளையும் குரோத புத்தியையும், உலோப புத்தியையும், மனம், வாக்கு, காயங்களால் நீக்கின வனே பிராமணன்.

பஞ்சகச்சம் என்பது இடுப்பில்கட்டும் வேட்டியை 5 கச்சமாகக் கட்டி அந்த கச்சத்தின் முனைகளை இடுப்பிலேயே சொருகி வைக்கப்படுகிறது. இதிலிருந்து என்ன தெரிகிற தென்றால் அப்படிக் கட்டுபவர்கள், ஆமை தன் ஐந்து அவ யவங்களையும் உள்ளுக்கு இழுத்துச் சும்மா கிடப்பதுபோல், அவர்களும் தங்கள் ஐந்து இந்திரியங்களையும் வெளி விஷயங் களில் நாடவிடாமல் உள்ளே இருக்கும் ஆத்மாவிடம்செலுத்த வேண்டுமென்பது.

பூணூல் 96 பிடி அளவுள்ள நூலை முப்பிரியாக்கி அதையே மூன்று வடமாக மடித்து, முனையும், கடைசியும் தெரியாதபடி முடிபோட்டு, சரீரத்தில் தரிக்கப் பட்டிருக் கிறது. அது எதற்கென்றால் 96 தத்துவங்கள் அடங்கிய இந்த சரீரத்தில், மும்மலங்களையும், காமக் குரோத உலோபங் களையும், மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண சுத்தியால் அடக்கினால் முடியாகிய பிரம்மத்தை அடையலாம் என்றும், அதைத் தரித்தவர்கள் மலங்களை அப்படி அடக்கவேண்டு மென்பதும் முடிச்சுக்கு முதலும், கடைசியும், தெரியாதது போல் பிரம்மத்திற்கு ஆதியும் அந்தமுமில்லை என்பதும் தெரிவிப்பதற்காகத்தான்.

மிலேச்சன் = மலம் + இச்சை உள்ளவன். அதாவது காமம், குரோதம், உலோபகுணமுடையவர்கள், மிலேச்சர்கள்.

மத சாஸ்திரங்களை சும்மா வாசித்து அதுபோல் நடக்காதவர்கள் தமோ குணமுடையவர்கள் அல்லது அதம குணமுடையவர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

மதசாஸ்திரங்களை ஜீவனத்திற்காக உபயோகப்படுத்துகிறவர்கள் சண்டாளர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

தீண்டாமை என்பது மின்சார சக்தியைப்போல் தொட்டவர்களுக்குச் சுருக்கென்று உணர்ச்சி கொடுப்பதல்ல. அல்லது தீயைப்போல் தொட்டவர்களை சுடுவதுமல்ல. அதற்கும் தெய்வத்திற்கும் சம்பந்தமில்லை. அது சுகாதார விஷயங்களிலொன்று. யாராவது ஒருவன் மிகவும் அசுத்தநடையுடன், தேகத்துடனிருந்தால், அப்பேர்ப்பட்டவன் உடலை சாதாரணமாகவே சுத்தமாகஉள்ளவன் தொடுவதற்குக் கூசுவான். அப்பேர்ப்பட்டவனைத் தொட்டால் அவன் மேலிருக்கும் அசுத்தத்தினால் உண்டாகும் பிணி தொடுகிறவனுக்கும் வரும். சுத்தமாயிருப்பவன் எந்த அசுத்தமான வஸ்துவையும், தன் சரீரத்தால் தீண்டமாட்டான். அதுபோல் மிகவும் அசுத்தமாயிருப்பவன் மேல்பட்ட வாடையும் தீங்கு விளைவிக்கும். ஆதலால் அப்பேர்ப்பட்டவனிடமிருந்து வரும் வாடையும் மிகவும் சுத்தமாயிருப்பவன் தன்மேல் படச்சகியான். இது யாராயிருந்தாலும் சுத்த அசுத்தத்தைப் பொறுத்ததே தவிர பிறப்பில் இல்லை ஒழுக்கத்தில்தான் இருக்கிறது.

---

## மதங்களின் ஒற்றுமை I.

1



இது சூலாயுதமெனப்படும். இது சிவன், சக்தி அல்லது காளி என்பவர்கள் கையில் இருக்கும் ஆயுதம்.

2



இது சிலுவை எனப்படும். இது கிறிஸ்தவர்களின் குறி இதுபோன்றதில்தான் இயேசு கிறிஸ்து அறையப்பட்டு, உயிர் நீத்தாரெனச் சொல்லப்படுகிறது 1 ஆவது இலக்கமிட்ட சூலாயுதத்தினை பக்கத்து இரண்டு கைகளையும் நேரே நீட்டிவிட்டால் இந்தச்சிலுவை உண்டாகிறது.

3 

இது தென்கலை நாமம். இது வைணவர்களில் தென்கலையார்களின் நெற்றிக்குறி. இது மேற்சொன்ன 1 ஆவது இலக்கமிட்ட சூலத்தின் கீழ்க்காம்பைக் கொஞ்சம்விட்டு வெட்டிவிட்டால் உண்டாகிறது.

4 

இது வடகலை நாமம். இது வைணவர்களில் வடகலையார்களின் நெற்றிக்குறி. இது மேற்சொன்ன 1 ஆவது இலக்கமிட்ட சூலத்தின்கீழ்க்காம்பை அடியோடு வெட்டிவிட்டால் உண்டாகிறது.

5 

இது இஸ்லாம் மார்க்கத்தின் குறி. இது 4 ஆவது இலக்கமிட்ட வடகலை நாமத்தைச் சற்று குறுக்கி, மத்தியில் இருக்கும் நீண்ட கோட்டை ஒரு நக்ஷத்திரமாக போட்டால் உண்டாகிறது.

இந்தக் குறிகளுக்கு அந்தந்த மதத்தின் கொள்கைக்கேற்ற மற்ற அர்த்தங்கள் இருந்தாலும் இவை பொதுவான மூன்று விஷயங்களைக் குறிக்கின்றன. அவையாவன:—

1. பதி, பசு, பாசம் (சிவமதம்); God, Son, Holy Ghost, அதாவது கடவுள், திருக்குமாரன், பரிசுத்த ஆவி, (கிறிஸ்து); பரமாத்மா, ஜீவாத்மா, மாயை (விஷ்ணுமதம்); கடவுள், ஈர்ம், உலகம் (இஸ்லாமிய மதம்).

2. கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைச் செய்கிறார்.

3. அவரால் படைக்கப்பட்ட நமக்கு, உத்தம குணம், மத்திம குணம், அதம குணமாக முக்குணங்களுண்டு.

4. நமக்கு மேல், கீழ், மத்தி என்ற மூவுலகங்கள்உண்டு.

5. காமம், குரோதம், உலோபம் என்ற மூவித கெட்ட குணங்களுண்டு. அவைகளை நீக்க வேண்டுமென்பது கட்டளை.

6. நல்வினை, தீவினை, ஒன்றிலும்படாத வினை என்ற மூன்று வினைகளுண்டு.

7. ஆண், பெண், அலி என்ற முப்பால்களுண்டு.

8. பார்ப்பவன், பார்க்கப்படும்பொருள், பார்க்கும் அறிவு என்ற மூன்று விஷயங்கள்.

9. பேதம், அபேதம், பேதாபேதம் என்ற மூக்கூறுகள்.
10. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற முக்காலங்கள்.
11. தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூவிடங்கள்.
12. காலம், தேசம், வஸ்து என்ற முப்பரிசேதங்கள்.
13. செய்தல், செய்வித்தல், உடன்படல் என்ற மூன்று வழக்கம்.
14. மனம், வாக்கு, காயம் திரிகரணங்கள்.
15. உடல், உயிர், கடவுள்
16. சித்தம், மனம், புத்தி.
17. பக்தி, யோகம், ஜானம் என்ற மூன்று மார்க்கங்கள்.
18. கருமம், பக்தி, ஞானம்.
19. இட சுத்தம், சரீர சுத்தம், மன சுத்தம்.

கிறிஸ்துவர்கள் பாபிகளாய்ப் பிறந்தோம் என்பதும், இஸ்லாமியர் கபீர்களாகப் பிறந்தோம்என்பதும, இந்தியர்கள் (சிவன், சக்தி, விஷ்ணு மதங்கள்) கர்மத்தினால் பிறந்தோம் என்பதும் ஒன்றே.

நாம்செய்யும்காரியங்களுக்கேற்றவாறு கடவுள் கடைசி காலத்தில் நம்மைத்தண்டிக்கிறார்என்பதும், மேல்கீழ்; அல்லது மோட்சம், நரகத்திற்கு அனுப்புகிறாரென்பதும், மறு ஜன்மம் கொடுக்கிறாரென்பதும் ஒன்றே.

இந்தியர்களுக்குக் காமக் குரோதச் செயல்களை நீக்கியிருப்பதுபோல், இயேசுவும், முகமதுநபியும், சிலகாரியங்களைச் செய்யவேண்டாமென்றும், சில காரியங்களைச் செய்யவேண்டுமென்றும் நிச்சயித்துக் கூறியிருக்கிறார்கள்.

இந்தியர்களுக்குப் பக்திமார்க்கத்தில்ஒன்றாகிய தெய்வ வழிபாட்டையே கிறிஸ்தவர்கள் மாதாகோவிலிலும், இஸ்லாமியர் பள்ளிவாசலிலும் செய்கிறார்கள்.

---

## மதங்களின் ஒற்றுமை II.

பார்க்கப்போனால் எல்லாமதக்கொள்கைகளும் ஒன்றே. கிறிஸ்துவ மதத்தில் கிறிஸ்து என்பவர் ஆடு மாடுகளை, தன் கையில் தலையில் வளைவுள்ள ஒரு கம்பை வைத்துக்கொண்டு, நன்றாய் மேய்த்து, நல்ல புல்லுள்ள இடங்களுக்கு அந்த ஆடு மாடுகளைக்கொண்டுபோய் மேய்த்துவிட்டு, நல்ல தண்ணீர்

உள்ள இடத்திற்குக் கொண்டுபோய் தண்ணீர் குடிக்க விடு கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தமிழர் மதத்தில் கிருஷ்ணன் என்பவன் ஆடுமாடுகளை மேய்த்து, அவைகள் நன்றாக மேய்ந்து தண்ணீர் அருந்தினபிறகு அவைகளுக்கு ஆனந்தம் கொடுக்க, புல்லாங்குழல் வாசித்ததாக சொல்லப் பட்டிருக்கிறது. கூர்ந்து கவனித்தால் இரண்டும் ஒன்றே என்று புலப்படும். கிருஷ்ணன் என்பதும், கிறிஸ்து என்பதும் ஒன்றுதான். எழுத்தில் கொஞ்சம் வித்தியாசம். இரண்டும் மனச்சாட்சி என்பதைத்தான் குறிக்கிறது. அதாவது நாம் மனச்சாட்சிப் பிரகாரம் நடக்க வேண்டும். நடந்தால் தீமை உண்டாகாது. ஆனந்தமே நமக்கு உண்டாகும். இதைத்தான் கிறிஸ்துவர்கள் கிறிஸ்துவை நம்ப வேண்டும் என்கிறார்கள். தமிழர்கள் கிருஷ்ணனை நம்பவேண்டும் என்கிறார்கள். பதி, பசு, பாசம் என்பதைப்போல் நாம்தான் பசுக்கள், ஆடுமாடுகள். கிறிஸ்துகையில்இருக்கும் தலையில் வளைவுள்ள கோல் யானைப் பாகன் கையிலிருக்கும் அங்குசம் என்னும் கோலை ஒத்தது. பாகன் அதைக்கொண்டு யானையை அடக்கி நடத்துகிறான். அதுபோல் மதயானையை ஒத்த ஆணவம், அகங்காரம் என் னும் மலத்தை மனச்சாட்சி அடக்குகிறது. அதைப்போல் கிறிஸ்து அந்தக் கம்பினால் நமது ஆணவத்தை அடக்கி, மனச் சாட்சியாகிய கிறிஸ்துவும், கிருஷ்ணனும் ஆடு மாடுகளாகிய நம்மை சரிவர நடத்தி, அப்படி நடந்தால் கிருஷ்ணன் புல்லாங் குழல் வாசிப்பதுபோல் நமக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறது.

கிறிஸ்துவர்கள் நாம் பாபிளாய்ப் பிறந்திருக்கிறோம். அதாவது பாபம் செய்து பிறந்திருக்கிறோம். இதற்கு கிறிஸ்துவை நம்புங்கள் என்று சொல்லுகிறார்கள். பிறக்கும் போதே பாபத்தோடுபிறந்தோம்என்றால் அந்தப்பாபம் செய்த தற்கு ஒருபிறப்பு இருந்திருக்கவேண்டும். அதாவது முற் பிறப்பிருந்திருக்கவேண்டும். அந்தப் பாபத்தைப் போக்க கிறிஸ்துவை நம்புங்கள் என்றால், மனச் சாட்சியைக் கடைப் பிடித்து அதன் பிரகாம் நடக்கவேண்டும் என்பது.

இஸ்லாமியர் ஆண்டவன் மிகவும் நல்லவர், அன் புடையவர் என்கிறார்கள். நம்செய்கைக்குத் தக்கபடி அவர் தீர்ப்புக்கொடுப்பார். அதிலும் நாம்அநுபவிக்க உள்ளசக்திபடி தீர்ப்புக் கொடுப்பார் என்கிறார்கள். நாம் இறந்த பிறகு கடவு ளிடம் தீர்ப்புக்குப்போனால் அந்ததீர்ப்புஅநுபவிக்க நாம் எங்கு போவது? அதைத்தான் நாம், மறுபிறப்பு, நாம்செய்த க்ருமத் திற்கு ஏற்றபடி எடுக்கிறோம் என்பது. அதிலும் அவர்கள் அநுபவிக்கத்தக்க சக்திக்கு ஏற்றபடி தீர்ப்புக் கொடுக்கிறார்

என்றால், இன்னும் மிச்சம் வைத்திருக்கிறார் என்று அர்த்த மல்லவா? அதையேநாம் இந்தப்பிறவியில்அநுபவிக்கும் பாபத் திற்கு பிராரப்த கர்மம் என்றும், மிச்சம்வைக்கப்பட்டிருக்கும் பாபத்திற்கு சஞ்சித கர்மம் என்றும், மறுபடியும் இந்தப் பிறவியில் செய்யும் பாபச் செயல்களுக்கு ஆகாமிய கர்மம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது

மேல் நாட்டார் விஞ்ஞான ஆராய்ச்சியில் கண்ணுக்குப் புலப்படாதபடி இருக்கும் ஒரு வஸ்துவின் அணுவை இன்னும் பிரித்துப் பார்த்துக்கொண்டு போனபோது கடைசியாக அவர்களுக்குப் புலப்பட்டது பச்சை நிறம் ஒன்றும் சிகப்பு நிறம் ஒன்றும் தான்என்று சொல்லியிருக்கிறார்கள். இதையே தான் நம்மவர்கள், அம்மையப்பன், அவர்கள் தான் எல்லாப் பொருள்களின் அணுக்களிலும் இருக்கிறார்களென்று சொல் லுகிறார்கள். சிகப்பு நிறம் என்பது அம்மை. பச்சை என்பது அப்பன். அதாவது கடவுள் என்பவர் எல்லாப்பொருள் களிலும் இருக்கிறார் என்பது. எங்கும் பரவி இருக்கிறார் என்பது. நாம் எதைச்செய்தாலும் நினைத்தாலும் அவருக்குத் தெரியும் என்பது.

கிறிஸ்து மதத்தைத் தழுவின இஸ்லாமியர்கள் எல்லா ஆத்மாக்களிடத்தும் கிறிஸ்து இருக்கிறார் என்பதாகச் சொல்லுகிறார்கள் ஆத்மா என்பது நாம். நம்மிடத்தில் மனச்சாட்சி இருக்கிறது என்பதைக் குறிக்கிறது

---

## துணுக்குகள்.

திருப்பதி வெங்கடாசலபதி உருவம், சுப்பிரமணியர் உருவம் என்றுசிலரும், விஷ்ணுஉருவம் என்றுசிலரும் சொல் கிறார்கள். ஏதுவானாலும் அந்தக் கடவுளை, தெய்வத்தைக் காணவேண்டுமானால், ஏழுமலைகளைத் தாண்டித்தான் போக வேண்டியிருக்கிறது. அதுபோல் நாம் கடவுளைக்காண வேண்டு மானால் ஏழுவகைத் தோற்றங்களையும், நாம ரூபங்களையும் கடந்தால்தான் காணலாம்.

---

கோவில்களில் விழாநடத்தும் இரதமாவது நம் சரீரம். நம் சரீரத்திலுள்ள பஞ்ச கோசங்கள்போல், ஐந்து அடுக்கு களும் எட்டு அங்கங்கள்போல் எட்டுப்பக்கங்களும், பிறத்தல், பால்யம், கௌமாரம், யௌவனம், விருத்தாப்பியம், மரணம்

என்ற ஆறு பகுதிகள் போல் ஆறுசக்கரங்களும் அதமம், மத்திமம், உத்தமம் போன்ற மூன்று தட்டுகளும் இருக்கின்றன. உத்தம குணம் உள்ளவர்க்கே கடவுள் தரிசனம் கிடைப்பது போல் எல்லாவற்றிற்கும் மேல்தட்டில் கடவுள் உருவம் வைக்கப்படுகிறது.

---

இமயமலை என்பது மத்தியகாலத்தில் சமுத்திரத்திலிருந்து வெளிக்கிளம்பித் தோன்றிற்று. அதற்கு முன்னிருந்தே ஈசன் உளன். இமயமலையின் உச்சியில் இருக்கும் கைலாசத்தில் பரமசிவன் இருக்கிறார் என்பது, மேலான ஞானம் உண்டாகவேண்டுமானால், உலக ஞானத்திலிருந்து அதாவது உலக மட்டத்திலிருந்து மிகவும் மேலே செல்ல வேண்டுமென்பது. சிவன் அர்த்த நாரீசுவரன் என்பது பாதிபாகம் பெண்ணுருவம் உள்ளது. அவர் தொழில் புரிவதைப் பெண் உருவகப் படுத்தி அவரே தொழில் புரிவதால் அந்தப்பெண் உருவம் அவர் உருவத்தோடு சேர்த்து வைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அவருக்குத்தான் ஒரே மனைவி. அந்தத் தொழில் புரியும் ஈசன் இடபத்தின் மேலிருக்கிறான். இடபம் என்பது பசு—நாம் என்பதை உணர்த்துகிறது.

மற்ற தெய்வ உருவங்களுக்கு இரண்டு மனைவியர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை யாவன—இச்சாசக்தி, கிரியாசக்தி என்பன. சாதாரண சக்தியை இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

---

இதுபோல் ஸ்ரீவில்லிப் புத்தூரில் எக்கோவிலிலும் இல்லாதபடி மூல உருவத்தில் பெருமாளும், ஆண்டாளும், கருடனுமாகச் சேர்ந்து இருக்கின்றன. அதாவது பெருமாளும், இவர் தொழில் செய்யும் சக்தியும், பசுவாகிய கருடனில் இருக்கின்றன என்பதை உணர்த்துகிறது.

---

கோவிலில் கொடியேற்றுவிழாவில் ஒருதுணியில் இலிங்க உருவம் எழுதி அதற்குக்கீழ் இடப உருவம் எழுதி அந்தத்துணியைக் கொண்டு தர்ப்பைப் புற்கள் அநேகத்தைக் கம்பத்தைச் சேர்த்துச் சுற்றிக் கட்டப்பட்டு இருக்கிறது. பசு பதியில ஐக்கியமென்றும், நாமும் கடவுளும் ஒன்றென்றும், தர்ப்பைகளும் கம்பத்தில் கட்டப்படுவதுபோல் எல்லா சீவன்களும் கடவுளில் ஐக்கியமென்றும் உணர்த்துகிறது.

---

ஒரு ஈர்க்கில் மையெடுத்து நம் கண்ணுக்குத் தீட்டிக் கொள்ளுகிறோம். அப்போது அதை முதலில் கண்ணுக்குக் கொஞ்ச தூரத்தில் பிடித்துக் கொள்கிறோம். அப்போது அது நம் கண்ணுக்கு வேருகத் தோன்றுகிறது. பிறகு அதைக் கண்ணுக்கு சமீபமாகக் கொண்டுவரும்போது அது ஒரு சமயம் நமக்கு ஒன்ரு அல்லது இரண்டா என்று சந்தேகிக்கும்படி இரண்டாகத் தோன்றும். பிறகு கண்ணேடு சேர்ந்துவிட்டபோது ஒன்ருகப் போய்விடுகிறது. அது போல கடவுள் நமக்கு வேருகத் தோன்றும், அதுவே துவைதம். நாம் கிட்டப்போகப்போக, ஞானம் அதிகரிக்க அதிகரிக்க, நாமும் அதுவும் ஒன்ரு இரண்டா என்று சந்தேகிக்கும்படி தோன்றும். அதுவே துவைதாத்வைதம். பிறகு ஞானம் அதிகரித்து ஈசனுடன் இரண்டறக் கலக்கும்போது ஒன்ருகவே தோன்றும் அதுவே அத்வைதம்.

---

ஆலிலைமேல் விஷ்ணு பள்ளிகொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இது நம் இருதயத்தில், கடவுள், விஷ்ணு இருப்பதை உணர்த்துகிறது. இருதயத்தை இரண்டாக நீளவசத்தில் வெட்டி, வெட்டப்பட்ட பாகத்தைப் பார்த்தால் ஆலிலைபோல் காணப்படும். அந்த இருதயத்தின் மத்தியில் கடவுள் இருப்பதையே ஆலிலைமேல் கடவுள் இருப்பது உணர்த்துகிறது.

---

மனிதர்கள் உத்தம குணமுடையோர், மத்திமகுணமுடையோர், அதம குணமுடையோர் என அவரவர்கள் குணத்தைக் கொண்டு பிரிக்கப்பட்டிருக்கின்ருர்கள். உத்தம குணமுடையோர், சத்திய குணத்துடனும், அன்புடனும், மேன்மையான குணத்துடனும், இருப்பார்கள். இவர்கள் தாழ்ந்து இருக்கும் உலகப் பொருள்களில் அறிவை செலுத்தாமல் மேலான பரம்பொருளின்மேல் ஞானத்தை செலுத்திக் கொண்டிருப்பார்கள். இவர்களாற்ருன் பிரம்மம் என்ற கடவுளைக் காணமுடியும். இவர்களைத்தான் பிராமணன் என்று சொல்லத்தகும். இப்பேர்ப்பட்டவர்களுக்கு அறிவு விசேஷித்திருப்பதால் இவர்கள் படைத்த கர்த்தாவின் முகத்திலிருந்து உண்டானர்களென்று சொல்லப்படுகிருர்கள். மத்திம குணமுடையோர் மத்திம அறிவுடன் உலகப்பொருள்களில் கொஞ்சம் ஆசை வைப்பர். இதில் ஒரு சிலர் தன் கைப்பலத்தினல். பூமியைக் கைப்பற்றி, அந்தந்த வேலையில் ஈடுபட்டிருப்பார்கள். அதனல் இவர்கள் க்ஷத்திரியர்கள் என்றழைக்

கப்பட்டு, அந்தப்படைப்புக் கடவுளின் புஜத்திலிருந்து உற்பத்தியானவராகச் சொல்லப்படுகிறார்கள். மற்றொரு சிலர் பண்ப்பொருளில் ஈடுபட்டு வியர்பாரம் செய்து பொருளீட்டுவார்கள். இவர்களையே வைசியர் என அழைத்து அந்தப் படைப்புக் கர்த்தாவின் வயிற்றிலிருந்து உற்பத்தியானவர்கள் என்று சொல்லுகிறார்கள். அதம குணமுடையோர் நற்குணம் சிறிதுமில்லாமல் மிருகக் குணத்தையுடையோராகி பூமியில் தாழ்ந்த தொழிலில் ஈடுபட்டிருப்பார்கள். இவர்களைச் சூத்திரன் என்று அழைத்து அந்தப் படைப்புக் கர்த்தாவின் பாதத்திலிருந்து உற்பத்தியானவர்கள் என்று சொல்கிறார்கள் ஆகவே அவரவர் குணத்திலிருந்து பிரிக்கப்பட்டிருக்கிறார்களே தவிர பிறவியில் ஒன்றுமில்லை.

---

நமக்குவரும் குருக்களில் காரிய குருவென்றும், காரண குருவென்றும் இருதிறத்தார்கள் உண்டு. காரியகுரு சீடனின் நன்மையைத் தேடாமல் தன் சுயநலத்திற்காகக் குருவாக வரும் குரு. காரணகுருவோ அப்படியின்றி சீடனால் தனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை என்று சீடனின் நன்மைக்காக வேண்டியவற்றை உபதேசம் செய்பவர். அக்காரிய குருவிற்கோ அநேகமாக அவர் உபதேசம் செய்யவரும் விஷயம் தெரியாது. எல்லாருக்கும் தமக்குத் தெரிந்த ஏதோ ஒன்றைத்தான் உபதேசம் செய்ய வருவார். காரணகுருவோ எல்லாம் தெரிந்தவராக இருப்பார். இவர் எல்லாருக்கும் ஒரேவிதமாக இல்லாமல் அவரவர்கள் பக்குவத்திற் கேற்றவாறு உபதேசம் செய்வார்.

---

ஆதிகாலத்தில் இமயமலைப் பக்கமெல்லாம் சமுத்திரத்தில் மூழ்கியிருந்ததென்றும் அப்பொழுதும் நம் தென்தேசம் நாகரீகத்திலும், மதத்திலும் மிகச் சிறந்து விளங்கியதென்றும், அப்புறம் இமயமலை பக்கம் மேலே எழும்பத் தென்னாட்டார் சிலர் மேற்குத்திசைப்பக்கம் போய் அந்த மேனாட்டிலும் நாகரீகமும் மதமும் பரப்பினரென்பதும் மேனாட்டினராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அப்படி இருக்க அக்காலத்தில் எந்தக் காசிக்குப் போய், எந்த கங்கையில் ஸ்நானம் செய்து மோக்ஷம் பெற்றார்கள்? ஆகையால் அந்தக் காசிக்குப் போவதில் மாத்திரமும், கங்கையில் மூழ்குவதில் மாத்திரமும் மோக்ஷமில்லை என்றும், இப்பொழுதும்கூட சில பகுத்தறிவுள்ள தெய்வ வணக்கத்தார்கள் ஒப்புக்கொள்கிறார்கள். இருந்தும் அப்படிச் செய்வதின் விஷயம்தான்

என்னவென்ருல் நாம் முதலில் பக்திசெய்து உலக பாசங்களை நீக்கி மனதை ஒருநிலைப் படுத்தவேண்டுமென்பது. சிலகாலத்திற்கு முன் காசிபோவது என்பது மிகக் கடினம். தபால் தந்தி கிடையாது. இரயில் மோட்டார் முதலிய வசதிகள் கிடையாது. போய்வருவதென்ருல் சிலகாலம் பிடிக்கும். அப்போது நம் வீட்டையும் வீட்டிலுள்ளவர்களையும் அறவே மறந்து செல்லல் வேண்டும். அப்படிக்காசியாத்திரை என்றும் தீர்த்தயாத்திரை என்றும், மனதில் நினைத்து, அதையே ஞாபகத்தில் வைத்து, வீட்டையும், வீட்டிலுள்ள மனிதர்கள், சொத்துக்கள் மேல் மறதிவைத்துக் கடவுளை நினைத்துப்போய் காலம் சென்று வருவதால் மனதை உலக விஷயங்களைவிட்டு ஒருநிலைப் படுத்த பழக்கத்தான் ஏற்பட்டன. அதைவிட்டுப் பலவித ஆசைகளுடனும், தினமும் தபால் மூலமாகவும், தந்தி மூலமாகவும் எல்லாருடைய ஞாபகமும் வைத்துக்கொண்டும், ஒருநாளிலோ அல்லது ஒரு மாதத்திலோ போய் வருவதில் யாதொரு பிரயோசனமுமில்லை.

---

அரசமரத்தில் உண்டாகிற காற்றும், வேப்பமரத்தில் உண்டாகிற காற்றும் உடலுக்குச்சவுகரியத்தைக் கொடுக்கும். அதனுலேயே இவை இரண்டையும் சேர்த்துவைத்து அதையும் ஒரு தெய்வமாக்கிவிட்டார்கள்!

---

வில்வஇலையும் துளசிஇலையும் வேப்பஇலையும் உள்ளுக்குச்சாப்பிட்டால் நமது சரீரத்திற்குள்ளிருக்கும் அநேக கிருமிகளைக் கொன்று, தேகத்தைச் சுத்திசெய்கின்றன. ஆகவே அவைகளைத் தெய்வத்திற்கு உரியவை என்று அருந்துகிருர்கள்.

---

ஆலயங்களில் தெய்வத்தின் பெயரால் தேங்காய்களை உடைக்கிருர்கள். அப்படி உடைப்பதால் மண், நீர், தீ, வாயு, ஆகாயம் எல்லாம் வெளிப்படுகின்றன. இந்த உடலும் அந்த வஸ்துக்களால் ஆகியதென்றும், உடல் வீழ்ந்தால் அந்தப்படி ஐந்து வஸ்துக்களாக மாறிவிடுகிறதென்றும் தேங்காய் உடைப்பது குறிக்கிறது.

ஆயுதபூஜை என்பது சக்தியைப் பூசிக்கும் சாக்தர்களுடைய பண்டிகை. அதில் மூன்றுநாள் தியானம் செய்து, இச்சாசக்தியை வென்று, மறுபடியும் மூன்றுநாள் தியானம் செய்து கிரியா சக்தியை வென்று, மறுபடி மூன்றுநாள் தியானம் செய்து ஞான சக்தியை அடைந்து, பத்தாம் நாள்

ஞானத்தை அடைந்து, பிறகு ஞானமாகிய அம்பினால் அஞ்ஞானத்தைப் போக்குவதை விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. அது தற்காலம் எல்லாரும் ஆயுதபூசையென்று அவரவர்கள் உபயோகிக்கும் ஆயுதங்களைவைத்து பூசை செய்வதும், சரஸ்வதி பூஜையாக சரஸ்வதி படத்தையும், புஸ்தகங்களையும் வைத்து பூஜை செய்வதும், விஜயதசமி என்று சொல்லி வன்னிமரத்தில் அம்புபோடுகிறதுமாகக் களியாட்டமாக ஆய்விட்டது! இதைவிட மண் முதலிய வஸ்துக்களால் செய்யப்பட்ட பொம்மைகளை அலங்காரமாக அடுக்கிக் களியாடுவது அதிலும் விசேடமே!

---

ஒருசிலர் துறவி என்று சொல்லிக்கொண்டு காவி வஸ்திரம் அணிந்துகொள்ளுகிறார்கள். புறப்பற்று, அகப்பற்று என்பவைகளைத் துறந்தவர்கள் துறவியாவர். அதாவது தன் உடலுக்குப் புறம்பாக உள்ள வஸ்துக்களிடத்தும், விஷயங்களிடத்தும், ஆகாரம் முதலிய அகவிஷயங்களிலும் ஆசையை நீக்கி, சகலவித ஆசைகளையும் அறவே நீக்கினவர்கள் துறவிகள். இவர்கள் தங்கள் குணத்தைத் தெரியப்படுத்தக் காவி ஆடை தரிக்கிறார்கள். காவி என்பது நெருப்பின் நிறம். அந்த நிறமுள்ள ஆடைகளால் தம் உடலை மூடிக்கொள்வதால் தாம், தம் புறப்பற்று, அகப்பற்று, முதலிய எல்லாப்பற்றுகளையும் எரித்துவிட்டதாகப் பிறர்க்கு உணர்த்த அவ்வித ஆடை அணிகிறார்கள். சில மதக்குருக்கள் அம்மாதிரியே நெஞ்சிற்குக் கருப்புத்துணி போட்டு மூடியும், சிலர் கருப்புத்துணியால் ஒரே சட்டையாகப் போட்டும் உடலை மூடிக்கொள்கிறார்கள். அதாவது சிலர்தம் இருதயத்தை சகலவித கெட்டெண்ணங்களுமில்லாமல் தீய்த்துவிட்டதாகவும், சிலர் தம் சரீரத்திலேயே சகலவித தீய செயலும் எண்ணமும் இல்லாமல் தீய்த்துவிட்டதாகவும் குறிக்கக் கருப்பு ஆடை அணிகிறார்கள். சிலர் ஒரே வெள்ளைச்சட்டையால் சரீரத்தை மூடிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் அப்படியே பரிசுத்தமாய் விட்டதாகக் குறிக்கச் செய்கின்றார்கள். சிலர் இடுப்பில் கருப்பு அல்லது சிகப்பு நாடா கட்டிக்கொள்கின்றனர். இதுவும் அப்படியே தீய்ப்பதை அல்லது எறிப்பதைக் குறிக்கின்றது. சிலர் தலைக்கு ஒருவித அணி, அணிகிறார்கள். அதுவும் தீயின் உருவத்தைக் காட்டுகிறது.

---

சூரியன் ஒரு தெய்வமென்று சிலர் சூரிய நமஸ்காரம் செய்கிறார்கள். அதைக் கும்பிடுவதுடன் இரண்டு கைவிரல்

களையும் ஒருவிதமாக அமைத்து, மத்தியில் துவாரம் இருக்கும்படிசெய்து, அதைக் குறுக்கே வைத்து அந்தத் துவாரத்தின் வழியாய் சூரியனைக் கண்ணால் பார்க்கிறார்கள். சூரியன் ஒரு தெய்வம் அல்லவென்றும், அது நம் பூமியைப்போல் ஒரு வஸ்துதான் என்றும், எல்லோருக்கும் தெரிந்த விஷயம். தற்காலம் சூரிய நமஸ்காரம் செய்வது சரீரத்திற்கு மிகவும் சவுகரியத்தைக் கொடுக்கிறது என்றும், அப்படிச் செய்தால் அந்தச் சூரியனின் ஒளி அநேக கிருமிகளைக்கொன்று, அநேக வியாதிகளைத் தடுக்கிறதென்றும், இப்படி மேல் நாட்டாரிடமிருந்து நாம் தெரிந்து கொண்டோம். இதை அக்காலத்தில் செய்ததைத் தெய்வத்தின்பேரால் ஆக்கி விடப்பட்டது. சூரிய நமஸ்காரம் என்பது அந்த சூரிய ஒளியில் ஸ்நானம் செய்வது. விரல்களினால் செய்யப்பட்ட துவாரத்தால் சூரியனின் ஒளி நேராகக் கண்ணிற்பட முயல்வது, அப்படிச் செய்தால் கண்ணில் உண்டாகும் துர் நீரைப் போக்கி, சுத்தம் செய்து, சுகத்தைக் கொடுக்கிறது.

---

சில ஆலயங்களில் ஒரு தீபம் அடங்கிய தட்டு முதல் ஆறு தீபங்கள் அடங்கிய தட்டுவரை தெய்வமாகிய விக்ரகத்திற்குக் காட்டுகிறார்கள். அதாவது ஓரறிவு முதல் ஆறறிவுள்ள எல்லா சீவன்களும் அக்கடவுளில் ஐக்யம் என்று உணர்த்துகிறது.

---

கற்பூரம் கொளுத்திக் கோவிலில் காட்டுவது எப்படி அந்தக் கற்பூரம் மாயமாய் ஒன்றுமில்லாமல் மறைந்து விடுகிறதோ அதேபோல் நம்மால் அதிக ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்பட்ட இந்த உடலும் கடைசியில் ஒன்றுமில்லாமல் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடப் போகிறதென்பதை உணர்த்தவேதான்.

---

கடவுள் என்னும் உருவத்திற்குத் தருமம் என்பதன் பேரால் ஆயிரக் கணக்கிலும், இலட்சக் கணக்கிலும் நகை செய்து வருஷத்திற்கு ஒருமுறையோ, இருமுறையோ அந்த உருவத்தின்மேல் வைத்து நமது கண்ணாகிய இந்திரியத்திற்குச் சொற்ப நேரம் மகிழ்ச்சி கொடுத்து மற்ற காலங்களில் அவ்வளவு பெரிய தொகையை ஒருவருக்கும் பிரயோசனப்படாமல் ஒரு இரும்புப் பெட்டியில்வைத்து பத்திரப்படுத்துவது ஒரு தர்மமா? அந்தக்கடவுள் என்னும் உருவத்திற்கு உற்சவம்

என்பதின் பெயரால் நூற்றுக்கணக்கில் செலவுசெய்து வாண வேடிக்கை என்றுவைத்து நமது கண்ணுகிய இந்திரியத்திற்கு சொற்பநேரம் சந்தோஷமளிப்பது ஒரு தர்மமா?

அந்தக் கடவுள் என்னும் உருவத்திற்கு உத்சவம் என்பதன் பெயரால் நூற்றுக்கணக்காகச் செலவு செய்து ஒருசங்கீதக் கச்சேரி என்று வைத்து நமது செவி என்னும் இந்திரியத்திற்கு சொற்பநேரம் சந்தோஷத்தைக் கொடுப்பது ஒரு தர்மமா?

அந்தகடவுள் என்னும் உருவத்திற்கு உத்சவம் என்பதன் பெயரால் நூற்றுக்கணக்காகச் செலவு செய்து ஒரு நாட்டியக் கச்சேரி வைத்து அந்த உருவத்தின் முன் ஒரு வேசிப்பெண்ணை நடிக்கச் சொல்லி நமது செவி கண் ஆகிய இந்திரியங்களுக்குச் சிறிது நேரம் சந்தோஷம் கொடுப்பது ஓர் தர்மமா?

அந்த கடவுள் என்னும் உருவத்திற்கு உத்சவம் என்பதன் பெயரால் அநேகவித அன்னங்கள்செய்து அந்த உருவத்திற்குக் காட்டி நாம் உண்டு நாவாகிய இந்திரியத்திற்குச் சிறிதுநேரம் சந்தோஷம் கொடுப்பது ஓர் தர்மமா?

அநேக கள்ளர்களுக்கும், கொலைஞர்களுக்கும், சோம்பேறிகளுக்கும் பொய் சொல்லி ஏமாற்றுதல், முதலிய அநேக விதமான துற்செய்கைகள் உடைய தீயவர்களுக்கும் அன்னமிடுதல், ஆடை தருதல், என்பன செய்து அவர்கள் துர்ச் செயல்களுக்கு உடந்தையாயிருப்பது ஒரு தர்மமா?

சகலவித உயிருள்ள சீவன்களும் நம்மைப்போன்ற சீவன்கள் என்றுணர்ந்து அன்புடன் அவைகளுக்கு இம்சை உண்டாகாமல் பார்த்து அதற்கு வேண்டிய பரிகாரங்கள் செய்வது தர்மமா?

நம்மைப்போல் மனிதர் எல்லாரும் ஒன்று என்ப் பாவித்து அன்புடன் அவர்கள் யாருக்காவது ஏதாவது கஷ்டம் வந்தால் அவர்களுக்கு இயலாதபொழுது உதவிசெய்து அவர்கள் கஷ்டங்களைத் தீர்ப்பது தர்மமா?

தன்னையும் தன் உணவையும் மறந்து சதா ஈசுவரத் தியானத்திலிருப்பவர்களுக்கு அவர்கள் பசிவேளையில் உதவி செய்து அவர்கள் ஈசுவரத் தியானத்திற்குத் துணையாயிருப்பது தர்மமா?

---

அநுட்டானம் என்பது மூன்று பகுதியுள்ளது. (1) ஆசமநீயம் (2) பிராணயாமம் (3) மந்திரஜபம்.

ஆசமநீயமென்பது சிறுஜலத்தை உட்கொள்ளுவதால் இருதயத்தைச் சுத்தம் செய்வது என்ற பாவனையாய் மனதை எவ்வித கெட்ட எண்ணமும் அணுகவொட்டாமல் சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டுமென்பது.

பிராணயாமம் என்ற மூச்சைக் கணக்காக உள்ளுக்குள் விட்டு சிறிதுநேரம் இருக்கச்செய்து பிறகு கணக்காக வெளி யிடுவதனுல் அநேக வியாதிகளை வரவொட்டாமல் தடுப்பது.

மந்திரஜபம் என்பது நமது இந்திரியங்களை எவ்வித உலக விஷயங்களிலுமிருந்து நிவர்த்தித்து மனதை ஒரே நிலை யில் இருக்கப் பழக்குகிறது.

---

நமஸ்காரம் என்பது நாம் காணும் ஒருவருக்கு வந் தனம் செய்வது; இது மூன்று விதம்.

1. இரண்டு கைகளையும் ஒன்றுகச் சேர்த்து மார்புக்கு நேரே தூக்குவது. இது சாமான்யமாய் நமக்குச் சமமாய் இருப்பவர்களுக்கு செய்வது. இருகைகளும் ஒன்று சேர்வது போல் இருநண்பர்களின் ஆத்மாக்களும் ஒன்றே என்றும், அதுவும் மார்புக்கு நேரே தூக்குவதால் அந்த ஆத்மா இரு தயத்திலிருக்கிறதென்றும் உணர்த்துகிறது.

2. இரண்டு கைகளையும் ஒன்றுசேர்த்து முகத்திற்கு நேராகத் தூக்குவது. இது நம்மிலும் பெரியோராகிய குரு, ஆச்சாரியர் முதலியவர்களைக் கண்டால் செய்வது. குரு ஆச்சாரியர் முதலியவர்கள் நம்மிலும் மேம்பாடு உடைய வர்கள். ஞானம் விருத்தியானவர்கள். அதற்குக் காரணம் மூளையின் விரிவே. அந்த மூளையின் இருப்பிடமாகிய தலை அல்லது முகத்திற்கு நேரே தூக்குவது அதைக் குறிக்கிறது.

3. தெய்வத்தை, கடவுளைக் கண்டால் அப்படிச் சேர்த்த கைகளை தலைக்குமேல் தூக்குவது. அந்தத் தெய்வம் கடவுள் நம்மிலும் மேம்பட்டது என்பதைத் தலைக்குமேல் தூக்குவது காண்பிக்கிறது.

---

"திரிதண்டம்" என்பது மூன்று கம்புகளை ஒன்றுய்ச் சேர்த்துக் கட்டி, அதன் நுனியில் காவித்துணியால் ஒரு சிறு கொடிகட்டியிருக்கும். அதாவது அதைப் பிடித்திருப் பவர்கள் (1) ஆணவம், கன்மம், மாயை (2) சகலவித ஆசை, குரோதம், லோபம் (3) இவைகளை செய்கையிலும், வாக்கி லுைம், மனதினுலும் எரித்து விட்டதை உணர்த்த.

"யோகதண்டம்" என்பது ஒரு கவைமாதிரி கம்பை மற்றொரு நீண்ட கம்பியின் நுனியில் பொருந்தியுள்ளது. இது அக்குளில் வைத்து, இடுக்கி, நாடியை அடக்கி, ஒரு நாடியிலிருந்து மற்றொரு நாடிக்கு மூச்சை மாற்றுவது. இப்படிக் காலத்திற்குத் தக்கபடி மாற்றி யோகம் செய்பவர்கள் உபயோகப் படுத்துவார்கள். இதை இப்போது வெறும் பேர்வழிகள் உலகத்தாரை ஏமாற்ற, கையிலேந்தித்திரிகிறார்கள்.

---

இந்தியர்கள் யோகம் அல்லது ஜபம் செய்யும்போது அவர்கள் இருப்பதற்கு அநேகவித இருப்புகள் அவரவர்கள் ஆராய்ச்சிக் கேற்ப விதிக்கப் பட்டிருக்கிறது. அவைகளில் இடதுகாலின் குதிங்காலை, ஆசனத்திற்கும், மர்மஸ்தானத்திற்கும் மத்தியிலிருக்கும்படி வைத்து அதன்பேரில் உட்கார்ந்து ஜபம் செய்வது ஒன்று இதையேதான் கிறிஸ்துவர்கள் மாதாகோவில்களில் ஜபம் செய்யும் போது ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. ஆனால் தற்கால நாகரீக உடைகளினால், மேனாட்டினர்க்கு அவ்விதம் செய்ய முடியாமல் சும்மா முழங்காலிட்டிருந்து ஜபம் செய்கிறார்கள். ஆனால் இஸ்லாமியர் மட்டும் அதே போல்தான் இன்னும் இடதுகாலை மடக்கி உட்கார்ந்து ஜபம் செய்கிறார்கள். தவிர இந்தியர்களில் ஜபம் செய்யும் பொழுது தமது நாடிகளைத் தளரச் செய்தால் ஜபம் செய்யும்பொழுது அனுகூலமாயிருக்கும் என்று தெரிந்து, தங்கள் மதக்குறிகளை முக்கியமான நாடிகளிருக்குமிடங்களிலிட்டு ஜபம் செய்கிறார்கள். அப்படி நாடிகள் இருக்கும் பாகங்களில் தொப்புள் ஒன்றென்றும், மேல்வயிறு ஒன்றென்றும், சொல்லப்பட்டிருக்கிறது. இதை முன்னிட்டே தான் இஸ்லாமியர்கள் ஜபம் செய்யும்போது சிலர் தங்கள் இருகைகளையும் சேர்த்துத் தொப்புளின் மேலே வைத்தும் வேறு சிலர் மேல்வயிற்றின்மேல் வைத்தும் ஜபம் செய்கிறார்கள்.

---

கடை மாணாக்கர்கள் படித்தவைகளில் சத்தை விட்டுவிட்டு அசத்தைப் பிடித்துக் கொள்வார்கள். தலைமாணாக்கர்களோ அசத்தை விட்டுவிட்டு சத்தை எடுத்துக்கொள்வார்கள். ஒரு மரத்தினால் செய்யப்பட்ட யானையை மரத்தில் தேர்ச்சிபெற்று, அதில் அதிகப் பற்றுமுடைய ஒருவன் கண்டால், அம்மரத்தின் சிலாக்யத்தையும், விளைந்த தன்மையையும், தைலப்பசையுள்ளதையும், கணு, வெடிப்பு முதலி

யன இல்லாததையும் தான் அவன் அதிகமாகக் கவனிப்பான். தச்சுவேலையில் திறமைபெற்ற ஒருவன் கண்டால் அதன் வேலைத் திறமையையும், எவ்வளவு அவயவங்கள் இயற்கை மாதிரி செய்யப் பட்டிருக்கிறது முதலியவற்றையும் முக்கிய மாகக் கவனிப்பான்.

அதுபோல் அடியார்கள் சரித்திரத்தைப் படிக்கும் வித்வான்கள் அச்சரித்திரக் காவியத்தின் அழகையும், நயத்தையும், இடத்திற்கேற்ப பதங்களைப் பொருக்கி அமைத்திருக்கும் திறமையைப்பற்றி புகழ்வார்கள். ஞானத்தில்பற்றுள்ள ஒருவர் அந்த நயங்களை எல்லாம்விட்டு அந்தக் கவிகளிலிருக்கும் ஞான ரசத்தையே கவனிப்பார். அதுபோல் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் முதலியவற்றைக் கண்ட வித்வான்கள் அவைகளின் சொல் திறமையையே கவனிப்பார்கள். ஞானத்தில் பற்றுள்ளவர்கள் அவைகளிலிருக்கும் ஞான ரசத்தையே கவனிப்பார்கள். அன்பே சிவமென்பதை உணர்ந்த அடியார்கள் தங்கள் அன்பினுல் முடிபெய்தியதைத் தங்கள் சரித வாயிலாகக் காட்டி இருக்கிறூர்கள். அவர்கள் சரித்திரங்களைக் கவனித்தால் அவர்கள் அன்பு தங்களை அறவே மறந்து செய்த, அன்பு என்று விளங்கும். அந்த அன்பு நான்குவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (1) ஆட்கள் எசமானனிடத்தில் காட்டும், அன்பு. (2) பிள்ளை தன் பெற்றோருக்குச் செய்யும் அன்பு. (3) தோழன், தோழனுக்குச் செய்யும் அன்பு. (4) தானே அதுவாகப் பாவித்துச் செய்யு மன்பு. தேவாரம் பாடிய நால்வர்களில், திருநாவுக்கரசர் சரித்திரம் ஒன்ருவது வித அன்பிற்கும், திருஞானசம்பந்தர் சரித்திரம் இரண்டாவதுவித அன்பிற்கும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூன்ருவதுவித அன்பிற்கும், மாணிக்கவாசகர் சரித்திரம் நான்காவதுவித அன்பிற்கும் இலக்காக உள்ளது.

அடியார்களில் கண்ணப்பர் சரித்திரம் மற்ற அடியார்களின் அன்பைக்காட்டலும் மேலான அன்பை உணர்த்துகிறது ஆகவே தான் மற்றவர்கள் வருஷங்களுக்குப் பிறகு முடிவை யடைந்தார்கள். கண்ணப்பரோ ஆறே நாட்களில் முடிவைக் கண்டார். அவரது அன்பு, ஒருஉண்மைத் தாய் தன், சேய்க்குச் செய்யும் அன்பிற்கு மேலாயிருந்தது. அந்த சரித்திரத்தில் அதே இலிங்கத்தை பூசை செய்த சிவகோசரியார் செய்த அன்பிற்கும், இவரது மறந்த, முதிர்ந்த அன்பிற்கும் வித்தியாசம் காட்டப்பட்டிருக்கிறது. வேடுவ அரசகுமாரனுகிய இவர், வேட்டையாடிக் களைத்து தாகமெடுத்து, தண்ணீர் அருந்த ஆற்றுக்குப் போன இவர், அங்கே கண்ட கோவிலை

வேடிக்கைப் பார்க்கப் போன இவர், அந்த இலிங்கத்தைக் கண்டவுடன் மேற்சொன்ன அன்பு தோன்ற தான் இன்னான் என்பதையும் எதற்காக வந்தோம் என்பதையும் அறவே மறந்து, தன் தாகத்தையும் பசியையும் மறந்து, வீடுவாசல், பெற்றோர், உறவினர் யாவரையும் மறந்து, தூக்கத்தையும் மறந்து, தான் செய்யும் காரியங்கள் இன்னதென்றும் உணராமல், அன்பே காரணமாய் தன் கண்களைத் தானே தோண்டினார் என்றால் அவரது அன்பிற்கு எல்லைதான் உண்டா? அதைப்பற்றிச் சொல்லத்தான் முடியுமா? இவரது அன்பு யாதொன்றிலும் இச்சை கொஞ்சமுமில்லாத அன்பு அப்பேர் பட்ட அன்பைக் கொண்டவர்கள் அவ்வளவு சீக்கிரத்தில் முடிபைக் காண்பார்கள்.

---

ஓம்=அஉம்=சிவய=சிவனும் சீவனும் நம்மில் இருக்கிறார்கள். அஉய—எட்டும் இரண்டும் ௐ பத்து = ஐ = ⌒ என்பது அவின் பாகம், ℓ என்பது உவின் பாகம், அ=8, உ=2, ய=10.

---

ஏழு மரா மரங்களையும் இராமர் ஒரே அம்பால் துளைத்ததைப் போல் அஞ்ஞானத்தால் உண்டாகும் எழுவகைத்தோற்றங்களை ஞானத்தால் தொலைக்கவேண்டும். இராமர் என்பது ஞானம். மரா மரமென்பது அஞ்ஞானம்.

---

இராமாயணம் என்பது பாரதத்தைப் போல் ஒரு புராணம். புராணம் என்றாலே பொய்க்கதை என்று அர்த்தம். அதிலிருந்தே அது உண்மை சரித்திரம் அல்லவென்று விளங்கும். நாம் உலகத்தில் செய்யவேண்டியதையே இராமாயணக் கதையாக எழுதப்பட்டிருக்கிறது. நமக்கு முக்திக்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன விதிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளினால் கடைசியில் ஞானத்தால் காமத்தையும், வஞ்சனையையும், மாய இருளையும், கன்மத்தையும், ஆணவத்தையும் போக்க வேண்டும். இதுவே இராமாயணக் கதை. இராமர் என்பது ஞானம், இலக்குமணன் என்பது யோகம், சீதை என்பது சக்தி, பரதன் என்பது கிரியை, சத்துருக்கன் என்பது சரியை, சூர்ப்பநகை என்பது காமம், மாரீசன் என்பது வஞ்சகம், கும்பகர்ணன் என்பது மாயையாகிய இருள், இந்திரசித்து என்பதே கன்மம், இராவணன் என்பது ஆணவம், சடாயு என்பது வாயுவை அடக்கிச் செய்யும் ஜபம். அனுமான் என்பது அன்பு.

உலக விருத்தியையே விஷ்ணு பலவித அவதாரமாக எடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நாமிருக்கும் உலகம் சூரியன், சந்திரன் போன்ற நட்சத்திர வடிவங்களில் ஒன்று. இது முதலில் வெளியிலிருந்து ஆகாயமாகி, அதிலிருந்து வாயுவாகி, அதிலிருந்து தீயாகி, அதிலிருந்து நீராகி, அதிலிருந்து மண்ணுகி, மண்ணின்மேல் சகலவித சீவன்களாகி உண்டாகியிருக்கிறது. அப்படி உண்டாகும் காலம் முதற் கொண்டு இப்பூமிதன்னைத் தானே வெகுவேகமாய் சுற்றிக் கொண்டேயிருக்கிறது. அப்படி நீராகி இருக்கும் போது, தன்னைத்தானே சுற்றும்போது, நீரிலிருந்து சிறுமண் துணுக்குகள் உண்டாகி, அப்படிச் சுழலும்போது அத் துணுக்குகள் ஒன்றுசேர்த்து நீண்டு, உருண்டு முனையிரண்டும் சற்று குறுகி இருக்கும். அப்போது அது ஒரு (மச்சம்) மீன் உருவம் போலிருக்கும். இன்னும் சுழலச்சுழல அது நீளம் குறுகி கனத்துவரும். அப்போது அது ஆமை உருவமாய (கூர்மம்) தோன்றும், இன்னும் சுழல, அது ஒரு கொழுத்த பன்றி (வராகம்) உருவம்போலிருக்கும், இன்னும் சுழல, இன்னும் மண்சேர அது அந்த நீருக்குமேல் வெளித் தோன்றும். அப்போது அது ஒரு சிங்க (நரசிம்மம்) உருவமாய்த் தோன்றும். இந்த மாறுதலாகிய தோற்றங்களையே விஷ்ணு மச்சாவதாரம் எடுத்தார் என்றும், கூர்மாவதாரம் எடுத்தாரென்றும், வராகவதாரம் எடுத்தாரென்றும், நரசிம்மாவதாரம் எடுத்தாரென்றும், சொல்லி அதற்கேற்ப அந்தந்த அவதாரத்தில் விஷ்ணு செய்ததாக சில நம்பத்தகாத அசிங்கமான கதைகளைக் கட்டிவிட்டார்கள்.

---

சிவன் கோவில்களில் பூசை செய்பவர், உருவத்திற்கு விளக்கு முதலியவை காட்டுமுன் அவைகளை ஒரு பலகையின் மேல்வைத்து, ஒரு பூவை எடுத்து, தன் இரண்டு கைகளுக்கு மிடையே இடிக்கி, இரண்டு கைகளையும் கும்பிடுவதுபோல் சேர்த்து, நெஞ்சுக்கு நேர்வைத்து, மனதில் கடவுளை நினைத்து இரண்டு கைகளையும் பிறகு மூக்கின் நேரே வரும்படி தூக்கி, மறுபடி நெற்றிக்கு நேர் வரும்படி தூக்கி, பிறகு தலைக்குமேல் தூக்கி, அந்த மலரை விளக்கு முதலியவைகள் மேல்போட்டு பிறகு விளக்கு முதலியவைகளை ஒவ்வொன்ருய் எடுத்து உருவத்திற்கு அருகே கொண்டுபோய் காட்டி, மறுபடியும் அந்த பலகையில்வைத்து, இருகைகளையும் மெதுவாகத் தட்டி உட்கை, புறங்கைகள் ஒன்றைஒன்று தடவி, கடைசியாய் இரண்டு உட்கைகளையும் மார்புபுறம் திருப்பி, கைகளை உட்புறம் மடக்கு

வார்கள், எதற்காகவென்றால் கடவுள் அந்த உருவத்தில் இல்லை, நம் மனதில் இருக்கிறார். அப்படி இருக்கும் கடவுளை மனதில் நினைத்து இரண்டு கைகளிலும் இடுக்கியிருக்கும் பூவினில் வரவழைத்து, மூக்கு நெற்றி, தலை இவைகளுக்கு நேரே கைகள்கொண்டுவந்து தூக்குவதினால் கடவுளை அதில் இருத்தி, அந்த மலரை விளக்கின்மேல் போடுவதினால் கடவுளை அந்த விளக்குகளில் இருக்கச்செய்து, விளக்குகளை உருவத்திற்கு காட்டுவதினால் கடவுள் அந்த உருவத்தில் வரச்செய்து, தொழுது, பிறகு கைகளைத்தட்டி, துடைத்து மார்புபக்கம் மடக்குவதால் அந்தக் கடவுளை மறுபடியும் இருதயத்தில் வரவழைத்துக் கொள்ளுவதாகப் பொருள்.

---

சிவன் கோவில்களில் பள்ளியறைக்கு கடவுளும் அவர் மனைவி பார்வதியும் போவதாகவைத்து, இரு உருவங்களையும், கட்டில், மெத்தை, முகம் பார்க்கும் கண்ணாடி, பால், வெற்றிலை பாக்கு முதலியன வைத்த ஓர் அறையில்வைத்து மறுநாள் எடுத்துச் செல்லுகிறார்கள். என்னே இவர்கள் மதி? மனம், வாக்குக்கெல்லாம் எட்டாதவர், எல்லாம் கடந்தவர் என்று சொல்லி அதே மூச்சில் அவர் ஒரு சாதாரண மனிதனிலும் கேடாக நடத்துகிற மாதிரி தன் மனைவியுடன் ஒவ்வொரு நாளும் இரவில் பள்ளியறையில் போவதாக வைப்பதை என்னவென்று சொல்லுவது? இதன்பொருள் என்னென்றால் கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்பன செய்யும் தொழிலை சக்தி என்ற ஒரு பெண் தெய்வமாகப் பாவிக்கப்பட்டிருக்கிறது. அத்தொழில் நின்றால் அந்தப் பெண் தெய்வம் கடவுளுடன் போய் ஒடுங்கி விடுகிறது. நாம் பகலெல்லாம் தொழில்செய்து இரவில் தொழிலற்று உறங்குவதுபோல் நம்மில் இருக்கும் கடவுளும் அம்மாதிரி இரவில் தொழிலற்று இருக்கிற மாதிரி தொழில் செய்யும் சக்தி அவருடன் ஒடுங்கி விடுகிறது.

---

யோகம் செய்யவேண்டுமானால் கொடுக்கப்பட்டிருக்கும் 32 ஆசன விதிகளில் ஏதாவது ஒன்றின் பிரகாரம் இருந்து கொண்டு இடுப்பு, நெஞ்சு, கழுத்து, தலை முதலியவைகளை நேராக இருக்கச் செய்துகொண்டு செபிக்கவேண்டும். அப்படியிருந்துகொண்டு செய்தால்தான் நாடிகள் சரியே ஓடும். இல்லாவிட்டால் அந்தந்த இடங்களில் முடுக்கப் பட்டுக் கிடந்து விடும்.

---

கைலாசம் என்பது நம்தலையில உச்சியில் இருக்கும் சகஸ்ராதார நாடி. இதைக் கிளப்புவதே கைலாச தரிசனம்

வௌவால் கால் மேலாக வைத்து தலைகீழாக இருந்து பழம் சாப்பிடுவது போல் நாமும் நமது அடிவயிற்றில் மூலாதாரத்தில் குண்டலியில் இருக்கும் நாடியை மேலே கிளப்பி சகஸ்ராதாரம், கைலாசம் இருக்கும் இடத்திற்கு செல்லவிடுவதே ஞானம். அந்த நாடி போகும் மார்க்கமே ஓ. இதுவே ஓ என்னும் ஓங்கார எழுத்து.

---

திருவண்ணாமலை தீபதரிசனம் என்பது திருவண்ணாமலையின் மேல் வைக்கப்படும் ஒரு பெரிய தீபத்தைக் காண்பது. திருவண்ணாமலை ஒரு சிறிய மலை. அது முக்கோண வடிவமாக உள்ளது. முக்கோணமாக இருப்பது தீ. தீயில் உண்டாவது சுடர் அல்லது சோதி. இருக்கும் ஒன்றை சோதி உருவமாக முதலில் காணவேண்டியிருக்கிறது. அப்படிக் காண்பதையே திருவண்ணாமலை தீபதரிசனமாக வைக்கப்பட்டிருக்கிறது.

---

முதலில் மதுரைப் பட்டணம் உண்டாக்கப்பட்டபோது அதை ஓ என்ற உருவம் வரும்படி அமைக்கப்பட்டது. அப்படி அமைக்கப்பட்ட ஊரில் தலைவளைவின் மத்தியில் கோயில் அமைத்து அந்தக்கோயிலில் சொக்கர், மீனாட்சி என்ற சாமிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. அதிலும் அந்த ஊரில் மீனாட்சிக்கே முதற் சிறப்பு. சொக்கர் என்றது முடிவான ஞானம். மீனாட்சி என்பது அதற்கு முதலில் வேண்டிய சக்தி, அந்த சக்தியால் நாம் அந்த ஊர் அமைப்பாகிய முதல் எழுத்தில் ஆரம்பமாகிய நமது குண்டலியில் அடங்கிக்கிடக்கும் நாடியை, வாசியை, வாலையை, சோகம் என்பதில், அம் என்னும் ஒலிப்புடன் கிளம்பி, உச்சியாகிய ஞான நாடிக்குப் போகச்செய்யவேண்டும் அப்படிச் செய்தால் அதாவது அந்த நிலைக்கு வந்தால், உலகத்திலுள்ள யாதொன்றும் நமக்கு எதுவும் செய்ய முடியாது. இதை உணர்த்தவே திருவிளையாடற் புராணம் என்பது அவ்விடத்தில் நடந்ததாக இருக்கிறது. ஆகையால்தான், அதுவேயான மாணிக்க வாசக சுவாமிகளுக்குப் பாண்டியனால் எவ்வித இடையூறும் செய்யமுடியாமல் சொக்கரே வந்து காத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

---

நம் உலகத்திற்குமேல் ஏழுலகமும், கீழ் ஏழுலகமும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நம் கண் முன் இருக்

கும், நாம் காணும், இவ்வுலகமே பொய், மயக்கம், மாயை என்று ஞானிகளால் சொல்லப்படும்போது, மேல்ஏழு கீழ்ஏழு என்று மற்ற உலகங்கள் எப்படி இருக்க முடியும்? ஆனால் பேர் மாற்றிக் கூறும் தோரணையில் அந்த மேல்ஏழு கீழ் ஏழு உலகங்கள் என்னவென்றால், மனித வர்க்கத்தின் நற் குணங்கள், நல்லறிவு கூடிய படிகள், வித்தியாசங்கள் ஏழு என்றும், அதுபோல் கெட்ட குணங்கள், கெட்ட அறிவு கூறிய படிகள், வித்தியாசங்கள் ஏழு என்றும் உணரவேண்டும்.

---

சுப்பிரமணியர் காவடி எடுத்து ஆடினதாக சொல்லப் பட்டிருக்கிறது. காவடி என்பது நாம் ஜனனம் எடுத்துப் பிறந்து, இறந்து ஆடுவதைக் குறிக்கின்றது. சுப்பிரமணியர் என்பது ஞானம் என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி ஒருவனுக்கு ஞானம் உண்டானால் இறப்பு பிறப்பு அற்றுப்போகும் என்பதைக் குறிக்கிறது.

---

யோகத்தினால் நமக்குக்கிடைக்கும் பலன் பத்து. அவை யாவன:—(1) உரோம துவாரங்கள் வழியாக கெட்ட நீர்கள் வியர்வையாகக் கசியும், (2) முத்தோஷமாகிய வாத, பித்த, சிலேத்தும தோஷம் நீங்கும், (3) பழைய கெட்ட உதிரங்கள் கசியும், (4) சர்ப்பம் தோல் உரிப்பதுபோல் சரீரத்தில் தோல் உரியும், (5) சட்டை கழன்று சிவக்தநிறமாய் பஞ்சமூர்த்திகள் கோரியதுவரும், (6) சட்டை கழன்று சுழி முனை வாசல் திறந்து, தூரதிருஷ்டி தெரியும், (7) சட்டை பெரும் பாகம் கழன்று தேகம் தீபம்போல் பிரகாசிக்கும், (8) சடத்தை உயரத்தூக்கும்படி இலேசாக ஆகும்—கூடு விட்டுக் கூடு பாயும், (9) சூரிய பிரகாசமாய் அஷ்டமாசித்தியும் கைலாய தேகமாய் தேவர்கள் ஏவல் புரிவர், (10) தேகம் தீபம்போல் பிரகாசித்து தேகத்தை வெட்ட கத்தியாலும் முடியாமல், சொரூப சித்தி கிடைக்கும். அண்டத்தில் மௌனம்; நரை, திரை, மூப்பு, பிணி, மரணம் கிடையாது.

அஷ்டமா சித்திகள்:—(1)சின்ன அணுக்களிலும் புகுதல் (2) விஸ்வ ரூபமாய்த் தோன்றுதல், (3) அதிக பளுவாக இருத்தல், (4) தக்கையைப்போல் இலேசாகக் காட்டல். (5) சூரிய சந்திரனை வசப்படுத்தல், (6) பிறர் காயத்தில் நுழைந்து நினைத்தவரிடம் அக்கணமே தோன்றல், (7) பஞ்ச கிருத்தி யத் தொழிலை நடத்தல் (8) அண்டமுதல் அனைவரையும் தன் வசமாக இருக்கச் செய்தல்.

பொங்கல் பண்டிகை.—இது தமிழர் பண்டிகையாக இருந்து ஆரியர் பண்டிகையாவும் ஆய்விட்டது. ஆரியர்கள், அன்று அதாவது தை மாதம் முதல்தேதியன்று சூரியன் தன் ஒற்றைச் சக்கரத்தை வடதிசை நோக்கிச் செலுத்துகிறான் என்று, உத்திராயண பண்டிகை என்று வைத்து சூரியனை வணங்குகிறார்கள். தமிழர்களும் அவர்களுடன் பழகி சூரியனுக்கு என்று பொங்கல் இடுகிறார்கள். தற்காலத்தில் எவ்வளவு படித்தும் சூரியன் ஒரு நெருப்பு உருண்டை என்றும்




அது நகர்வதில்லை என்றும், பூமிதான் அதைச் சுற்றிவருகிறதென்றும் தெரிந்தும், அப்படி வடக்கே போவதாக தோன்றுவதும் இந்த நாளைக்கு சுமார் 14 நாளைக்கு முன்னதாகவே இருந்தும் இன்னும் அன்றுதான் சூரியன் தன் இரதத்தை வடக்கே திருப்பி ஓட்டுகிறான் என்றால் நாம் அவர்களைப் பார்த்து சிரிப்பதைத் தவிர வேறு என்ன செய்வது. நாம் படித்துத்தெரிந்து கொண்டது என்னவென்றால் பூமி சூரியனைச் சுற்றி வருகிறது. அப்போது பூமி நேராக மேல் கிழாக நின்று சுற்றுவதில்லை. வடமேற்கு மூலைகொஞ்சம்

சாய்ந்ததுபோல் இருந்து கொண்டுதான் தன்னைத் தானே சுற்றிக்கொண்டும், சூரியனைச் சுற்றிக்கொண்டும் வருகிறது. அப்படி வரும்போது வடக்குக் கோடியில் இருக்கும்போது சூரியன் நமது பூமி மத்தியபாகத்தில் தோன்றுது. அதற்குக் கொஞ்சம் கீழாக மகரசக்கிரம் என்னும் பாகத்தில்தோன்றும். அன்றுதான் தைமாதம் முதல்தேதிஎன்று சொல்வது அன்று முதல் பூமி சூரியனுக்கு வட பாகத்திலிருந்து மேற்கு முகமாய் வந்து தெற்குக் கோடிக்குவரும். அப்போது அந்த சூரியன் அந்த மகர சக்கரத்தின் பாகத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக மேலாகத் தோன்றி தென் கோடியில் வரும்போது சூரியன் கடக சக்கரம் இருக்கும் மார்க்கத்தில் (மத்திய பாகத்திற்குமேல்) தோன்றும். இதைத்தான் சூரியனின் இரதம் வடக்கே திரும்புகிறது என்று வைத்துவிட்டார்கள்.

தமிழர் பண்டிகை என்னவென்றல் தமிழர் எப்போதும் இயற்கையைக் கண்டு மகிழ்ந்து, குடும்பத்தார், சுற்றத்தார்களுடன் மகிழ்ந்து இருப்பார்கள். அந்த தினத்திற்கு முன் ஒருமாதம், நம் பூமி சூரியனின் வடகிழக்கு மூலைபக்கம் வரும்பொழுது (அதாவது மார்கழி மாதம்) காற்று வித்தியாசப்பட்டு குளிர் அதிகரித்து பனி உண்டாகிறது. அந்த காலந்தான் நம் சரீரத்திற்குப் பலவித வியாதிகள் வரக்கூடிய காலம். நமக்கு அதிகம் தூக்கம், மயக்கம் வரக்கூடிய காலம். அந்தக் காலத்தில் அந்த வியாதிகளைத் தடுக்க நாம் சற்று சுறுசுறுப்பாக இருக்க வேண்டும். ஆகையால் தான் அக்காலத்தில் விடியுமுன் எழுந்து ஸ்நானம் செய்து, மந்தந்தைப் போக்கி, பொழுது போக சுறு சுறுப்பாக இருக்க பஜனை என்று வைத்து, கடவுளை தியானித்திருக்கச் செய்வது. அந்தக்காலம் தான் நம் நாட்டில் சகலவித பயிர்கள் உண்டாகின்றன. சேப்பன், கருணை, வல்லி முதலிய கிழங்குகள், அவரை, மொச்சை முதலிய காய்களும், முக்கியமாக நெல்லும் விளைகின்றன. பயிர்த் தொழிலாளர், தெய்வத்திற்கு விளைவிற்காக நன்றி செலுத்தும் பொருட்டு, அப்போதுதான் முதலறுப்பு ஆகும் காலமாகையால், அந்தப்பனிகாலம் முடியும் நாளாகிய தைமாதம் முதல்தேதி, புதுநெல்லரிசியைப் பொங்கல் வைத்து புதிதாக விளையும் பொருள்களையும் உபயோகப்படுத்திக் கடவுளுக்கு என்று வைத்து வணங்கி நன்றி செலுத்துகிறுர்கள். இது சமயம் எல்லாரும் ஒன்று கூடுகிறுர்கள். அன்பினுல் எல்லாரும் ஒற்றுமையாக இருக்கச் செய்கிறுர்கள். இதைப் பொங்கல் பண்டிகை என்று வைத்துவிட்டார்கள். இது போலவே நம் தமிழர் பண்டிகைகளை

கவனித்தால் நாம் எவ்வளவு தெய்வபக்தி உள்ளவர்களாக இருந்தோம்; அன்புடையவர்களாக இருந்தோம் என்பது நன்கு விளங்கும்.

---

நமது பெரியார்கள், பக்குவமடையாதவர்கள் தங்கள் உபதேச மொழிகளைச் சரியே உணர்ந்து நடக்கமாட்டார்கள், அப்படி அவர்கள் தப்பாக உணர்ந்து நடந்தால் கெடுதல்கள் ஏற்படுமென்று தெரிந்தே, தங்கள் உபதேச மொழிகளை நேர் பொருளாகத் தெரிவிக்காமல், மறைபொருளாகத் தெரிவித்திருக்கிறார்கள். உதாரணமாக வைத்திய முறையில், நரசிங்கத் தைலம் செய்வதற்கு வேண்டும் பொருள்கள்:—குரங்கின் கைச்சாறு ஒருகை, ஓடுமான் செவியின் சாறு ஒருகை, இரு மரக்கிளையின் சாறு ஒருகை, மலைவெண்ணெய் ஒருகை என்று எழுதி இருக்கிறார்கள். இதன் பொருளை உணராது ஒருவன் ஒருகைச்சாறு கிடைக்கக்கூடியபடி சில குரங்குகளைப்பிடித்து அவைகளின் கைகளை வெட்டியும், ஓடுகின்ற மான்களைப் பிடித்து அவைகளின் செவிகளைக் கொய்தும், மரங்களின் கிளைபாகங்களைப் பார்த்து வெட்டிவருவதும், மலைகளின்மேல் காட்டுமாடுகளின் பால் கட்டிகள் இயற்கையாக இருக்கின்றனவா என்றுத் தேடித்திரிந்தால் அவனைப்பார்த்து நகையாமல் என்ன செய்வது. உள்பொருள் என்னவெனில் முறையே முசுமுசுக்கட்டைச் செடி, வெற்றிலை, புல்லுருவி, சுண்ணும்பு என்பதுதான். ஒரு உபாத்தியாயர் பிள்ளையைப் பார்த்துப் புஸ்தகத்தைக் கரைத்து குடித்துவிட்டு வர வேண்டுமென்று சொன்னால், அப்பையன் புஸ்தகத்தை கிழித்துத் தண்ணீரில் போட்டு கசக்கிக் குடித்துவிட்டால் நாம் அவனை என்னென்று நினைப்போம். அதுபோல் யோகம் செய்ய, அதாவது யாகம் செய்ய சோமரசத்தை வைத்து, பசுவை பலியிட்டு, ஓமகுண்டலத்திலிருந்து, அக்கினியைக் கிளப்பி, மந்திரம் செபிக்கவேண்டுமென்று சொல்லி இருப்பதை உள் அர்த்தம் உணராமல், தற்காலம்—சோமக்கொடியைக்கொண்டுவந்து நசுக்கி ரசம் எடுப்பது என்று சொல்லி, மதுவை வைத்து, உண்மைப்பசுவை பலியிட்டு, தற்காலம் அது அநாகரீகம் என்று நம்முடன் பழகித்தெரிந்து, அதற்குப் பதில் சில ஆட்டுக்கிடாக்களை இம்சைசெய்து கொன்று ஒரு குழியில் சில கட்டைகளைப் போட்டு எரித்துக் கொச கொசவென்று ஏதோ உச்சரித்து, மதுவை அவர்களே உண்டும், கடாக்களின் மாமிசத்தையும் அவர்களே உண்டுவிடுகிறார்கள்.

இது போலத்தான் கிறிஸ்துவர்கள் மாதா கோயில்களில் ரொட்டியையும் திராட்சரசத்தையும் வைக்கிறார்கள். இஸ்லாமியர் அவர்கள் கடவுளாகிய அல்லாவிற்குப் பசுவை, குர்பானி அல்லது பலிகொடுக்கிறார்கள். ஞானம் உண்டாக யோகம் செய்யவேண்டுமென்பது யாகமாகிவிட்டது. அதற்கு நமது சரீரத்தை, தத்தம் செய்ய வேண்டும். அதாவது நமது தசை, இரத்தம் இவைகளின் ரசத்தைக் கொடுக்கவேண்டும். நமது சரீரத்தின் விருத்தியைக் கவனிக்காமல் யோகம்செய்ய வேண்டும். தசையை ரொட்டித்துண்டென்றும், இரத்தத்தை திராட்சரசம் என்றும் கிறிஸ்துவர்கள் வைத்துக்கொண்டார்கள். பதி, பசு, பாசத்தில், பாசமாகிய நமது நான், எனது, என்பவைகளை நாம் அறவே ஒழிக்க வேண்டும், பலி கொடுக்க வேண்டும், இதைக்குறிக்கவே, நமது ஆலயங்களில், பலி பீட மொன்று வைக்கப்பட்டிருக்கிறது. இதையே இஸ்லாமியர் பசுவை பலி கொடுப்பது. ஓமகுண்டமென்பது ஒரு சிறு தோண்டி உருவமாக உள்ள நமது அடி வயிற்றில் குண்டலித்து இருக்கும் மூலாதார நாடியை அக்கினியைக் கிளப்புவதென்பது அந்த நாடியை மேலே கிளப்பி, பிரம்மரந்திரம், அல்லது சகஸ்ராதாரநாடி இருக்கும் இடத்திற்கு போகச் செய்வது. இதற்கு நாம் எல்லாம் அற்று, அசைவற்று, நிற்பதையே, மந்திரம் செபிப்பது என்று சொல்லப்பட்டது. ஆகவே நாம் நம் சரீரத்தைக் கவனிக்காமல், மூலாதாரத்தில் இருக்கும் நாடியை உச்சந்தலையிலிருக்கும் சகஸ்ராதார நாடிக்கு செலுத்தி யோகம் செய்யவேண்டும். அப்படி யோகம் செய்தால் சகலவித சக்திகளையும் பெறலாம். அப்படி செலுத்தி யோகம் செய்து, கவிழ்ந்து மூடி இருக்கும் அந்த சகஸ்ராதார நாடியை மேலே நிமிரச்செய்து மலரச் செய்தால் நமக்கு ஞானம் உண்டாய் இறப்பில்லாப் பேற்றைப் பெறலாம். இந்த உண்மையை உணரமாட்டாது உலகத்தில் உள்ளவர்கள் தப்பர்த்தம் கொண்டு, தப்பான முறையில் செய்துகொண்டு வருகிறார்கள்.

---

வேணுகோபாலன் என்று, ஒரு பசுவின்பேரில் கிருஷ்ணன் சாய்ந்துகொண்டு வலதுகாலை ஊன்றி இடது காலை வலதுபக்கம் தூக்கினாற்போல் நிற்கிறான். அப்போது அந்தப் பசு தூக்கி இருக்கும் காலின் பாதத்தை நக்குகிறது. அப்போது கிரிஷ்ணன் புல்லாங்குழல் ஊதுகிறான். இதன் பொருள் கிருஷ்ணனாகிய கடவுள் பசுவாகிய நம்மில் சாய்ந்து நிற்பதுபோல் இருக்கிறார். இடதுகாலை தூக்கி

நிற்பதுபோல் அவர் நமக்கு அருள் கொடுக்கிறார். அதை பசு நக்குவதுபோல் நாம் அநுபவித்தால் அவர் புல்லாங்குழல் வாசிப்பதுபோல் நமக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறார்.

---

சிவமதத்திலும் விஷ்ணு மதத்திலும் கடவுளுடன் அம்மனை எப்போதும் சேர்த்தே வைக்கப்பட்டிருக்கிறது. இதன்பொருள் இவர்கள் புருஷன் பெண்ஜாதியல்ல. கடவுளும் அவர் சக்தியும் ஒன்றே என்பதுதான். சிவ மதத்தில் இரஷபக வாகனத்தில் சிவனும் பார்வதியும் காக்ஷிகொடுப்பது முக்கியம் என்று காட்டப்படுகிறது. பசுவாகிய, இரஷபமாகிய, நம்மில்தான் கடவுளும் அவர் சக்தியும் இருக்கின்றன என்று உணர்த்துவதற்காக. இதேபோல் விஷ்ணு மதத்தாரும் அதை அநுஷ்டிக்கும் சிலரும் முக்கியமாய் வியாழக்கிழமையன்று கருட தரிசனம் செய்யவேண்டுமென்று பறக்கும் கருட பட்சியைக் கண்டு கன்னங்களில் போட்டுக்கொள்ளுகிற மாதிரி பாவனை செய்து வலது கை விரல்களை இப்பக்கமும் அப்பக்கமுமாக கொண்டுபோகிறார்கள். சிவனுக்கு இரஷபம் எப்படியோ, அப்படி விஷ்ணுவுக்கு கருட பட்சி, அது விஷ்ணு மதத்தாருக்கு பசுவைக் குறிக்கிறது. பறக்கிற கருடனில்தான் விஷ்ணுவும் ஆண்டாளும் இருப்பதாக ஐதீகம். அப்படிப் பறக்கும் கருடனைப் பார்த்த மாத்திரத்தில் அவர்களுக்கு அந்த கருடன்மேலிருக்கும் விஷ்ணு ஆண்டாள் ஞாபகம் வரவேண்டும். அப்படி வந்தால் எப்படி அந்த கருடனின்மேல் விஷ்ணுவும் ஆண்டாளும் இருக்கிறார்களோ அதேபோல் நமக்குள் கடவுளும் அவர் சக்தியும் இருக்கின்றன என்று உணர்ந்துகொள்ளவேண்டும்.

---

குகன் என்பது மனமாகிய குகையில் வசிப்பவன் என்று பொருள்.

---

ஒவ்வொரு கோயில்களிலும் பிரம்ம உத்ஸவம் என்று பத்து தினங்களுக்கு விழா கொண்டாடப்படுகிறது. அப்போது பிரதி தினமும் காலையிலும் மாலையிலும் கடவுளின் உருவச் சிலையை வாகனம் என்று சொல்லப்பட்ட ஒவ்வொரு வித வஸ்துக்களின் உருவங்களின்மேல் வைத்து வீதி சுற்றிக் கொண்டு வரப்படுகிறது. பிரம்ம உத்ஸவம் என்றால் பிரம்மத்தைப்பற்றி உணர்த்தும் விழா. ஒவ்வொரு வாகனமும் உலகத்திலுள்ள ஒவ்வொரு வித வஸ்துக்கள். அந்த வாகனங்களின்மேல் கடவுளின் சிலையை வைத்து வீதி சுற்றி வருவது அந்தந்த வித வஸ்துக்களிலும் கடவுள் இருக்கிறார் என்று எல்லாருக்கும் உணர்த்தவே.

வடலூரில் இராமலிங்கசுவாமிகள் ஒரு எட்டு பட்டை உள்ள கட்டிடம் அமைத்து அதற்குள் ஒரு தீபத்தை வைத்து அதை ஆறு திரைகள் போட்டு மறைத்திருக்கிறார்கள். எட்டுப் பட்டை உள்ள கட்டிடம் எட்டு அங்கங்கள் உள்ள நமது சரீரம். அதற்குள் இருக்கும் தீபம் நமக்குள் இருக்கும் ஜோதி அல்லது கடவுளைக் குறிக்கிறது. மறைக்கும் ஆறு திரைகள் அந்த ஜோதியை நாம் காணவொட்டாது தடுக்கும் ஆறு மறைப்புகள். திரைகள் நீங்கினால் தீபத்தைக் காணுவதுபோல், மறைப்புகள் நீங்க ஜோதியைக் காணலாம்.

---

பகவத் கீதை என்பதில் கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு தன்னை நம்பி, தான் சொல்லுகிறபடி கேட்டால் கடைசியில் சந்தோஷம் உண்டாகும் என்று உபதேசம் செய்கிறார். கிருஷ்ணன் என்பது மனச்சாட்சி. அர்ச்சுனன் என்பது நாம். மனச் சாட்சிப் பிரகாரம் நடந்தால் நமக்கு ஆனந்தம் கிடைக்கும். பகவத் கீதையிலுள்ள தேர் நம் சரீரம். அதற்கு பூட்டி இருக்கும் நான்கு குதிரைகளும் நான்கு அந்தக்கரணங்கள். அவைகளுக்குப் போட்டிருக்கும் கடிவாளம் என்பது அறிவு.

---

கிருஷ்ணன் அநேக கோபிகா பெண்களுடன் ஒரே காலத்தில் லீலை செய்வதாக படம் எழுதி வைத்துக்கொண்டு அதுபோல் விழாக்களும் கொண்டாடுகிறார்கள். கோபிகள் அன்பைக் குறிக்கின்றனர். யார் யாரிடத்தில் உண்மையான அன்பு உள்ளதோ அவர்களிடத்தில் எல்லாம் கடவுள் தோன்றுவார். ஒரே காலத்தில் எங்கெங்கே அன்பு தோன்றினும் அவ்விடங்களிலெல்லாம் கடவுள் தோன்றுவார் என்பதே இதன் உட்கருத்து.

---

கிருஷ்ணன் என்பவன் குளத்தில் நீராடிக்கொண்டிருந்த பெண்களின் ஆடைகளை எல்லாம் திருடிக்கொண்டு அங்கே உள்ள ஒரு மரத்தின்மேல் ஏறிக்கொண்டான் என்றும், பிறகு பெண்கள் தெரிந்து பல விதத்தில் மானத்துடன் கேட்டும் கொடாமல், தங்கள் மர்மஸ்தானங்களைத் தெரியும்படி நின்று கேட்டபோது கொடுத்ததாகக் கதையும், அதைப் போல் படமும் எழுதி வைத்துக்கொண்டிருக்கிறார்கள். எல்லாரையும் படைத்துக் காக்கும் கடவுளே இப்படிக் கேவலமாக செய்தார் என்று சொன்னால் அறிவுள்ளவர்கள் எல்லாரும் நகைக்கத்தான் செய்வார்கள். மானத்துடன் நின்று

கேட்பது ஆணவம் முதலிய மலங்களுடன் கூடி, சும்மா கடவுளைத் தொழுவதில் பயனில்லை என்று உணர்த்துகிறது. மானத்தை விட்டு கேட்டது என்பது, தான் என்னும் உணர்ச்சிகூட இல்லாமல் தன்னை மறந்து அன்பு செய்தால் கடவுளைக் காண முடியும் என்று உணர்த்துகிறது.

---

நாகக்குண்டலம்—இது சிவ உருவத்தின் காதுகளிலும், சிவனடியார்களாகிய சிவமடத் தலைவர்கள் காதுகளிலும், அந்த வேஷம் போட்ட துறவிகளாகிய சாமியார்களது காதுகளிலும் அணியப்படும் ஆபரணம். இது சாதாரணமாக பொன்னினாலாவது செம்பினாலாவது செய்யப்பட்ட ஆபரணம். இதன் உருவம் ூ மாதிரி இருக்கும். மேலே ஒரு குண்டலம் அல்லது வட்டமான வளையம். அதன் கீழ் நாகப் பட உருவமுள்ள ஒரு வளைந்த தகடு. இதுதான் ூ என்ற ஓங்காரமாயுள்ளது. இதனடிமுனையில் ஒரு மணி உருவமாயுள்ளது. அதாவது நாம் அம்மாதிரி செய்தால் அதை அணிந்திருப்பவர்கள் மாதிரி ஆவோம் என்று குறிக்கின்றது. அதை அணிந்திருப்பவர்கள் அம்மாதிரி செய்திருப்பவர்கள் என்று குறிக்கின்றது. இதுதான் நமது தமிழர் மதம். இதன் பொருள் என்னவென்றால், வட்டமாக குண்டலமாதிரி குண்டலித்திருக்கும் நமது மூலாதார நாடியை நாகப்பட உருவமாக ூ மாதிரி கிளப்பவேண்டும். கிளப்பி சகஸ்ராதார நாடிக்கு ஏற்றவேண்டும். அப்படி ஏற்றினால் சகஸ்ராதார நாடி நிமிர்ந்து மலர்ந்த தாமரை மலர்போல் வரும். அதைத்தான் அந்த நாகப் படத்தின் அடியில் தொங்கும் மணி குறிக்கின்றது. அப்படி சகஸ்ராதார நாடி நிமிர்ந்து தாமரை மலர் போல் ஆனால் நமக்கு ஞானம் உண்டாகும். பொன் அல்லது செம்பு நிறம்போன்ற ஜோதி தோன்றும். அப்போது சிவனது உணர்ச்சி வந்து, சிவ தரிசனம் கிடைத்து, சிவனுடன் கலந்துவிடுவோம். இதுவே தமிழர் மதம்.

---

கிருஷ்ணன் என்னும் கடவுளுக்கு இரண்டு மனைவிகள் வைக்கப்பட்டிருக்கிறது. சத்தியபாமா என்றும் உருக்குமணி என்றும் இரண்டு மனைவிகள் வைக்கப்பட்டிருக்கிறது. இது கிருஷ்ணன் என்னும் கடவுள் சத்தியபாமா என்னும் மனைவியிடமும் உருக்குமணி என்னும் மனைவியிடமும் பவ்வியப் பட்டு இருந்து வருகிறார் என்று குறிக்கிறது. அதிலும் சத்தியபாமாவைக்காட்டிலும் உருக்குமணியிடம் அதிகமாக மயங்கிவிடுகிறார். உதாரணமாக சத்தியபாமா கிருஷ்ணனை தராசில் ஒரு தட்டில் வைத்து மற்றொரு தட்டில் தன் விலை

உயர்ந்த பலவகை நகைகளையும் ஒவ்வொன்றாக வைத்தும் கிருஷ்ணன் இருந்த தட்டு மேலே எழும்பாமல் தானும் அந்த தட்டில் உட்கார்ந்தும் அந்த தட்டு எழும்பவில்லை. ஆனால் உருக்குமணியானவள் ஒரு சிறு துளசியை எடுத்து அதே மாதிரி அந்த தட்டில் வைத்தவுடன் அந்த தட்டு மேலே எழும்பிவிட்டது. இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வதென்னவெனில் கிருஷ்ணன் என்னும் கடவுளை நாம் காண, அடைய இரண்டு மார்க்கங்கள் உண்டு. அதாவது சத்தியபாமா என்கிற பக்தி மார்க்கமும், உருக்குமணி என்கிற அன்பு மார்க்கமும்தான். இதில் பாமா என்பது பக்தி. அவள் போட்ட ஒவ்வொரு நகையும் அந்த பக்தி மார்க்கத்தில் ஒவ்வொரு வழி. உருக்குமணி என்பது அன்பு. அவள் இட்ட சிறு. துளசி அன்பின் மேலீட்டினால் செய்த ஒரு சிறு செயல் அன்பு துளசி போன்ற, பிறருக்கு இலேசில் புலப்படாத, மனதில் அடங்கிய காரியம். ஆனால் கடவுளை அடைவது பக்தி, அன்பு என்ற இரண்டின் வழியாய் காணக்கூடியதாயிருந்தாலும், அன்பினால் வெகு சுலபத்தில், வெகு சீக்கிரத்தில் அடையலாம். பக்தியைக்காட்டிலும் உண்மை அன்பே மேல். சிவ புராணங்களிலும் கண்ணப்பர் சரித்திரம் இதையே, பக்தியைவிட் அன்பே மேல் என்பதைக் குறிக்கிறது. காளத்தீஸ்வரனை சிவகோசரியார் என்னும் பக்தர் நேம நிஷ்டையுடன், ஆனால் தன் உணர்ச்சியுடன் செய்த பூசையினால், பக்தியினால் சீக்கிரத்தில் கடவுளின் அருள் கிடைக்கவில்லை. ஆனால் அதே இலிங்கத்தை தன்னை மறந்து பூர்ண அன்புடன் நடத்தின கண்ணப்பருக்கு ஆறே நாளில் கடவுளின் பூரண அருள் கிடைத்தது.

---

தீபாவளி பண்டிகை என்பது சத்தியபாமா என்னும் பூமிக்குப் பிறந்த பூமியில் உண்டான நரகாசூரன் என்னும் கொடிய துஷ்டனாகிய, அக்கிரமக்காரனாகிய அசுரனை கொன்றதை கொண்டாடும் விழா. சத்தியபாமா என்பவள் முன்பு பூமியாயிருந்தவள். நரகாசூரன் பூமியின் பிள்ளை. அவன் பிறகு தன் தாயும் சகிக்கமுடியாத துஷ்டனாய்விட்டான். துர் நடத்தை உள்ளவனாய்விட்டான், கொடிய செயலுள்ளவனாய் விட்டான். அதாவது பூமியில் தான் உண்டாகும் பூமியில் உள்ள மனிதர்கள் தான் செய்யும் துஷ்டத்தனம், துர் நடத்தை, கொடிய செயல்கள். இந்த செயல்கள் ஒழிந்தால்தான், நீங்கினால்தான் மனிதனுக்கு கடவுள் அன்பு கிடைக்கும். அப்படி நீங்குவதற்கு அந்த மனிதன், இந்த பூமியில்தான்

இருந்து நீக்கவேண்டும். கடவுளிடம் பக்தி செய்து நீக்க வேண்டும், அதைத்தான் அந்த பக்தியாகிய சத்தியபாமா துஷ்டச் செயல்களாகிய நரகாசூரனை கொலை செய்கிறாள். இது இப்போது வெறும் களியாட்டமாக எண்ணெய் தேய்த்து முழுகுவதும், பட்டாசு முதலிய வாணங்கள் கொளுத்துவதும், புதுத்துணி உடுத்தல், பலகாரங்கள் உண்ணல் முதலியவை யாய்விட்டது.

---

சிவவாக்கியர், மூன்றும், மூன்றும், மூன்றும் கடக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். கைவல்லியத்தில் முப்பாழும் கடக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணு மதத்திலும் அரங்கநாதர் என்பவர் மூன்று சுத்து சுத்திக்கொண்டிருக்கும் ஐந்து தலை நாகத்தின்மேல் படுத்திருக்கிறார். அதாவது மூன்று முறையும் தாண்டினால், கடவுள் என்ற அந்த ஒன்றைக் காணலாம், அடையலாம். அவை யாவன :—1. மாமிச உடல், காரண உடல், அறிவுடல் என்கின்ற ஸ்தூல சரீரம், காரண சரீரம், சூக்ஷம சரீரம் என்ற மூன்றும், 2. பிராரப்த வினை, சஞ்சித வினை, ஆகாமிய வினை என்ற மூன்றும், 3. ஞாதுரு, ஞேயம், ஞானம் என்கிற காண்பான், காணப்படும் பொருள், காணும் காக்ஷி என்கின்ற மூன்றும். இந்த மூன்று மூன்றும் நீங்கினால், கடந்தால், தாண்டினால் இருக்கும் ஒன்றைக் காணலாம். அத்துடன் இரண்டறக் கலக்கலாம்.

---

ஒரு கதை :—ஒரு நாள் ஓரிடத்தில் ஒரு யோகி தபஸ் செய்துகொண்டிருந்தான். அப்போது அவன் தலைக்குமேல் ஒரு கொக்கு பறந்து சென்றுகொண்டிருந்தது. போகும் போது எச்சம் இட்டது. அது அந்த யோகியின்மேல் விழுந்தது. யோகி விழித்துப் பார்த்து கொக்கு என்று தெரிந்து அதை விரைத்துப் பார்த்தான் கொக்கு உடனே எரிந்து சாம்பலாகிப் போய்விட்டது. சில தினம் கழித்து யோகி ஜீவனத்திற்கு யாசகத்தின்பேரில் ஒரு தெருவழியே போய்க் கொண்டிருந்தான். அங்கு ஒரு வீட்டில் ஒரு அம்மையைக் கண்டு சோறு கேட்டான். அம்மை தான் வேலையாயிருப்பதாகவும் சற்று பொறுக்கும்படிக்கும் சொன்னாள். யோகிக்கு தன்னை அலட்சியம் செய்ததாக நினைத்து அந்த அம்மையை விரைக்கப் பார்த்தான். நகைத்து அந்த அம்மை 'என்னையும் கொக்கு என்று நினைத்தாயோ கொங்கணவா' என்றாள். யோகிக்கு தான் கொங்கணவன் என்றும், தான் கொக்கை

எரித்தது இவளுக்கு எப்படி தெரிந்தது என்றும் ஆச்சரியப் பட்டு அந்த அம்மையை இதெல்லாம் உனக்கு எப்படி தெரிந்தது என்று கேட்டான். அவள் ஒரு இடத்தில் ஒருவன் கசாய் வேலை செய்துகொண்டிருக்கிறான் அவனிடம் போய் கேள் என்று சொல்லிவிட்டாள். யோகி அப்படியே அந்தக் கசாய்க்காரனைத் தேடிச் சென்றான். அந்த கசாய்க்காரன் இவனைக் கண்டவுடனேயே 'அந்த அம்மை உன்னை இங்கு அனுப்பினளோ என்று கேட்டான்'. யோகிக்கு இன்னும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. கசாய்க்காரன் தான் வேலை செய்துவிட்டு வருவதாகவும் அதுவரைக்கும் பொறுக்கும் படிக்கும் சொன்னான். அப்படியே தன் தொழிலை முழுதிலும் செய்துவிட்டு யோகியை தன்னுடன் அழைத்துக்கொண்டு தன் வீட்டிற்குப் போய், தான் சுத்தம் செய்துகொண்டு தன் அப்பனையும் அம்மையையும் வணங்கிவிட்டு வெளியே வந்து யோகியிடம் அந்த வணக்கம்தான் தனக்கு இவ்வளவு சக்திகளையும் கொடுத்ததாகச் சொன்னான். இதிலிருந்து நம் மதத்தின் சில உண்மைகளைத் தெரிந்து கொள்ளவேண்டியது. கொங்கணவன் என்றால் யோகம் செய்பவன். வெறும் யோகம் மாத்திரம ஞானத்திற்கு பலன்படாது. அந்த யோகத்தினால் கொக்கைப் போன்ற பிராணிகளை எரிக்கலாமே தவிர, பெண்ணாகிய சொற்ப ஞானம் வந்தவர்களையும் ஒன்றும் செய்யமுடியாது. உண்மை யோகிக்கு தன்னை மறந்திருக்க வேண்டுமே தவிர, கொக்கு எச்சமிட்டது தெரிந்து தன் நினைவிற்கு வரமாட்டான். அவ்வளவு சீக்கிரத்தில் கோபம் உண்டாகி அற்ப கொக்கின்மேல் கோபத்தைக் காட்டமாட்டான். சொற்ப ஞானம் வந்த அந்த அம்மை அந்த சொற்ப ஞானத்தால் எல்லாவற்றையும் உணர்ந்தாள். தான் பார்த்து தெரிந்துகொள்ளாவிட்டாலும், ஞானத்தினால் தெரிந்து அந்த கசாய்க்காரன் நல்ல ஞானம் வாய்ந்தவன் என்று தெரிந்து, அவனிடம் போனால் தெளிவு ஏற்படும் என்று தெரிந்து, அவனிடம் யோகியை அனுப்பினாள். அந்த ஞானி கசாய்த் தொழிலைச் செய்தாலும், தொழில் எதுவாயிருந்தாலும் மனம் சுத்தமுடையதாக இருந்தால் ஞானம் தன்னைப்போல் உண்டாகும் என்பதை உணர்த்துகிறான். தவிர, தன் அப்பனையும், அம்மையையும் வணங்குவதாவது, கடவுளிடத்தில் அதன் சக்தி உள்பட, பூரண அன்பாயிருத்தல். அப்படி அன்பு இருந்தால் கடவுள் அருள் கண்டிப்பாய் கிடைக்கும் என்று காட்டுகிறது. தவிர, வெறும் யோகத்தைவிட, பக்தியைவிட, அன்பே மேல் என்றும் உணர்த்துகிறது.

---

சாதாரண அறிவுடைய மனிதர்கள் இலக்குமியை ஐஸ்வரியம் அல்லது பொருள் கொடுக்கும் தெய்வம் என்றும், சரஸ்வதியை அறிவு என்கிற ஞானம் கொடுக்கும் தெய்வம் என்றும் வணங்குகிறுர்கள். இவைகள் பொருளையும், அறிவையும் உருவகப்படுத்தப்பட்டிருப்பவைகளே தவிர தெய்வங்கள் இல்லை. சாதாரணமாக பொருளைக் கண்டால் எல்லாருக்கும் ஆசை, அதைத் தான் அடையவேண்டும் என்னும் இச்சை, உண்டாகிறது. ஆகவே இலக்குமி என்னும் உருவத்தை சாதாரண மனிதருக்கு கவர்ச்சி தரும் உருவமாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஞானத்தை குறிக்கும் சரஸ்வதியின் உருவமோ, மிகவும் சாந்த முகத்தையுடையதாயும், வெண் ஆடை உடுத்தியதாயும், ஒரு கல்லின்மேல் அமர்ந்து இருப்பதாயும் வைக்கப்பட்டிருக்கிறது. இது நாம் ஞானத்தை அடையவேண்டுமானுல் முதலில் நாம் செய்யவேண்டியவைகளைக் குறிக்கிறது. முதலில் நாம் அமைதியாக ஓரிடத்தில் இருக்கவேண்டும். வெண் ஆடை மாதிரி பரிசுத்தமாக, பரிசுத்த மனதுடனிருக்கவேண்டும். சாந்த முகம்போல் நாம் பூரண சாந்தத்தை யடையவேண்டும். அடுத்த படியாக கவனித்தால், அந்த உருவத்தில் இரு கைகளால் வீணை வாசிப்பதாகவும், ஒரு கையால் ஜப மாலை உருட்டுவதுபோலவும், மற்ருெரு கையில் ஒரு சுவடியை வைத்திருப்பதுபோலவும் இருக்கிறது. ஞானமடைய மூன்று வழிகளுண்டு. பக்தி மார்க்கம், யோக மார்க்கம், ஞான மார்க்கம் என மூன்றுண்டு. அவைகளில் வீணை வாசிப்பது என்பது, பக்தி மார்க்கம்,—கடவுளை, பக்தியோடு, மனதுருகி, பூரண உள்ளத்தோடு, இறைஞ்சி, பாடுவது. மாலை உருட்டுவது என்பது, மனதை வேறெதிலும் செல்லவிடாது, சதா கடவுளையே நினைத்து, ஜபம் அல்லது தியானம் செய்வது. இது யோக மார்க்கம் என்பது. சுவடி, அல்லது ஞானம் கொடுக்கும், அறிவு உண்டாக்கும், புத்தகங்களைப் படித்து, அதிலுள்ள விஷயங்களை நன்குணர்ந்து, அதன்படி அநுபோகத்தில் கொண்டுவருவது என்பது. இது ஞான மார்க்கம் என்பது. இப்படி செய்கையில் காட்டாமல், சும்மா சரஸ்வதியின் உருவத்தை பூசிப்பதில் ஒரு பயனும் கிட்டாது.

---

விஷ்ணு பால் கடலை கடைந்ததாக ஒரு கதை இருக்கிறது. அதில் விஷ்ணுவானவர் ஆமை உருவமாக பாற் கடலில் அடியில் அமர்ந்துகொண்டார். அதன்மேல் மந்திர மலை என்கிற மலையை வைக்கப்பட்டது. இதைச் சுற்றி வாசுகி

என்னும் பாம்பை கயிருக சுற்றி அசுரர்கள் ஒரு பக்கமும், தேவர்களாகிய சுரர்கள் ஒரு பக்கமும் பிடித்து, இப்படியும் அப்படியுமாக இழுத்து அந்த மலையாகிய மத்தைக்கொண்டு, அந்தக் கடலை கடைந்தார்கள். அப்போது முதலில் விஷம் வந்தது. அசுரர்கள் அதனுல் மயங்கிவிட்டார்கள். பிறகு கடைந்ததில் முதலில் இலக்குமி வந்தாள். பிறகு சரஸ்வதி வந்தாள். பிறகு காமதேனு தோன்றிற்று. பிறகு கர்ப்பக விருட்சம் தோன்றிற்று. பிறகு எட்டு தலைகள் உள்ள ஒரு குதிரை வந்தது. எல்லாவற்றிற்கும் கடைசியில் அமிர்த கலசம் தோன்றிற்று. அதை விஷ்ணு அசுரர்களுக்குக் கொடுக்காமல் தேவர்களுக்கு மாத்திரம் கொடுத்தார். அதனுல் தேவர்களுக்கு இறப்பு உண்டாகவில்லை.

இதன் பொருள் என்னவென்ருல்—பால் என்ருல் பரிசுத்தமான—கடல் என்ருல் பரந்த வெளி—இதுதான் என்றும் நிலைத்துள்ளது. நாம் உண்மையைத் தெரிய, காண, அடையவேண்டுமானுல், ஆமை தன் ஐந்து இந்திரியங்களையும் உள்ளிழுத்து, அடியில் இருப்பதுபோல், முதலில் நம் ஐந்து இந்திரியங்களையும் அடக்கவேண்டும். வாசுகி என்பது சுவாசம், அதாவது மூச்சு. வாசுகியை இப்படியும் அப்படியும் இழுக்கும் மாதிரி, மூச்சை இப்பக்கமும் அப்பக்கமுமாய் மாற்றி மாற்றி விட்டு, மந்திர மலையாகிய மந்திரத்தை, மனதை எதிலும் செல்லவிடாமல், சொல்லி ஜபம் செய்ய வேண்டும். இப்படி அசுரர், சுரர் சேர்ந்து செய்வதுபோல், எல்லாருமே செய்தால், விஷம் தோன்ற அசுரர் மயங்கியது போல், பக்குவ நிலை யடையாத சாதாரண மனிதர்களுக்கு, யோகத்தினுல், அதாவது அப்படி மூச்சை மாற்றி, தியானம் செய்ய பிரயத்தனப்பட்டால், கெடுதல்கள், வியாதிகள், அறிவுக் கோளாறுகள் ஏற்படும். அந்நிலைக்கு வந்த, பக்குவமடைந்த அறிவாளிகள், அதாவது சுரர்கள் அப்படி யோகம் செய்தால், முதலில் இலக்குமி தோன்றுவதுபோல், வேண்டிய பொருள்களை, செல்வத்தை, தருவிக்கும் சக்தி இவர்களுக்கு கிடைக்கும். அதோடு நின்றுவிடாது யோகம், தியானம் செய்தால், சரஸ்வதி பிறகு தோன்றுவதுபோல், அறிவு உண்டாகும். இதிலும் நின்றுவிடாது யோகம் செய்தால், காமதேனு, கர்ப்பக விருட்சம் உண்டாவதுபோல், வேண்டிய எந்த வஸ்துவானுலும் தருவிக்கக்கூடிய சக்தி அவர்களுக்கு கிடைக்கும். இதிலும் நின்றுவிடாது மறுபடியும் யோகம் செய்தால், எட்டு தலை குதிரைபோல் பெரிய சக்தி தங்களுக்கு உண்டாகும். இவை ஒன்றும் அவர்களுக்கு ஆனந்தத்தைக்

கொடுக்காது. உண்மை, உள்ளது இன்னது என்பது விளங்காது. இவைகள் யாவும் இறப்பு, பிறப்புகளை நீக்காது. நமக்கு வேண்டியது உண்மையைக் காண, இறப்பு, பிறப்பு நீங்கி நித்தியானந்தத்தில் இருப்பதே. ஆகையால் இவை யாவற்றோடும் நின்றுவிடாது, மேல்கொண்டு யோகம் செய்தால், அமிர்த கலசம் என்கிற உண்மை ஞானம் உண்டாகும். அமிர்தம் சாப்பிடுவதுபோல் அது உண்டானல் நமக்கு இறப்பு, பிறப்பு இல்லை. நித்தியானந்தமாய் இருக்கலாம். இப்படி உண்மைகளை உணராமல் வெறும் கதைகளை சொல்லிக்கொண்டிருப்பதில் ஒரு பலனும் இல்லை.

---

27 நட்சத்திரங்கள் முருகன் என்கிற சுப்பிரமணியனை வளர்த்ததாகவும், அதிலும் கார்த்திகை என்கிற நட்சத்திரந்தான் வளர்த்ததாகவும், அல்லது பெற்றதாகவும், ஆகவே முருகன் என்கிற சுப்பிரமணியனுக்குக் கார்த்திகேயன் என்று பெயரென்றும், கதை. 27 நட்சத்திரங்கள் என்ற உருவங்களே கிடையாது. அதிலும் முருகன் என்கிற சுப்பிரமணியன் என்ற உருவமே கிடையாது. முருகன் என்கிற சுப்பிரமணியன் என்பது, ஞானத்தை உருவகப்படுத்தியிருக்கிறது. ஞானம் உண்டாகவேண்டுமானல் நம் மதத்தில் உள்ள 27 தத்துவங்களைத் தாண்டவேண்டும். அந்த தத்துவங்களையே 27 நட்சத்திரங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஞானம் அடைய முதலில், மெய், வாய், கண், மூக்கு, செவி யென்கிற 5 ஞான இந்திரியங்களையும், வாய், கை, கால்கள், குதம், குய்யம், என்கிற 5 கன்மேந்திரியங்களையும், சித்தம், மனம், புத்தி, அகங்காரம், என்கிற 4 அந்தக் கரணங்களையும் அடக்கவேண்டும். பிறகு இடகலை, பிங்கலை என்ற இரண்டு நாடிகளில் ஓடும் மூச்சை அடக்கி, சுழிமுனை என்கிற மூன்றாவது நாடியில் நிறுத்தி, அதற்குமேல், மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்கிற 6 ஆதாரங்களையும் தாண்டி, அதற்குமேல் முதுகு எலும்பு வால்மூளையில், இடுப்பு, நடுமுதுகு, கழுத்து, பிடர் என்கிற 4 இடங்களில் இருக்கும் 4 முக்கிய நாடிகளைத் தாண்டினல்தான் ஞானம் உண்டாகும்.

---

சுப்பிரமணியனுக்கு 6 தலைகளும், 12 கைகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. கைகளில் ஓராறு கைகள் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், என்பவைகளை அடக்குவதையும், மறு ஆறு கைகளும், சமம், தமம்,

விடல், சகித்தல், தியானம், தாரணை என்பவைகளை அடை வதையும் குறிக்கின்றன. தலைகள் ஆறும் ஆறு ஆதாரங்களைக் குறிக்கின்றன.

இதேபோல் இராவணனுக்கு 10 தலைகளும், 20 கை களும் வைக்கப்பட்டிருக்கின்றன. கைகளில் ஓர் பத்து, ஐந்து ஞான இந்திரியங்களையும், அவைகளால் அறியப்படும் ஐந்து விஷயங்களையும், மறு பத்துகைகள் ஐந்து கன்மஇந்திரியங்களை யும், அவைகள்செய்யும் ஐந்துதொழில்களையும் குறிக்கின்றன. பத்து தலைகளும் பத்து கெட்ட குணங்களைக் குறிக்கின்றன.

---

நாம் உணரவேண்டியவை :—

1. நாம் யார்? இங்கு நாம் எதற்காக வந்தோம்? நம் முடிவு என்ன?

2. இந்த உலகம் நம் போகத்திற்கா? அல்லது நம் அறிவை வளர்ப்பதற்கா?

3. நம் இந்திரியங்கள் நம் அறிவை வளர்ப்பதற்கா? அல்லது இந்திரியங்களின் போகத்திற்கு அறிவா?

4. நாம் ஜீவிப்பதற்குச் சாப்பிடுகிறோமா? அல்லது நாம் சாப்பிடுவதற்கு ஜீவிக்கிறோமா?

---

அறிவு என்பதில் அநேக வகைகளுண்டு. இலக்கண இலக்கிய அறிவு, சமய அறிவு, விஞ்ஞான அறிவு, கணக்கு அறிவு, வாதிக்கும் அறிவு, பிரசங்க அறிவு, ஞாபக சக்தி அறிவு, விஷயங்களை முன்கொண்டறியும் அறிவு, என்பன போன்றபலவுள. இவைகளில் யாருக்கும் ஒன்றுதான் அதிகரித் திருக்குமே தவிர எல்லாமும் ஒன்றுபோலிராது. இவைகளில் சமய அறிவு, விஞ்ஞான அறிவு, கணக்கு அறிவு, முதலி யனதான் அறிவை விருத்தி செய்யக்கூடியவை. இவைகளில் சமயஅறிவை பகுத்தறிவோடுபார்த்தாலோ ஞானத்தைஊட்டு வது. இதிலும்விஷயஞானம், அனுபோகஞானம் எனஇரண்டு பிரிவுவுண்டு. வெறும் விஷய ஞானம் பிரயோசனப்படாது. அத்துடன் அனுபோக ஞானம்தான் மனிதனை உயர்த்துவது.

---

மாயை, அல்லது பொய்த்தோற்றம், அல்லது பாசம், என்பதைத்தான்—பழுதையில் பாம்பு, கானலில் நீர், கிளிஞ் சலில் வெள்ளி, மரத்தை மறைப்பது மதயானை யென்றும் மதயானையை மறைப்பது மாமரமென்றும், கல்லைக்கண்டால்

நாயைக் காணோம், நாயைக்கண்டால் கல்லைக் காணோமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது உண்மையில் அது இருப்பது ஒன்று, அதை உலகத்தார் கண்டு நிலைப்பது மற்றொன்று.

---

உலகத்தில் பற்றற்றிருப்பதை, தாமரை இலையில் தண்ணீரென்றும், புளியம்பழத்தின் ஓடு என்றும், சேற்றிலிருக்கும் பிள்ளைப்பூச்சி யென்றும், மயில்வாகனத்தின்மேல் சுப்பிரமணியன் இருப்பதுபோல் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

---

சைவ சமயத்தில் நமது உடல் 96 தத்துவங்களால் ஆனது என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஆகமங்களில் அந்த 96 தத்துவங்களுக்கும் 96 பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நமது மதத்தில் நமது பெரியார்கள் நமது மதச் சம்பந்தமான விஷயங்களை மறை பொருளாகவே சொல்லியிருக்கிறார்கள். அப்படி சொல்லியிருப்பதில், ஆகமத்தில் குறிப்பிட்ட 96 பெயர்களும் எவையெவையைக் குறிக்கின்றன வென்றால் :— ஆன்ம தத்துவம் 24—நாடி 10—அவத்தை 5 மலம் 3 — குணம் 3 — மண்டலம் 3 — பிணி 3 — விகாரம் 8 ஆதாரம் 6 — தாது 7 — வாயு 10 — கோசம் 5 — வாயில் 9.

இவைகளை வேறுவிதமாகச் சொல்வாருமுண்டு.

---

ஏகாம்பரீஸ்வரர் என்பது, ஏகம் + அம்பரம் + ஈஸ்வரர் = ஏகம் + அம்பலம். அதாவது ஒன்று என்பது கடைசியில் அம்பலமாகி விடுகிறது. ஒன்றுமில்லாமல் போய்விடுகிறது. இதுவே சிதம்பர இரகசியம், நிர்வாணம், எல்லாம் வெளி என்பது.

---

தாயுமானவர் சொற்களுள் :—

(1) (மனம்) நெக்குநெக்குருகவேண்டும். அதாவது அனல் பக்கத்தில் வைத்த வெண்ணெய்—அனல்மேல் வைக்க வேண்டியதில்லை—தானே இளகுவதுபோல், கடவுள் என்று கேட்டமாத்திரத்திலேயே, கடவுள் என்று நினைத்தமாத்திரத்திலேயே, மற்றொரு உயிருள்ள பிராணி துன்பப் படுவதைப் பார்த்தமாத்திரத்திலேயே, துன்பப்படுவதாகக் கேட்டமாத்திரத்திலேயே மனம் உருகவேண்டும்.

(2) சிந்தை தெளியவேண்டும். சிந்தனை, சித்தம், மனம் எதிலும் நாடாமல், பற்றாமல், சுத்தமாக இருக்கவேண்டும். மனம், வாக்கு, காயம் சுத்தம் வேண்டும்.

(3) நானென்பதற மூழ்கவேண்டும். நானென்னும் தற்பெருமையும், எனதென்று சொல்லிக்கொண்டு தற்பெருமை கொள்ளுவதுமாகிய தன்முனைபற்றிருக்கவேண்டும். ஆணவம் அறவே ஒழியவேண்டும்.

(4) கருவி கரணங்கள் தோய வேண்டும். ஞான இந்திரியங்கள், அல்லது அறிவு உறுப்புகள், கன்மேந்திரியங்கள் என்கிற தொழில் உறுப்புகள், அந்தக் கரணங்கள் என்கிற உள் உறுப்புகள் செய்யும் தொழில்கள், கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து சகலமும் தொழிலற்று நிற்கவேண்டும். இதைத்தான் கிறிஸ்துவ மதத்தில் குழந்தைகளைப்போலானல் தான் கடவுள் இராச்சியம் காணமுடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிறந்த குழந்தைக்கு பசி என்று அழத்தெரியுமே தவிர தன்னுணர்வு இல்லாமல் மலம், ஜலம், வெளிவருமே தவிர, அதற்குமேற்சொன்ன எவ்வித உறுப்பும் தொழில் செய்வதில்லை. அந்தநிலை வந்தால்தான் கடவுள் என்ற ஒன்று இன்னதென்றும், உண்மை இன்னதென்றும் உணரமுடியும். இதைத்தான் கடவுள் இராச்சியம் காணமுடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு எல்லா உறுப்புகளும் சுத்தமாயிருக்கிறது. மாயை, என்ற அஞ்ஞானம் என்ற பொய்த்தோற்றம் கிடையாது. அது எல்லாம் அற்று, நீங்கி நிற்கிறது. அதற்கு வயது ஏறஏற இந்த உறுப்புகள் படிப்படியாக அதிகமாக வேலை செய்யச் செய்யத்தான் மாயை அஞ்ஞானமும் வளர்ந்து உண்மை மறைகிறது.

---

திருவொற்றியூர் என்பது திரு+அற்ற ஊர். அதாவது எல்லாம் அற்றவிடம், கருவி கரணங்கள் தோய்ந்த இடம். அப்போதுதான் ஆனந்தம் கிடைக்கும். ஆகவேதான் பட்டினத்தடிகள் ஒற்றியூர் பேக்கரும்பு இனிக்குமென்ருர். பேக்கரும்பு என்பது சத்தில்லா கரும்பு. சத்தில்லா கரும்பு இனிக்கிறதென்ருல் எல்லாம் அற்ருல் ஆனந்தம் உண்டாகுமென்பது.

---

கைவல்யம் என்பது அத்வைதத்தைப்பற்றி சொல்லும் நூல். பகவத் கீதை என்பது கைவல்யத்தில் உள்ளதில் ஒரு சிலவற்றைப்பற்றி சொல்லும் நூல். கைவல்யத்தில் கைவந்த ஒரு உண்மை ஆச்சாரியன், காரண குரு, தன் சீடனுக்கு வினு விடை மூலியமாய் அத்வைதத்தில் உள்ள விஷயத்தை தெரிவித்து சீடனை பக்குவப்படுத்துகிருர். பகவத் கீதையில் அதுபோல் கிருஷ்ணன், அர்ச்சுனனுக்கு வினு விடை மூலிய

மாய் அத்வைதத்தின் சில விஷயங்களைத் தெரிவித்து, பாரதச் சண்டையாகிய உலக மாயா சண்டையில் வெல்ல பக்குவப் படுத்துகிறார்.

---

மனிதர்கள் அவரவர்கள் குண நடத்தையால் மூன்று பிரிவாக கருதப்படுகிறார்கள். எல்லாவற்றிலும் கீழ் நிலையிலுள்ள மனிதன் உலக சுகமே சுகம், அதுவே நிச்சயம், கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று எண்ணி, பெண்டு, பிள்ளை, தனது உடல், பணம், பொருள், முதலியவற்றிலேயே தன் ஆயுளையும், அறிவையும் செலுத்தி, உலகத்திலிருக்கும் மற்ற மனிதர்களையும், ஜீவன்களையும், எல்லாம் மறந்து, மெய்மை, அன்பு, சத்தியம், மனச் சுத்தம், முதலியவற்றை சற்றும் கவனியாமலிருப்பான். இப்படி நடப்பவர் பலர்.

மேற்சொன்னவர்களில் ஒரு சிலர் அப்படி நடந்து அனுபவித்து, பெண்டு, பிள்ளை, பணம், பொருள், தன் உடல், முதலிய எல்லாம், ஒரு காலம் இருந்து ஒரு காலம் அழிகிறது. இன்றைக்கிருந்தது நாளைக்கில்லை. உலகத்தில் துக்கமும் கூடவே இருக்கிறது. உலக சுகமும் நிலைத்த சுகமல்ல என்று உணர்ந்து, நித்திய சுகமாயுள்ளது எது என்று ஆராயப் பார்க்கிறார்கள். இவர்கள் மத்திய நிலையிலுள்ள இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

இவர்களிருவரும் மரத்திலிருக்கும் இரு பட்சிகளில் எப்போதும் கீழ் நோக்கியிருக்கும் பட்சியைச் சேர்ந்தவர்கள். எப்போதும் மேல் நோக்கியிருக்கும் பட்சியைச் சேர்ந்தவர்கள் மேலான மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் மிக மிகச் சிலராயிருப்பார்கள். இவர்களிருப்பது அநேகமாக பிறருக்குத் தெரியாது. இவர்கள்தான் நித்திய சுகத்தை உணர்ந்து, உண்மையை உணர்ந்து, அனுபவித்து நிற்பவர்கள். இவர்கள் உடல்மாத்திரம் உலகத்திலிருக்குமே தவிர மற்றவைகளிரா.

---

பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்பவை தெய்வங்களல்ல. தெய்வங்களென்று பன்மையிலிரா. சில நூல்களில் இவை மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பவைகளைக் குறிக்கின்றன. சிலவைகளில் இவை இயற்கையில் நடக்கும் படைத்தல், காத்தல், அழித்தல், மாறியமைத்தல், அருளல் என்பவைகளைக் குறிக்கின்றன. வேறு சிலவற்றில் இவை சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம்,

விசுத்தி, ஆஞ்ஞை என்பவற்றைக் குறித்து, மூலத்தையும் சேர்த்து ஆறு ஆதாரங்களைக் குறிக்கின்றனவென்று சொல்லப்பட்டிருக்கின்றன. வேறு சிலவற்றில் மூலம், உந்தி, நெஞ்சு, கழுத்து, நெற்றியைக் குறிக்கின்றனவென்றும், இன்னும் சிலவற்றில் இவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பவைகளைக் குறிக்கின்றனவென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

---

விபூதி யிடுவதில் மும் மலங்களில் ஈடுபட்டுள்ளவர்கள் மூன்று பட்டையாக யிடுபவர்கள். இதைத் திரிபுண்டரம் என்று சொல்வது. மற்றொரு வகை உத்தூளனம் எனப்படுவது. இது ஏகாண்டம்ாக உடல் முழுதும் நீறு பூசிக்கொள்வது. இது மலம் நீங்கி எல்லாம் பரிசுத்த மனதுட்னிருப்பவர்கள் பூசிக்கொள்வது. காஷாயம் என்பது ஆரியர்களிடமிருந்து கற்றுக்கொண்டது. நம்மில் துறவியாயுள்ளவர்கள், புறப்பற்று, அகப்பற்று நீங்கினவர்கள்,. இராமலிங்க சுவாமி மாதிரி, முகம், இரு கைகள், இரு பாதங்கள் தவிர மற்றவைகளை சுத்த துய வெள்ளைத் துணியால் உடலை மறைத்திருப்பார்கள். அதில் யாதொரு அழகும் செய்துகொள்ளமாட்டார்கள். இதற்கு மேலான நிலைக்கு போனவர்கள் இடுப்பில் கௌபீனம் மாத்திரம் தரித்திருப்பார்கள். அதிலும் மேலான தன்னையே மறந்த நிலைக்குப் போனவர்கள், இடுப்பிலிருக்கும் கௌபீனமும் கழண்டு, அதுவும் உணராது கும்பகோணம் மௌன சுவாமிபோல் நிர்வாணமாயிருப்பார்கள்.

---

இந்திரன், வருணன், அக்கினி, வாயு என்ப்வை மண், நீர், தீ, காற்றைக் குறிக்கின்றன.

---

நாதம் விந்து வென்பது சுரோணிதம், சுக்கில மென்பதையும், சிவன், சக்தி யென்பதையும், காற்று மனமென்பதையும் குறிக்கிறது. நம் மனமெழுந்தால் உடலிலுள்ள பல வகை காற்றுகளும் வேலை செய்கின்றன.

---

## தசாவதாரம்.

விஷ்ணு பத்துவிதமாக அவதரித்ததாகச் சொல்லப்பட்டதே தசாவதாரம் என்பது. இது பாகவதத்தில் சொல்லியிருக்கிறது. இந்த பாகவதத்தில் இருக்கின்ற ஒன்றை வேறு விதமாகக் கூறப்பட்டிருக்கிறது.

"சர்வம் விஷ்ணுமயம் விஷ்ணுமயம் ஜகத்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இந்த உலகத்தையும், உலகப் பொருள்களையும் விஷ்ணுவாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. படுத்திருக்கும் விஷ்ணுவைக் குறிக்கும் சில உருவங்களில், படுத்திருக்கும் விஷ்ணுவின் கால், ஒரு மலர்ந்த தாமரைப் பூவின்மேல் வைக்கப்பட்டிருக்கிறது. பூத்த தாமரைப்பூ எல்லா உயிர்களையும் குறிக்கிறதென்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி உலக உயிர்களின் விருத்தியையே அவர் 10 அவதாரமெடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அவர்எடுத்த அவதாரங்களாவன:—(1) மச்சாவதாரம் (2) கூர்மாவதாரம், (3) வராக அவதாரம், (4) நரசிம்ம அவதாரம், (5) பலராம அவதாரம், (6) பரசுராம அவதாரம், (7) கிருஷ்ணவதாரம் (8) கோதண்டராம அவதாரம், (9) வாமனவதாரம், (10) கல்கி அவதாரம். இவைகளில் முதல் நான்கும் உலக உற்பத்தியையும், அதன் விருத்தியையும், பின் ஆறும் மனிதனாய்ப் பிறந்தவர்களின் விருத்தியையும் முடிவையும் குறிக்கின்றன.

உலக உற்பத்தியானது முதலில் வெளியிலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் வந்ததாக முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி ஒரே நீராயிருக்கும்போது அது தன்னைத்தானே வெகு வேகமாகச் சுற்றிக்கொண்டிருந்தது. இப்பொழுதும் அது இவ்வுலகமாய்த் தன்னைத்தானே வெகுவேகமாக சுற்றிக்கொண்டு, சூரியனையும் சுற்றிவருகின்றது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அப்படி நீராய்த் தன்னைத் தானே சுற்றிக்கொண்டிருக்கும்போது அதில் மண் துணுக்குகள் உண்டாய் அவைகள் ஒன்றாய் சேர்த்து சுழற்றப்பட்டன. அப்படி சுழலும் போது முதலில் சேர்ந்த மண் துணுக்குகள் மீன் போல, மச்சம் போல நீண்டுவரும். அப்படி வந்த சமயத்தை விஷ்ணு மச்சாவதாரம் எடுத்தார் என்றுவைத்து, அதற்கேற்ப ஒரு கதையும் கட்டிவிட்டார்கள். பிறகு மண் சேரச்சேர, சுழலச் சுழல அதுபெருத்து, சற்றுநீளம் குறுகும். இது ஆமை உருவம் போலிருக்கும். இதைத் தான் விஷ்ணு இரண்டாவது கூர்ம அவதாரம் எடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கேற்றாப்போல் ஒரு கதையையும் கட்டப்பட்டிருக்கிறது. பிறகு மண் இன்னும் அதிகப்பட அது இன்னும் பெருத்து உருண்டை உருவமாய் வரும். இது ஒரு கொழுத்த பன்றியின் உருவம்போலிருக்

கும். இதைத்தான் விஷ்ணு மூன்ருவதாக வராக அவதாரம் எடுத்தார் என்று சொல்லி அதற்கும் ஒரு கதை ஏற்படுத்தி விட்டார்கள். இதன்பிறகு மண் இன்னும் அதிகப்பட அந்த உருவம் பெருத்து நீருக்குமேல் வர ஆரம்பித்தது. அப்போது அது ஒரு படுத்திருக்கும் சிங்க உருவமாக இருக்கும். இதையே விஷ்ணு நான்காவதாக நரசிம்ம அவதாரமாக எடுத்தார் என்று வைத்து அதற்கும் ஒரு கதையைக் கட்டிவிட்டார்கள். இவ்வாறு இந்த உலகம் உண்டான விதத்தை, விஷ்ணுவின் நான்கு அவதாரங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

பிறகு மனித விருத்தியைக் கவனிப்போம். மனிதன் முதலில் உண்டானபோது (மத விருத்தியில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.) அவன் அதம குணத்தையுடையவனுகப் பிறந்து மண்ணில் தாழ்ந்த தொழிலேச் செய்து கொண்டு நற்குணம் சிறிதும் இல்லாதவனுய் இருந்தான். இந்தக்காலத்தைதான் விஷ்ணு பலராமர் அவதாரம் என்று வைத்து கையில் ஒரு கலப்பையைக் கொடுத்து அதற்கேற்ப ஒரு கதையையும் ஏற்படுத்திவிட்டார்கள். பின்னல் மனிதன் மத்திமகுணமுடையவனுகப் பிறந்தான். அப்போது அவனுக்கு தீயகுணம் கொஞ்சம் போய் நற்குணம் கொஞ்சம் வந்தது. அந்த காலத்தை விஷ்ணு பரசுராமர் என்ற அவதாரம் எடுத்ததாக வைத்து அதற்கேற்ப ஒரு கதையையும் கட்டிவிட்டார்கள். அதன் பிறகு மனிதன் உத்தமகுணமுடையவனுக, தீயகுணம் கொஞ்சமும் இல்லாதவனுக மனச்சாட்சியுடையவனுகப் பிறந்தான். இதை விஷ்ணு, கிருஷ்ணுவதாரமாக வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அவதாரத்தில் அவர் அநேக செயல்கள் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது மனச்சாட்சியுடனிருக்கும் ஒருவனுக்கு எல்லாவிதத்திலும் தீச்செயலும் எண்ணமும் நீங்கிவிடும் என்பதைக் குறிக்கிறது. இதையே விஷ்ணு கிருஷ்ணுவதாரம் எடுத்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. பிறகு மனிதனுக்கு ஞானம் கொஞ்சம் உண்டாகும். அப்போது அவன் மாயையால் உண்டாகும் சில மலங்களை ஒழிக்கக்கூடும். இதையே விஷ்ணு கோதண்டராமர் அவதாரம் எடுத்தார் என்று வைத்து இராமாயணக்கதை ஏற்படுத்திவிட்டார்கள். பிறகு அவன் ஞானம் உண்டாய் அறத்தைக் கடைபிடித்து ஒழுகுவானனல் அவன் மூப்பாழும், மூன்று தர்மங்களையும், தன் மூன்று சரீரங்களையும் திரிபுடியையும் (ஞானம், ஞேயம், ஞாதுரு) கடந்துவிடுவான். இதைத்தான் விஷ்ணுவின் வாமன

வதாரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஞானத்திற்கு குட்டை உருவம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த குட்டை வாமன உருவமே ஞானம். பலிச்சக்கரவர்த்தியே அறத்தைக் கடைப்பிடித்தவன். ஆதலால்தான் அவன் மூன்று உலகங்களையும் தாண்டிச்சென்று, என்றும் அழிவில்லா மூர்த்தியாய் விளங்குகிறான். இப்படி அழிவில்லா மூர்த்தியானல், எல்லா மூன்றையும் கடந்தால் ஞானிக்கு உலகமே வெளியாகிவிடும். இந்தப்பக்குவத்தைத் தான் விஷ்ணு கல்கி அவதாரத்தோடு வருகிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுதான் மனிதனின் கடைசி முடிவு.

---

## பதி, பசு, பாசம்.

சைவசித்தாந்தத்தில் பதி, பசு, பாசம் என்ற மூன்றும் தனித்துத் தனித்து இருப்பதாகவும், அதிலும் பசு பாசத்துடன் கலந்திருக்கும் போது பதியைக்காணமுடியாதென்றும் ஆனல் அதே பசு பாசத்தைவிட்டு நீங்கினபோது பதியை அடைகிறதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பாசங்கள் தான் மும்மலங்கள் என்றும் அந்த மலங்களை நீக்கின ஆத்மா கடவுளை அடைகிறதென்றும் சின் முத்திரையின் தத்துவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதையேதான் அத்வைதாதிகள் பசு தன் உண்மைத் தன்மையை உணர்ந்தால் பதியாகிறது. ஜீவாத்மா, பரமாத்மா வாகிறது. ஆகவே நீ அதுவாக இருக்கிறாய் என்றும் சொல்லுகிறார்கள். சைவ சித்தாந்திகள் இதையே இன்னொரு விதமாகவும் சொல்லுகிறார்கள். அதாவது இதுவே ஐந்தெழுத்தின் பொருளென்றும் சிவயநம என்றும் இதில் சிவ என்பது சிவனும், சக்தியுமாகிய பதி என்றும், நம என்பது மலங்களாகிய ஆணவம் மாயை என்கிற பாசம் என்றும் ய என்னும் நாம் நம என்னும் பாசத்துடன் கலந்தால் பசுவாகிறோம். அப்போது சிவ என்னும் பதி நீங்கிவிடுகிறதென்றும், ஆனல், ய என்னும் நாம் பாசமாகிய நம என்பதை நீக்கினல் பதியை அடைகிறோம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த நம் கண்முன் தினமும் நடக்கும் ஒரு விஷயத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். பையிலிருந்து உற்பத்தியாகும் வகைகளில் ஒருவகையாகிய நாம் ஒவ்வொருவரும், நம் தாய் வயிற்றில் கருப்பப் பையில் பத்து மாதம் இருந்து பிறகு வெளிவந்தோம் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். கருப்பப் பையில் இருக்கும்போது முதன் மூன்றுமாதம் அந்த

பிண்டத்திற்கு உயிர் இல்லை; பிறகு அந்த பிண்டத்திற்கு உயிர்வந்து, நாம் ஆனோம். அப்படி ஏழு மாதம் உயிருடன் பையிலிருந்து பிறகுதான் வெளிவந்தோம். உயிருடனிருந்தோமென்றால் ஆகாரம் உட்கொண்டும், மூச்சுவிட்டுக்கொண்டும்தான் இருந்தோம். அவைகளில்லாமலில்லை. ஆனால் கருப்பப் பைக்குள் அடைபட்டிருந்த நாம் எப்படி ஆகாரமும் மூச்சும் கொண்டிருந்தோம் என்று பகுத்தறிவுள்ள நாம் ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டிய விஷயம். ஆகாரம் என்றால் நாம் இப்போது இவ்வுலகில் உட்கொள்ளும் ஆகாரம் அல்ல. மூச்சு என்றால் நாம் இப்போது இவ்வுலகில் உட்கொண்டு வெளியிடுகின்ற மூச்சுமல்ல. நம் சரீரத்தில் ஒருவித வாயு இருக்கிறது. அந்த வாயு முக்கோண வடிவமாயிருக்கும் இரண்டு புருவத்திற்கும் மத்தியில் நெற்றிக்கும், மூக்கு முனைக்குமாக இருக்கும் கழிமுனை நாடியில் ஓடுவதே அந்த மூச்சு. இந்த மூச்சு விடுவதிலேயே நமக்கு ஆகாரம் ஏற்படுகிறது. இதில் நாம் முக்கியமாக கவனிக்கவேண்டியது என்னவென்றால், அந்தவிதமாக் ஏழுமாதம் அந்தச் சிசு கருப்பத்திலிருக்கும்போது மல, ஜல, நிவர்த்தியில்லாமல் ஐந்து இந்திரியங்களின் வாசனைகள் கொஞ்சங்கூட இல்லாமல், பசி தாகமில்லாமல், பரிசுத்தமாக இருக்கிறது. அப்படி இருக்கும் பரிசுத்தமான நிலையையே பதிநிலை என்று சொல்லுவது. அப்படி பரிசுத்தமாயிருப்பவருக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படாதென்று நாம் உலக அனுபவத்தில் காண்கிறோம். பரிசுத்தமான மனதையுடைய சிசுப்பருவத்தில் அதைச்சுற்றி யிருப்பவர்களுக்கு பலவித ஆபத்து வந்தபோதிலும், அந்த சிசுவிற்கு ஒருவித ஆபத்தும் நேரிடாதிருப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். கருப்பத்தில் பத்து மாதம் கழிந்தபிறகு, சிசு இந்த உலகத்திற்கு வெளிவருகிறது. இதில் எல்லோரும் ஒரு விசேஷத்தைக் கவனித்திருக்கலாம். அந்தச் சிசு, பைக்குள் இருக்கும்வரைக்கும் உருவம் சிறுத்திருக்கும். ஆனால் அது இந்த உலகத்தில்வந்து, இந்த உலகக் காற்றுபட்ட ஒரு சில நிமிஷங்களுக்குள்ளேயே உருவம் பெருத்து விடுகிறது. உள் வாயுவே மூச்சாகக்கொண்டு இருக்கும்போது அதற்கு இந்திரிய வாசனையும் கிடையாது, மல ஜலமும் கிடையாது. பசி தாகம் கிடையாது. ஆனால் இந்த உலகத்தில்தோன்றி இந்த உலக வாயுவை உட்கொண்ட ஒரு சில நிமிஷத்திற்குள்ளேயே மலஜல நிவிருத்தி ஏற்படுகின்றது. பசிதாகம் ஏற்படுகின்றது, அழத்தொடங்குகிறது. இந்திரியவாசனை ஏற்பட்டுக் கண்ணை விழித்துப் பார்ப்பவைகள் முதலியன தோன்றுகின்றன. இதி

விருந்து நாம் தெரிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால் இந்த உலகக் காற்றில் ஏதோ இருக்கிறது. அது இந்தக் குழந்தையின் சரீரத்திற்குள் நுழைந்துதான் இவ்வளவு வித்தியாசங்கள் ஏற்படுகின்றன. எப்படி சில விஷவாயுக்கள் நம் சரீரத்தில் புகுந்தால், நமக்கு மயக்கமோ அல்லது புத்தி மாறுதலோ, ஏற்படுகின்றதோ அதேபோல் இந்த விஷவாயு வாகிய உலகக்காற்று நம் சரீரத்தில் புகுந்தால், எல்லாமற்று பரிசுத்தமாயிருந்த நமக்கு, உலகபாசங்களாகிய மாறுதல்களை உண்டாக்குகின்றது. ஆகவேதான் முதல் ஆதாரமாகிய இந்த உலகக் காற்றை அறவே நீக்க வேண்டுமென்பது தெளிவாகத் தெரிகின்றது. அந்தக் காற்றும் அதனால் உண்டாகும் மாறுதல்களுமே பாசம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதமாக பரிசுத்தமாகிய நாம் பாசத்தோடு சம்பந்தப்பட்டதினால்தான் பசுவாக நாம் ஆகியிருக்கிறோம். ஆகையால் பகுத்தறிவுள்ள நாம் இந்தப்பாசத்தை நீக்கினால் பழையபடி பரிசுத்தத்தை அடைந்து பதியாகிறோம். இந்த உலகபாசத்தை நீக்க வழி எது என்று ஆராய்ந்தால், இந்த உலக மூச்சை நாம் உட்கொள்ளுவதினால்தான் நமக்கு சகலவித மலங்களும் ஏற்படுகின்றன என்று தெரிந்து, நம் சரீரத்தில் இதுவரை உட்கொண்ட உலக மூச்சை நாம் நிறுத்திக்கொள்ள வேண்டும். அப்படி நிறுத்தி நம்முள்ளிருக்கும் வாயுவையே உபயோகப்படுத்திக்கொள்ளவேண்டும். அதுவே நமக்கு ஆகாரம் கொடுக்கும். இதையேதான், அறிந்த சில பெரியவர்கள் அநேக நாட்கள் குகைகளில் அடைபட்டும் மண்ணில் புதைபட்டும், உயிருடனிருக்கிறார்கள். அப்படி இருப்பதே பசுத்தன்மைக்குக் கொண்டுபோகும்.

அப்படி உலக மூச்சை வெளிப்படுத்தி உள் மூச்சை சுழிமுனை நாடியில் நிறுத்துவது சுலபமான காரியமல்ல. அதை, அதில் தேர்ந்த ஒரு குரு வந்து நமக்கு சொல்லிக் கொடுத்துச் செய்துகாட்டினால்தான் முடியும். அப்படிப்பட்ட குருவை நாம் தேடிப் போகவேண்டியதில்லை. நாம் அந்த நிலைக்கு வந்தால், பக்குவத்திற்கு வந்தால், குரு தானாகவே வருவார். அந்த நிலைக்கு வருவதற்கு நாம் மனதை சாந்தமடையச்செய்து பரிசுத்தப்படுத்தவேண்டும். அதற்கு நாம் முதலில் நமது ஐந்து இந்திரியங்களையும் வெளிச் செல விடாது உள் நோக்கிச் செலுத்தவேண்டும். நாம் நமது சகலவித ஆசைகளையும், எண்ணங்களையும் மறக்கவேண்டும். ஆகவே, நாம் இந்த உலக பாசத்தை நீக்கி பரிசுத்தத்தை அடைந்து உள் மூச்சை நிறுத்தி அப்பியாசித்தால் நாம் பதியாவோம்.

இதையேதான் முதலில் சொன்னபடி "சிவாயநம" என்பது குறிக்கிறது.

---

## மனிதப் பிறவியின் பெருமை.

இவ்வுலகில் உயிருள்ள பொருள்கள் என்றும் உயிரில்லாத பொருள்களென்றும் இரண்டு வகையுள்ளன. அப்படி உயிருள்ள பொருள்கள் ஓரறிவு உள்ளவைகள், ஈரறிவுள்ளவைகள், மூன்று, நான்கு, ஐந்து, ஆறு அறிவுள்ளவைகள் என்று உள்ளன. இவ்வாறறிவுள்ளவைகளே நாமாகிய மனிதப் பிறவிகள். இந்த ஆருவது அறிவே நல்லது கெட்டது என்று, பகுத்தறியும் பகுத்தறிவு. மற்ற உயிர்களுக்கு இல்லாதஇந்த பகுத்தறிவுடன் நாம் மனிதய்ப்ப்பிறந்திருக்கிறோம். இந்த பகுத்தறிவால்தான் நாம் முன் சொன்னபடி உயிருள்ள பொருள்கள், உயிரில்லாத பொருள்கள் என்றும், ஓரறிவு முதல்கொண்டு ஆறறிவுள்ளனவாகப் பொருள்கள் இருக்கின்றனவென்றும், உணர நேர்ந்தது. இந்த நாம், பிறகு என்ன வாவோம் என்றும் உணர வசதி இருக்கிறது. இப்படி அறிவதையே மதம் என்றும், ஞானம் என்றும் சொல்லப்படுகிறது. இதைக்கொண்டுதான் நாம் யார், நாம் இங்கு எதற்கு வந்தோம், நாம் பிறகு என்ன ஆவோம் என்றெல்லாம் பரிசிலனை செய்து உணரக்கூடும். அப்படி உணரும்போது ஆதிகாலத்தில் முதலில் மிருகங்களிலிருந்து மனிதர்களாகப் பிறந்ததாகவும், அப்போது அவர்களுக்குப் பகுத்தறிவு அவ்வளவு விசேஷித்து இல்லை என்றும், அவர்கள் அப்போது, மிருகத்தன்மையுடனும், மனித உருவத்துடனும் இருந்தார்கள் என்றும் ஆராய்ச்சியால் ஏற்படுகின்றது. பிறகுதான் அவர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் பகுத்தறிவு விருத்தியடைந்து வந்தது. முதலில் அவர்களுக்கு ஒரு வித்தியாசமும் தெரியவில்லை. கொஞ்சம் அறிவு வளரவே அவர்களுக்குக் கொஞ்சம் வித்தியாசம் தெரிந்தது. அப்போது அவர்கள் உலகம் சாதாரண வஸ்துவென்றும் சூரியன், சந்திரன், இடி, மழை, தீ, முதலியவைகள் அசாதாரண வஸ்துக்கள் என்றும் உணர்ந்தார்கள். பிறகு அவைகளைக் கொஞ்சம் மதிக்க ஆரம்பித்தார்கள். பிறகு அவைகளைத் தெய்வங்கள் என்று வணங்க ஆரம்பித்தார்கள். அப்போது, அக்காலத்தில் அவர்களுக்கு உணவாயிருந்த மதுவையும் மாமிசத்தையும் அத்தெய்வங்களுக்கு வைத்துப் பூஜித்துப் பிறகு உண்டார்கள். நாளடைவில் அவர்களுக்கு அறிவு மேலும் வளர, இவைகள் தெய்வங்கள் அல்ல

வென்றும், அவைகளும் இந்த உலகத்தைப் போன்றவைகள் தான் என்றும் உணர்ந்து, உலகத்தில் அநேகவித மாறுதல்கள் ஏற்படுவதை உணர்ந்தார்கள். அந்த மாறுதல்களுக்குக் காரணம் ஏதோ ஒரு சக்தி என்று உணர்ந்தார்கள். பிறகு ஏதோ ஒரு கடவுள் அந்த சக்தியால் அப்படி செய்கிறார் என்று தெரிந்தார்கள். பிறகு அறிவால் அந்தத் தெய்வம் யார், எப்படிப்பட்டது, எங்கே இருக்கிறதென்று ஆராயத் தொடங்கினார்கள். அப்போது கடவுள் தனியாக வெளியே இருக்கிறார் என்று உணர்ந்தார்கள். பகுத்தறிவு இன்னும் விருத்தியடைந்தபோது, கடவுள் வெளியே இல்லை நாம் அந்தக் கடவுளின் ஒரு பாகந்தானென்றும் உணர்ந்தார்கள். பிறகு நாமே கடவுள், கடவுள் என்று வேறு தனியாக இல்லை என்றும் உணர்ந்தார்கள். இவைகள் மத விஷயத்தில் அந்தப் பகுத்தறிவால் அடைந்த விருத்தியாகும்.

உலக விஷயத்தில் கவனிப்போம்: இந்த உலகம், ஆகாயம், வாயு, தீ, நீர், மண் என்பவைகளால் ஆனது என்றும், இந்த உலகத்திலுள்ள பொருள்கள் அவைகளால் ஆனவை என்றும் உணர்ந்தார்கள். நமக்கு ஐந்து இந்திரியங்கள் உண்டென்றும், அவைகளைச் சரியாக உபயோகப்படுத்தும் விதங்களையும் உணர்ந்தார்கள். அந்த உணர்ச்சி அறிவால்தான் மொழி, ஆகாரம், அவை செய்யும் விதம், நம் சரீரத்திற்கு வேண்டியவற்றைத் தேடிக்கொள்ளுதல், நமக்கு அன்னியமாயுள்ள மற்றப் பொருள்களை நமக்கு உபயோகப் படுத்திக்கொள்ளுதல், மாட்டு வண்டி, குதிரை வண்டி முதலியவை வைத்துக்கொள்ளுதல், மிருகம் முதலியவைகளை நமக்கு உபயோகப்படுத்திக்கொள்ளுதல், நிலத்தைப் பேணிப் பயிரிடுதல், வாயு, தீ, நீர் முதலியவற்றை உபயோகப்படுத்திப் பலவித இயந்திரங்கள் முதலியன செய்துகொள்ளல் ஆகியவற்றைத் தெரிந்துகொண்டார்கள். இன்னும் விருத்தி செய்து கொண்டு போகிறார்கள்.

இந்தப் பகுத்தறிவால்தான் இப்படி உலக விஷயத்தில் எவ்வளவு விருத்தி செய்துகொண்டாலும் தனக்கு ஒருவித நிலையான பலனும் கிடைக்காது என்று, அறிவு அதிகம் விருத்தியான சிலர் உணர்ந்தார்கள். அவர்கள் நிலையானவற்றைக் கண்டுபிடிக்கும் வகையிலேயே தங்கள் அறிவைச் செலுத்திச் சென்றார்கள். அப்படிச் செலுத்தும்போது நாம் தினமும் காணக்கூடிய ஒரு விஷயத்தைத் தெரிந்தார்கள். அதாவது நால்வகை உற்பத்தியில் ஒருவகையான பயி

லிருந்து உற்பத்தியாகும் உயிர்களில் நாமும் ஒன்று. அதில் நாம் பத்துமாதம் தாய் வயிற்றிலிருந்து வெளிவந்தோம். அந்தப் பத்து மாதங்களில் மூன்றுமாதம் வரைக்கும் கர்ப்பத்தி லிருக்கும் உருவுக்கு உயிர் இல்லை. பிறகு உயிர் வந்தது. அப்படி ஏழுமாதம் உயிருடனிருந்தாலும் அந்தப் பைக்குள் அந்தச் சிசு அவ்வளவு காலம் ஆகாரமில்லாமலும் மூச்சு இல்லாமலுமிருந்தது. அந்தக்காலத்தில் அது, பசி தாகம் இல்லாமல், மலஜல பிரவிருத்தி இல்லாமல், இந்திரியங்கள் நுகர்ச்சி இல்லாமல் இருந்தது. அப்போது அது மகா பரி சுத்தமாக இருந்தது. பிறகு இந்த உலகத்தில் பிறந்து உலகக் காற்று உட்கொண்ட சில நிமிஷங்களுக்குள்ளேயே பசி தாகம் ஏற்பட்டு அழத்தொடங்கி மலஜலப் பிரவிருத்தியாகிக் கண் திறந்து, வாய்திறந்து இந்திரியங்களுக்கு நுகர்ச்சி உண்டா கிறது என்றெல்லாம் தெரிந்துகொண்டார்கள்.

கருப்பப் பையிலிருக்கும்போது அதற்கு மூச்சு இல் லாமல் இல்லை; ஆகாரமில்லாமலில்லை. ஆகாரத்திற்கும், மூச்சுக்கும் தன் சரீரத்தில் இருக்கும் ஒருவித வாயுவையே உபயோகப்படுத்திக்கொண்டு வந்தது. இப்படி இந்த உலகக் காற்றை உட்கொள்ள, நாளடைவில் நமக்குப் பலவித் மலங்க ளும், வினைகளும் உண்டாகி, சுகதுக்கம் அநுபவிக்க ஏற்படு கிறது. இதைப் பகுத்தறிவால்தான் உணர்ந்து, காரணம் தேடும்போது இந்த உலகக் காற்ருகிய மாயைதான் அவ்வள வுக்கும் காரணம் என்று உணர்ந்து, அதை நிவர்த்திக்க ஏற் பட்டது. நம் சரீரத்தில் ஏறின உலகக் காற்றை வெளிப் படுத்த வழியும், சிசுவைப்போல் சரீரத்திலிருக்கும் வாயுவை உபயோகப்படுத்தும் வழியும் தேடி அந்த வழிகளைக் கண்டு பிடித்தார்கள். இதைத்தான் கிறிஸ்துவ மதத்தில் குழந்தை களைப்போலானல்தான் கடவுள் இராச்சியத்தைக் காணமுடி யும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது மூச்சை இரண்டு மூக்குத் துவாரங்களாகிய இடகலை பிங்கலைகளில் இழந்துவிடாமல் முக்கோண வடிவமாக இரு புருவ மத்தியில் நெற்றிக்கும், மூக்கு நுனிக்குமாக இருக்கும் சுழிமுனை நாடி யில் நிறுத்தி, முக்கோண வடிவமாக நமது அடிவயிற்றில் முடக்கிக் கிடக்கும் குண்டலி நாடியை நமது முதுகெலும்பு மத்தியில் இருக்கும் மூளையில் நுட்பமாக ஓடும் நாடியை ஆச னத்தை தொட்டுக்கொண்டிருக்கும் வால் எலும்பின் நுனி வழியாய் ஏற்றி, உச்சந் தலையிலிருக்கும் சகஸ்ராதார நாடிக் குச் செலுத்த வேண்டுமென்று உணர்ந்தார்கள். அப்படிச் செலுத்தினுல் ஞானம் உண்டாகி, உண்மையை உணர்ந்து

நிலையயான இன்பம் அடைகிறார்கள். அப்படி நாடியைச் செலுத்த இந்த உலகத்திலுள்ள எல்லா ஜீவராசிகளின் சரீரத்திலும், நமது சரீரமே பொருந்தியது. முதலாவதுமற்ற ஜீவராசிகளுக்கு அறிவு குறைவு, நல்லது கெட்டது உணர்ந்து வழி தேடி செய்யும் அறிவு இல்லை. இரண்டாவது, சரீர அமைப்பில் நம்முடையதுதான் அந்தப்படி நாடியை மேலே செலுத்த வால் எலும்பு ஆசனவாய்க்குச் சமீபத்தில் இருக்கிறது. மற்ற ஜீவன்களுக்கு அப்படி இல்லை. ஆகையினால் நமது முடிவுக்கு பகுத்தறிவோடுகூடிய நமது சரீரமே தக்கது. ஆகவே நமது பகுத்தறிவின் மேன்மையும் நம் சரீரத்தின் மேன்மையுமே மேன்மை.

## நாடிகளின் தத்துவம்.

நம் சரீரத்தில் 72,000 நாடிகளிருக்கின்றன. இதைக் குறிக்கவே சிதம்பரத்தில் மூலமண்டபத்தில் 72,000 ஆணிகள் ஓடுகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஓடுகள் 21,600 இருக்கின்றன. அவை நாம் ஒரு நாளில் விடும் மூச்சைக் குறிக்கின்றன. அந்த மண்டபத்தின் மேலிருக்கும் ஒன்பது கலசங்களும் நம் ஒன்பது சக்திகளைக் குறிக்கின்றன. அந்த மண்டபத்திலிருக்கும் 96 சன்னல் துவாரங்களும் நம் உடலிலிருக்கும் 96 தத்துவங்களைக் குறிக்கின்றன. மேற்சொன்ன நாடிகளில் முக்கியமானவை 1008 அவைகளிலும் முக்கியமானவை 108 நாடிகள். இதைக் குறிக்கவே ஆலயங்களில் 1008 அல்லது 108 நாம அர்ச்சனைகள் வைக்கப்பட்டிருக்கிறது. இதையேதான் ஒரு சித்தர் 1008-ம் கண்டேன் அதற்குள் 108-ம் கண்டேன் என்று சொல்லியிருக்கிறார். இந்த 108-லும் முக்கியமானவை 51. அதிலும் முக்கியமானவை 18 நாடிகள். அந்த 18 நாடிகளிலிருக்கும் இடங்களில் தான் மதக் குறியாகிய நீறு, நாமம், சந்தனம் முதலியவற்றை இடுகிறார்கள். அப்படி இடுவதால் அந்த இடத்திலிருக்கும் நாடிகள் சுத்தமாய் ஓடி, வியாதிகளை அணுக ஒட்டாமல் தடுக்கும். இக்காரணத்தினாலேயேதான் சில காலத்திற்கு முன்பு வரைக்கும் நம் நாட்டில் குழந்தை பிறந்த உடனே, அக் குழந்தையின் சரீரத்தில் சில இடங்களில் இலேசாக சூடு போடப்பட்டு வந்தது. தற்காலம் அது அநாகரீகமென்று நீக்கப்பட்டிருக்கின்றது. முற்காலத்தைவிட தற்காலம் சிறுவர்களுக்கு அதிகமாகக் குணக்கேடு ஏற்படுவதின் காரணங்களில் இதுவும் ஒன்று. இன்னும் கீழ்ப் பிறப்பில் பிறந்தோர்கள் அவ்விடங்களில் \|/ மாதிரி அல்லது ≡ மாதிரி பச்சை குத்

திக்கொள்கிறார்கள். இப்படிப் பச்சை குத்தினால் வியாதி நீங்குகிறது என்பதை இன்னமும் சிலர் தங்களுக்குக் கீல் வாயுவு உண்டானால், அந்தக் கீல் பாகத்தில், அம்மாதிரி பச்சை குத்திக்கொள்வது நிரூபிக்கிறது. இக்காரணத்தினால்தான் சிலர் மதத்தின் பெயரால், தங்கள் திரேகத்தின் சில பாகங்களில் இலேசாக சூடு போட்டுக்கொள்கின்றார்கள். இந்த 18 நாடிகளிலும் மிக முக்கியமானவை 5. சிலர் தங்கள் ஆராய்ச்சியின்படி 6 என்பர். இந்த 5 நாடிகளிலும் முக்கியமானவை 3. எல்லாவற்றிலும் முக்கியமானது 1.




இது நாடிகள் இருக்குமிடங்களை காட்டும் படம்.

இத்துடன் சேர்த்திருக்கும் படத்தில் I இலக்கமிட்ட மனித உருவமுள்ள சித்திரத்தைப் பார்க்கவும். அதில் × ஆகப் பத்து இடங்களில் குறிக்கப்பட்டிருக்கின்றது. எல்லாவற்றிலும் முக்கியமானது ×5-வது இலக்கமிட்ட இடம். அந்த இடத்திலிருக்கும் மூளைபாகம் விருத்தியடைந்தால் நமக்கு ஞானம் உண்டாகும். அந்த இடத்திற்கு சகஸ்ராதார நாடி என்று பெயர். அதாவது அது 1008-வது நாடி. அந்த ஞானம் உண்டாக யோகம் அல்லது தியானம் செய்யவேண்டும். இதற்கு இரண்டு வழிகள் உண்டு. ஒன்று $\frac{4}{0}$ என்று குறிப்பிட்ட இரண்டு புருவங்களின் மத்தியிலிருக்கும் மூளை பாகத்தில் புத்தியை நிறுத்தி இரண்டு கண்களின் பார்வையையும் அவ்விடத்திலேயே நிறுத்தவேண்டும். இப்படிச் செய்தால் ×5-வது பாகம் விருத்தியடைய வெகு நாளாகும். அதற்கு மற்றோர் குறுக்கு வழி இருக்கின்றது. மூளையின் ஓர் பாகம் வால்போல் முதுகெலும்பிற்குள் ஓடி இருக்கின்றது. இது மேற்சொன்ன I இலக்கமிட்ட படத்தில் பச்சைக் கோட்டினால் குறிக்கப்பட்டிருக்கின்றது. அந்த நீண்ட மூளையின் மத்தியில் ஒரு வெகு நுட்பமான நாடி ஓடுகின்றது. அந்த நாடியில் 1, 2, 3, 4, என்னும் இடங்களில் முடிச்சுகள் இருக்கின்றன. அந்த முடிச்சுகளைத் தளரச்செய்யவேண்டும். இதற்கு $\frac{4}{0}$ என்ற இடத்தில் தியானம்

வைத்து $^{3}_{0}$ என்ற இடத்தில் மூச்சை அடக்கி $^{2}_{0}$ என்ற இடத்தில் இருக்கும் ஈரலில் விரியச்செய்து அந்தப் பிராண வாயுவை $^{1}_{0}$ என்ற இடத்திலிருக்கும் இரைப்பை வழியாகவும், பிறகு $^{1}_{0}$ முதல் ${}_{0}$ வரைக்கும் குடலில் பிரவேசிக்கச்செய்து ${}_{0}$ என்ற இடத்திலிருக்கும் ஆசனத்தை இறுக மூடி அந்த வாயுவை ${}_{0}$ என்ற இடத்தில் இருக்கும் மூளைவால் அடிவழியாக அதற்குள்ளிருக்கும் நாடியின் வழியாக மேலே செலுத்த வேண்டும். அப்படிச் செலுத்தி ×1 என்ற இடத்திற்கு ஏற்றி அங்கிருக்கும் முடிச்சை அவிழ்க்கச் செய்யவேண்டும். ஆகையால் அந்த $^{1}_{0}$ என்ற இடத்திலிருக்கும் நாடி முக்கோணமாயிருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அந்த நாடிக்கு "மூலாதாரம்" என்று பெயர். அதன்பிறகு ×2 என்ற இடத்திலிருக்கும் நாடியின் முடிச்சு அவிழ்க்கப்பெற்று, பிறகு ×3 என்னும் இடத்திலும், ×4 என்ற இடத்திலும் இருக்கப்பட்ட முடிச்சுகள் அவிழ்க்கப்பட்டால் பின் அந்த வாயு ×5 என்ற இடத்திற்குப்போய் மூளை விரிந்து விருத்தியாகும். அப்பொழுது அங்கு மூடப்பட்டுக்கிடக்கின்ற ஞானம் வெளிவரும்.

II




இது நாடிகள் இருக்குமிடங்களைக் காட்டும் படம்.

இதையே சுவாமி விவேகானந்தர் இத்துடன் சேர்த்திருக்கும் படத்தில் II-வது இலக்கமிட்ட சித்திரத்தைப் போல் போட்டுக் காட்டியிருக்கின்றார். அதில் ஆறு இதழ்கள் உள்ள ஒரு இலையின்மேல் ஒரு கம்பு இருப்பதாகவும், அந்த இடத்திலிருந்து ஒரு பாம்பு புறப்பட்டு 1 என்ற இடத்திற்குப்போய் அங்கிருந்த முடியைத் தாண்டி 2 என்ற இடத்திற்கு வந்து, அதுபோல் 3, 4, என்ற இடங்களுக்கும் வந்து, பிறகு 5 என்ற இடத்திற்கு வருகிறது. அப்பொழுது ஒரு ஜோதி தோன்றுகிறது. அந்த ஜோதியில் கவிழ்ந்த ஒரு தாமரைப் புஷ்பம் தோன்றுகிறது. ஆறு இதழ்களையுடைய இலை ஆறு சமயங்களின் கொள்கைகளும் கடைசியில் ஒரே கொள்கையில் முடிகின்றது என்பதைக் குறிக்கின்றது. கம்பானது நம் உடலிலிருக்கும் மூளையின் வால்போல் உள்ளது. பாம்பானது அதன் மத்தியிலிருக்கும் நுட்பமான நாடியின் வழியாகச் செல்லும் வாயு, அந்த வாயு

முன்சொன்னபடி 4 இடங்களிலுள்ள கட்டுகளைத் தாண்டி உச்சியாகிய 5 என்னும் இடத்திற்குச் சென்றால் நமக்கு ஞானஜோதி தோன்றும். அப்பொழுது கவிழ்ந்த தாமரைப் பூவிதழ்கள் எல்லாம் ஒரே காம்பில் முடிந்ததுபோல் இந்த உலகில் நாமரூவமாக உள்ள வஸ்துக்கள் ஒன்றே எனத் தோன்றும்.

ஆனால் இந்தப்படி வாயுவை மேலே செலுத்தினால் ஞானம் சுளுவாக சீக்கிரம் உண்டாகும். அப்படிச் செலுத்துவது மிகக் கஷ்டம். அதில் கொஞ்சம் பிசகினால் பலன் அதிக விப்ரீதமாகவே உடலுக்கு ஏற்படும். ஆகையால் மனதை நிலைநிறுத்தப் பழகினவர்கள் அதில் தேர்ச்சிபெற்ற ஒரு குருமுகத்தான் தெரிந்துகொள்ள வேண்டும். நமக்கு அந்தப் பக்குவம் வராவிட்டால், உண்மையான குரு நமக்குத் தெரிவித்துக் கொடுக்கமாட்டார். அதற்குப் பக்குவம் வர மனதை நிலைநிறுத்தப் பழகவேண்டும். அப் பழக்கம்தான் பக்தி என்பது. ஆலயம் முதலிய இடங்களுக்குச் சென்று மனதை வெளியிடங்களில் செல்ல விடாமல் ஓர் இடத்தில் நிலைநிறுத்தப் பழகவேண்டும்.

இந்த ஐந்து நாடிகளையும் கடந்தால் ஞானம் உண்டாகும் என்பதை உணர்த்தவே சிதம்பரத்தில் கோயிலில் 5படிகள் வைத்து அதைத் தாண்டினால்தான் நடராசர் இருக்குமிடமும் போகும்படி அமைக்கப்பட்டிருக்கின்றது.

பஞ்சாட்சரமாகிய "நமசிவய, சிவயநம" என்பது அந்த ஐந்து நாடிகளை உணர்த்துகின்றது. ஆறு அட்சரங்களாகிய 'சரவணபவ' என்பதும், "நாராயணநம" என்பதும் அதுபோல் ஆறுநாடிகளை உணர்த்துகிறது.

சிவோகம் என்பது சோகம் என்பதைக் குறிக்கிறது. சோகம் என்றால் சோ + அம். அதாவது மூச்சை உள்ளுக்கு கணக்குப்படி இழுத்து மறுபடியும் கணக்குப்படி வெளியே விடுவது. இதற்குத்தான் வாசி என்று சொல்வது. இதுதான் மாற்றிப் படித்தால் சிவா என்று ஆய்விட்டது. இப்படி சோகம் செய்தால் முடக்கிக் கிடக்கும் மூலாதாரத்தில் முக்கோண வடிவமாகக் கிடக்கும் நாடி கிளம்பி உச்சியில் சகஸ்ராதாரத்தில் இருக்கும் இடத்திற்குச் சென்றால் ஞானம் உண்டாகும். இப்படி நாடியை செலுத்தினால் போகும் வழியே ૭ என்று உண்டாகிறது. இதுவே ஓங்காரத்தின் ஓ என்ற எழுத்தின் தத்துவம். இதை உணர்த்தவே கிருஷ்ணலீலைகளில் காளிங்க கர்த்தனம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிவன் கோவிலிலும், சோமாஸ்கந்தர் என்ற உருவம் வைக்கப்பட்

டிருக்கிறது. அந்த உருவத்தின் அமைப்பும் ? என்ற உரு வத்தைக் குறிக்கிறது.

பக்கத்தில் காட்டியிருக்கும் படங்களில் 1, 2, 3, 4, என்று போட்டிருக்கும் இடங்களில் நாடி வட்டமாதிரியு மில்லாமல், சதுரமாதிரியு மில்லாமல் ஒருமாதிரியாக ஒரு சுற்றுச்சுற்றிக் கொண்டு இருக்கிறது. இதையே ஒரு சித்தர் முக்கோணமும் அதற்குமேல் நான்கு சதுரமும் காணவேண்டு மென்று சொல்லியிருக்கிறார்.

---

## சிதம்பரத்தின் தத்துவம்.

நமது இந்தியாவில் தமிழுலகம்தான், மதம் முதலிய எல்லாவற்றிலும் தலைசிறந்து விளங்கிற்று. அதுதான் உலகி லுள்ள மற்ற பாகங்களுக்கு நல்கியதென்று எல்லாராலும் ஒப் புக்கொள்ளப்பட்ட விஷயம். அந்த மதம் இன்னமும் இந்தி யாவில் முக்கியமாக தமிழ் நாட்டில் தனக்கு நிகரில்லாதபடி, மற்றெல்லாவற்றையும் தன்னுள் அடக்கி சிறந்து விளங்கு கிறது. அதற்கு இருப்பிடமாகிற சிதம்பரத்தில் சிற்சபை யையே எடுத்துக்காட்டாக வைக்கப்பட்டிருக்கிறது. சிற் சபை என்றால் ஞானம் இருக்குமிடம். சரியை, கிரியை, யோகம், ஞானம் அல்லது பக்தி, யோகம், ஞானம் என்பவை களில் ஞானமே முதலில் வைக்கப்பட்டு மற்றவைகள் அதற்கு வழிகாட்டியாக வைக்கப்பட்டிருக்கிறது. அந்த ஞானமே நமது தமிழ் மதம். இதைக் குறிக்கவே, சிதம்பரமும், அதன் கோயிலும் அமைக்கப்பட்டிருக்கிறது.

ஒரு காலத்தில் நமது தமிழ் நாடு வடக்கே திருவேங் கட மலையையும் தெற்கே குமரியையும் எல்லையாகக்கொண்டு இருந்தது. அதுசமயம் சிதம்பரம் அந்த நாட்டிற்கு மத்தி யாக விளங்கிற்று. சிதம்பரம் என்ற ஊரில் கடவுளாக எழுந் தருளியிருக்கும் நடராசர் கோவில் ஊர் மத்தியில் அமைக்கப் பட்டிருக்கிறது. ஆகவே அந்தக் கடவுள் நம் மத்தியில் இருக் கிறார் என்று உணர்த்துகிறது. அந்த உருவம் இருக்கும் அறையும் அந்தக் கோவில் மத்தியில் கொஞ்சம் இடது பக்கம் தள்ளி அமைக்கப்பட்டிருக்கிறது. நமது சரீரத்திலும் (கோவில் நமது சரீரத்தையே குறிக்கிறது) கொஞ்சம் இடது பக்கம் தள்ளித்தான் நமது இருதயம் இருக்கிறது. ஆகவே அந்தக் கடவுள் நம் இருதயத்திற்குள்தான் இருக்கிறார் என்று விளங்குகிறது. அந்த இடமும் சுற்றுப்பக்கம் இருக்

கும் பூமி மட்டத்திற்கு உயரமாகவே மேலாகக் கட்டப்பட்டிருக்கிறது. நாம் கடவுளைக் காணவேண்டுமானால் இந்த உலக அறிவுக்கு மேலாக ஆகவேண்டுமென்று உணர்த்துகிறது. அந்த இடத்திற்கு போகவேண்டுமானால் இருபுறமும் அமைக்கப்பட்டிருக்கும் ஒன்பது படிகளின்மேல் ஏறவேண்டும். நமது இருதயத்திற்கு இருபுறமும்தான் வழியுண்டு. ஆகவே அந்தக் கடவுள் நம் இருதயத்தில்தான் இருக்கிறார் என்றும் அவரைக் காண நாம் முதலில் நமது ஒன்பது துவாரங்களையும் அடக்கவேண்டுமென்றும் உணர்த்துகிறது. அப்புறம் அங்கே 18 தூண்கள் அடங்கிய மண்டபம் இருக்கிறது. இதைத் தாண்டித்தான் அந்த உருவம் இருக்கும் அறைக்குப் போக வேண்டும். அதாவது பிறகு நாம் நமது முதல் 18 தத்துவங்களையும் அடக்கி, கடக்கவேண்டுமென்று உணர்த்துகிறது. பிறகு அந்த அறை இருக்கிறது. அதற்குள்தான் அந்த உருவம் இருக்கிறது. அந்த அறைக்குமேல் கூரையாக 64 கைமரங்களும், அதற்குமேல் 21,600 ஓடுகளும், அந்த ஓடுகளுக்கு 72,000 ஆணிகளும் இருக்கின்றன. அந்த அறை நம் சரீரத்தையே குறிக்கிறது. 64 கைமரங்களும் நமது சரீரத்தில் அடங்கி இருக்கும் 64 உறுப்புக்களைக் குறிக்கின்றன. 72,000 ஆணிகளும், நமது 72,000 நாடிகளையும், 21,600 ஓடுகளும் நாம் ஒவ்வொரு நாளும் விடும் மூச்சுகளையும் குறிக்கின்றன. அந்த கூரைமேல் இருக்கும் 9 கலசங்களும் நமது 9 சக்திகளையும் குறிக்கின்றன. அந்த அறைக்கு 96 பலகணிகள் இருக்கின்றன. இவை நமது சரீரத்தின் 96 தத்துவங்களைக் குறிக்கின்றன. இவை எல்லாம் கடவுள் நம்மில்தான் இருக்கிறார் என்று உணர்த்துகின்றன. அந்த அறைக்குப் போக 5 படிகள் இருக்கின்றன. இவைகள் பஞ்சாட்சரம் என்று சொல்லப்பட்டவை. அதைக்கொண்டுதான் மேலே ஏறவேண்டும். அதாவது நமது முக்கியமான 5 நாடிகளை அடக்கி யோகம் செய்யவேண்டும். அப்படி யோகம் செய்வோமானால், நமக்கு ஒன்றின் பின் ஒன்றாக அநேக விஷயங்கள் கிடைக்கும். இவைகள் அந்த அறையின் முதலில் நிற்கும் 10 தூண்களும், இவைகளில் ஏதேனும் ஒன்றைப் பிடித்துக்கொண்டால் அப்புறம் மேலே போகமுடியாது. கடவுளை அறிய முடியாது. ஞானம் அடைய முடியாது. ஆகையால் எல்லாவற்றையும் விட்டுத் தாண்டிச் செல்லவேண்டும். அப்போது கடவுள் ஜோதி உருவமாக, நடராசமூர்த்தியாக அல்லது பக்கத்திலிருக்கும் அம்பாளாகவோ, அதாவது சக்தியாகவோ தோன்றும். கற்பூரம் கொளுத்தி, அந்த உருவங்

கவின் முன் காட்டினுல் அந்த உருவங்கள் முதலில் ஒரு சுடராகத் தோன்றும். ஊன்றிக் கவனித்தால் பிறகு அவைகள் உருவங்கள் நன்ருகத் தோன்றும். அந்த உருவங்களின் தத்துவங்களேப்பற்றித் தனித் தனியே சொல்லப்பட்டிருக்கிறது அதாவது கடவுள் என்பது எத்தன்மையது என்று விளங்கும். அந்த இடத்தில் அம்பாளேத் தனியாக வைத்திருப்பது போல் நாம் அந்த அம்பாளேயும், சக்தியையும் கவனியாமல், நடராசராகிய ஜோதியைப்பிடித்து அதையும் தாண்டினுல் சிதம்பர ரகசியம் என்பது தோன்றும். இதுதான் ஞானம். அதாவது பிறகு எல்லாம் ஒன்றுமில்லாத ஒரே வெளியாகி விடும் என்பஸ்தக் குறிக்கிறது.

யோகம் செய்யவேண்டுமானுல் கொடுக்கப்பட்டிருக்கும் 32 ஆசன விதிகளில் ஏதாவது ஒன்றின் பிரகாரம் இருந்துகொண்டு, இடுப்பு, நெஞ்சு, கழுத்து, தலே முதலியவைகளே நேராக இருக்கச் செய்துகொண்டு செபிக்கவேண்டும். அப்படி இருத்திக்கொண்டு செய்தால்தான் நாடிகள் சரியாக ஓடும். இல்லாவிட்டால் அந்தந்த இடங்களில் நாடிகள் முடக்கப்பட்டுக் கிடந்துவிடும்.

சிதம்பரம் என்ருல் சித்+அம்பலம், அல்லது சித்+ஆகாசம். இதனுல் சித் என்ற ஞானம் உண்டானுல் எல்லாம் அம்பலம் அல்லது ஆகாசம் என்ற வெளியாய்விடும் என்று ஏற்படுகின்றது. சிதம்பரம் ஏன்பது சித்தம்+அம்பலம். அதாவது சித்தத்தின் முடிவு கடைசியில் அம்பலத்தில் அதாவது வெளியில்போய் முடிகிறது.

---

## சைவ சித்தாந்தம்.

இந்நாட்டில் அநேகருக்கு வேதாந்தம் என்பதும் சித்தாந்தம் என்பதும் வெவ்வேறு என்ற கொள்கை. அதன் படியே பேசி வ்ருகிறுர்கள். ஆனுல் இரண்டும் ஒன்றுதானென்று என்னுடைய அபிப்பிராயம். வேதாந்தம் என்ருல் வேதத்தின் அந்தம். வேதம் என்பது வித் என்பதிலிருந்து வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வித் என்ருல் ஞானம். அந்தம் என்ருல் முடிவு. ஆகவே வேதாந்தம் என்ருல் ஞானத்தின் முடிவு. சித் என்ருல் ஞானம். அந்தம் என்ருல் முடிவு. ஆதலால் சித்தாந்தம் என்ருல் ஞானத்தின் முடிவு. இதனுல் தான் நான் வேதாந்தம் என்ருலும், சித்தாந்தம் என்ருலும் ஒன்றுதான் என்று சொல்லுகிறேன்.

சைவ மதத்தின் ஞான முடிவுக்கு சைவ சித்தாந்தம் என்று சொல்லுவது. சைவமதம் என்பது சிவம் என்பதைப் பற்றி சொல்லுவது. சிவம் என்பது ஓங்காரத்தில் அடக்கம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஓம் என்பது அ உ ம் என்ற மூன்று எழுத்துக்களை உச்சரித்தால் உண்டாகிறது. அ உ ம் என்பது பதி, பசு, பாசம் என்பதைக் குறிக்கிறது. அதாவது பரமாத்மா, ஜீவாத்மா, நாம் என்பதைக் குறிக்கிறது. இதையே சி, வ, ம் என்ற எழுத்துக்கள் குறிக்கின்றன. இதையே சிவய என்று சொல்வது. இதிலிருந்து வந்ததே சிவயநம என்னும் பஞ்சாட்சரம் என்னும் ஐந்தெழுத்துக்கள். ம என்பது ய என்று ஆயிற்று. இவைகளையே சிவனும், சக்தியும், நாமும், என்று சொல்லுகிறது. ஆகையினால் அ-உ-ய என்பதை எட்டும் இரண்டும் பத்து என்று உணரவேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது கணிதப்பிரகாரம் எட்டும் இரண்டும் பத்து. தமிழ் கணிதத்தில் எட்டு என்பது அ. இரண்டு என்பது உ. பத்து என்பது ய. இம் மூன்றையும் சேர்த்தால் ஐ என்ற எழுத்து உண்டாகிறது. எட்டு என்பது எட்டு அங்கங்களுடைய நம் சரீரம். இதில் சிவனும், சக்தியுமாகிய இரண்டும் சேர்ந்தால் பத்தாகிய நாம் உண்டாகிறது. அந்த எழுத்தில் முதல் வளைவு ∩ என்பது அ என்ற எழுத்தின் ஒரு பகுதி. இரண்டாம் பாகமாகிய ற என்பது உ என்பதின் ஒரு பகுதி. இந்த இரண்டையும் சேர்த்து ய என்ற எழுத்தின் மேல் சேர்த்தால் ஐ என்ற எழுத்து உண்டாகிறது. ஆதலால் சைவ மதத்தில் பரமாத்மாவும், ஜீவாத்மாவும், சிவனும், சீவனும், சிவனும் சக்தியும், சரீரத்தில் இருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால்தான் ஐ என்ற எழுத்திற்கு கடவுள் என்று பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஐ என்ற எழுத்தின் தன்மையை உணர்ந்தவர்களே ஐயன் அல்லது ஐயர் என்று அழைக்கப்படுகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சிவத்தை பாவித்து இருப்பது சிவோகம் பாவனை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது சோகம் என்பதிலிருந்து வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சோ—அம் என்பதுதான் சோகம் என்று ஆயிற்று. நமது மூச்சு இடகலை, பிங்கலை நாடிகளில் சாதாரணமாக 12 அங்குலம் உள்ளுக்கும், வெளிக்குமாக ஓடுகின்றன. இவைகளை பழக்கத்தின் பேரில், சுழிமுனை என்ற நாடியில் அதாவது மூக்கின் நுனியில் சும்மா இருந்து ஓடிக்கொண்டிருக்க பழகவேண்டும். அப்படிச்செய்வதுதான் சோ என்று சொல்லப்படுவது.

இதற்குத்தான் வாசி என்றும் சொல்வது. வாசி என்பதைத் திருப்பிப்படித்தால் சிவா என்று வருகிறது. ஆகையால் இதற்குத்தான் சிவ என்று சொல்வது. அப்படி மூக்கின் நுனியில் சி என்று இருக்கச் செய்து வ என்ற சக்தியால் ம் என்ற நமது அடிவயிற்றில் முக்கோண வடிவமாக மூலா தாரத்தில் முடக்கிக் கிடக்கும் நாடியை மேலே கிளப்பி, சுவாதிஷ்டானம், மணிபூரகம், முதலியவைகளைத் தாண்டி சகஸ்ராதாரம் என்னும் நமது உச்சந்தலையிலிருக்கும் நாடிக்கு போகச் செல்லும்படி செய்யச் சொல்லப்பட்டிருக் கிறது. அந்த நாடிகள் போகும் மார்க்கத்தை கவனித்தால் ௨ என்று வருகிறது. இதைத் திருப்பிப்போட்டால் நமக்கு உண்டாவது ૩ என்ற உருவம். இதைத்தான் ஓங்கார எழுத்தின் தத்துவம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்வதுதான் சிவம் என்று சொல்வதின் பொருள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை விளக்கத்தான் சிவன் கையிலும், விஷ்ணு கையிலும் இருக்கும் ம் என்று ஒலிக்கும் சங்கு அந்த சங்கின் உருவம்தான் ૩. தவிர சிவன் கோவில்களில் சோமாஸ்கந்தர் என்று ஒரு உருவம் சிவன் உருவத்திற்கு பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த உருவத்தின் இரண்டு கால்களும் ஒரு மாதிரி வளைத்து வைக் கப்பட்டிருக்கிறது. அந்த உருவம்தான் ௨ என்ற உருவத் தைக் குறிக்கிறது. வைணவர்களில் காளிங்க நர்த்தனம் என்று வைக்கப்பட்டிருக்கிறது. அதுவும் அந்த ௨ உருவத் தைக் குறிக்க வைத்திருக்கிறது. இவைகளைத் திருப்பிப் போட்டால் உண்டாவதே ૩ என்னும் ஓங்காரத்தைக் குறிக் கும் எழுத்து. மனது சுத்தத்துடன் இருந்து அந்த ஓங்கார எழுத்தின் பிரகாரம் நாடியை செலுத்தி ஞானத்தை அடை வதே சிவம் என்று சொல்லப்படுவது. ஆதலால்தான் எல் லாம் ஓங்காரத்தில் அடங்கி இருப்பதாகச் சொல்லப்பட்டிருக் கிறது. ஆகவேதான் உலகத்திலுள்ள எல்லா மதங்களும் இதில், இந்த சிவம் என்பதில், அடங்கி இருப்பதாக சொல்லப் பட்டிருக்கிறது. ஆகவேதான் சிவம் என்பதைப்பற்றிச் சொல் லும் சைவ மதத்தில் மற்றெல்லா மதங்களும் அடங்கி இருக் கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்றெல்லா மதங் களுக்கும் இது தாய்மதம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா மதங்களுக்கும் முக்கியமாக சிவம் என்பதைக் கொள் பவர்களுக்கு காமம், குரோதம், உலோபம் என்பவைகளை நீக் கச் சொல்லியிருக்கிறது. அதன்படி எதையும் குரோத புத்தி யுடன், வெறுக்கும் புத்தியுடனில்லாமல் அன்பே சிவம் என்று

சொல்லப்பட்டபடி அன்புடன் பார்க்கவேண்டும். அன்புடன் இருந்தால்தான் சிவம் என்று சொல்லப்பட்டபடி நாடியை செலுத்தமுடியும். தன் பிள்ளையை எந்தத் தாயும் வெறுக்க மாட்டாள். எப்படி பார்த்தாலும் மற்றெல்லா மதங்களும் சைவ மதம் என்று சொல்லப்பட்டதில் அடங்கிவிட்டன. ஆகையால்தான் பிற மதத்தை வெறுக்கிறவன் உண்மை சைவன் அல்லனென்று பெரியார்கள் கூறியிருக்கிறார்கள்.

இந்த சிவம் என்னும் தத்துவப்படி நாடியை குண்டலியிலிருந்து சகஸ்ராதார நாடிக்குச் செலுத்தினால் ஞானம் உண்டாகும். அப்படி ஞானம் உண்டானால் அவர்களுக்கு இறப்பு இல்லை. இதை உணர்த்தவே நமக்கு மார்க்கண்டேயர் சரித்திரமிருக்கிறது. அந்தச் சரித்திரத்தில் அவர் பள்ளியிலிருக்கும் போதே ஓங்காரத்தின் பொருளை உணர்ந்துவிட்டார் என்று, அவர் ஆசிரியர், அவருக்கு அதற்குமேல் ஒன்றும் சொல்லிக்கொடுக்க வேண்டியதில்லை என்று அனுப்பிவிட்டார். அதன்பேரில் அவர் சிவதரிசனம் செய்துகொண்டு வந்தார். அந்தக் காலத்தில் அவரை அழைக்க வந்த எமனால் அவரை எடுத்துப்போக முடியாமல் அவர் இறப்பில்லா சிரஞ்சீவியாய் விட்டார். அக்தப்படி அந்த சிவம் என்னும் தத்துவத்தின் ? என்பதை உணர்ந்தபிறகு தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் யாதொன்றுமில்லை. அதை அப்பியாசிப்பதேதான் தேவை. அதுபோல் சிவதரிசனம்போல் நாடியை குண்டலியிலிருந்து சகஸ்ராதார நாடிக்குப்போகும்படி செய்தார். அப்போது அவருக்கு ஞானம் உண்டாயிற்று. அப்படி ஞானம் உண்டானவுடன் அவருக்கு இறப்பு என்பதே இல்லாமல் போயிற்று.

---

## நமது மதம்.

கடவுளின் பலவித உருவத்தின் தத்துவம், நுணுக்குகள் முதலியவைகளைப் படித்தபிறகு தற்காலம் நடைபெற்றுவரும் ஒன்றிலும் சேராத, அத்வைத்திலும் சேராத, துவைதாத்வைதத்திலும் சேராத துவைதத்திலும் சேராத பல தெய்வ வணக்கத்திலும்சேராத அசிங்கமான, அர்த்தமற்றகதைகளை ஆதாரமாகக்கொண்ட மதம், நம் இந்தியமதம் அல்லவென்றும் நன்கு விளங்கும். ஆரிய சம்பந்தத்தால் இந்தக் கேடான நிலைமைக்கு நம்மேலான மதம் இறங்கிவிட்டது. சூரியன், சந்திரன், இந்திரன், வாயு வகையறாப்பொருள்களை, வணங்குவது நம் மதமல்ல. ஆறு, சமுத்திரம் முதலியவைகளில் மதத்தின் பெயரால் மூழ்கு

வது நம் மதமல்ல. கருடன் முதலிய பிராணிகளை வணங்குவது நம் மதமல்ல. அர்த்தமில்லாதபடி உருவங்களை வணங்குவது நம் மதமல்ல. மதமென்றாலும் கடவுளென்றாலும் இன்ன தென்று தெரியாத, மத்தியிலிருக்கும் ஒரு சிலரிடம் பணம் கொடுத்து, தேங்காய் உடைக்கச் சொல்லியோ, மலர் சாத்தச் சொல்லியோ, கற்பூரம் கொளுத்தச் சொல்லியோ, வணங்கு வது நம்மதமல்ல. கடவுள் நமக்கு வெளியிலிருக்கிறார் என் பது நம்மதமல்ல. கடவுள் என்று சொல்லப்பட்டவர் நம் மிடத்திலேயே, நம் இருதயத்திலேயே இருக்கிறார் என்பது நம்மதத்தின் முதலடிப்படை. அதுதான் மனச்சாட்சி. அது தான் பரிசுத்தமான அன்பு கொண்ட மனம். இதைக் காண் பதுவே, உணர்வதுவே, ஆத்மதரிசனம் அல்லது ஆத்ம உணர்ச்சி என்று சொல்லப்படுவது. அந்தக் கடவுளைக் காண வேண்டுமானால் தான் தனதென்பது அறவே நீங்கவேண்டும். கருவிகரணங்கள் தோயவேண்டும். இந்திரியங்களை அடக்க வேண்டும். காமம், குரோதம், உலோபம், என்பவைகளை மனம், வாக்கு, காயத்தாலும் ஒழிக்கவேண்டும். மனது ஒரு நிலைப் படவேண்டும். அப்படி எல்லாம் ஒழிந்து மனது பரிசுத்த மானால் அப்போது உண்மையை, ஞானத்தை உணர்ந்த ஒரு வர் அன்பின் காரணமாய், சமுத்திரத்தில் வீழ்ந்து கரை யேறத் தத்தளிக்கும் ஒருவனை நீந்தத் தெரிந்த தரையிலிருக் கும் ஒருவன் நீரிலிறங்கி அந்தத் தத்தளிப்பவனைக் கரை சேர்ப்பதுபோல் பக்குவமடைந்து, உலகக் கடலிலிருந்து ஞானக்கரை சேர, சிந்தித்து தத்தளிக்கும் அந்த ஒருவனிடம் அந்த ஞானி வந்து வேண்டிய உபதேசம் செய்து ஞானத்தை அடையும் மார்க்கத்தை சொல்லிக் கொடுப்பார். அதன்படி செய்தால் தானும் தனதுமற்று, வினை கர்மம் அற்று, இரவு, பகல் அற்று, பசி தாகம் அற்று, நினைவு முதலியவை அற்று திருவாரூர் தக்ஷிணாமூர்த்தி சுவாமி, கும்பகோணம் மௌன சுவாமி முதலியவர்போலிருப்பார்கள். அப்போது தானும் உலகத்திலுள்ள பொருள்களெல்லாமும் ஒரேமயமாகத்தோன் றும். அதற்குத்தான் இரண்டறக் கலத்தல் என்பது. இதைத்தான் கடவுள் எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கிறா ரென்பது, இதையே இருப்பது ஒன்று என்பது. இதைத் தான் தூங்காமல் தூங்குவதென்பது. பிறகு அவர்களுக்கு ஞானம் முற்ற, கிளிஞ்சலில் ஒளி மயக்கத்தினால் வெள்ளிபோல் தோன்றி, மயக்கம் தெளிந்த பிறகு அது அல்லவென்று விளங்குவதுபோல் அஞ்ஞானத்தால், மாயையால் இந்த உலகம் நாமரூபமாக பலவிதப் பொருள்களாகத் தோன்றுவ

தெல்லாம் உண்மை ஞானம் வந்தபோது, அந்த் மயக்கம் தீர்ந்து இவைகளெல்லாம் ஒன்றுமல்ல. எல்லாம் வெட்ட வெளியென்று தோன்ற அந்த வெளியுடன் வெளியாகிவிடும். இதையேதான் சிதம்பர ரகசியமென்பது. அதாவது ஒன்று மில்லாமல் போவது.

நமது மதத்தில் ஞானமுண்டானல் எல்லாம் ஒரே வெளியாகிவிடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. உலக உற்பத்தியில் முதலில் வெளியிலிருந்து ஆகாயம் வந்ததென் றும், ஆகாயத்திலிருந்து வாயு உண்டானதென்றும், வாயுவி லிருந்து தீ வந்ததென்றும், தீயும் நீரிலிருந்து என்றும், நீரும் மண்ணிலிருந்து என்றும் நமக்கு முதலில் தெரிந்த விஷயமே. இப்படி வந்த பொருள்கள்தான் நமது உலகத்திலுள்ள எல் லாப் பொருள்களென்றும், முதலில் தெரிந்துகொண்ட விஷ யம். ஞானமுண்டானபோது உலகத்திலுள்ள பொருள்க ளெல்லாம் முடிவில் ஒன்ருத் தோன்றும், பிறகு வந்தவழி போல் மண் நீரில் ஒடுங்கும். நீர் தீயில் ஒடுங்கி, தீ வாயுவில் ஒடுங்கி, வாயு ஆகாயத்தில் ஒடுங்கி, ஆகாயம் வெளியில் ஒடுங் கும். இதுவே முடிவில் எல்லாம் வெளியாகிவிடுமென்பது.

இதுதான் கடைசி படி. இதற்கு வர, இந்த ஞானம் வர, முதலில் மனது சுத்தப்படவேண்டும். அந்தப்படி மனதை சுத்தப்படுத்த அநேகவித வழிகளுண்டு. அதேதான் எந்த மதமானுலும், எந்த விதமானுலும், எவனொருவன் தன்னை (கடவுளை) உண்மையாக நோக்குகிருனே அவனைக் கடவுள் அவன் நினைப்பிற்கேற்ப வந்து, ஆட்கொள்ளுகிருர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## ஆஸ்திகமும் நாஸ்திகமும்.

ஆஸ்திகர் என்றும் நாஸ்திகர் என்றும் தற்காலம் அதிகமாக வாதத்திற்கு வந்துவிட்டது. ஆழ்ந்து பார்க்கு மிடத்து, ஆஸ்திகரும் நாஸ்திகரும் கொள்கைகளில் ஒன்றே தான். வார்த்தைகளிலும், செய்கைகளிலும்தான் வித்தியா சம். இன்னும் கவனித்தால் தற்காலத்தில் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல். தற்காலம் இருப்பவர்களில், அநேக மாக எல்லாருக்கும் மறைவான சக்தி ஒன்று உலகத்தில் இருக் கின்றது என்ற கொள்கை. அதனல்தான் இவ்வுலகில் இவ் வளவு மாறுதல்கள் நமக்கு விளங்காதபடி உண்டாகிறது. சூரியன் என்று ஒன்று சரியான காலத்தில் கிழக்கே புறப்பட்டு சரியான காலத்தில் யாதொரு பாதையும் ஏற்படாத வழியாழ்

சென்று மேற்கு பக்கம் போய் மறைகிறது. அதுபோல் சந்திரனும் போகிறது. ஒரு விதையிலிருந்து முளை வந்து, செடியாகி, பூத்து, காய்த்து பழுக்கிறது. மனிதன் பிறக்கிறான். அப்பொழுது அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை; பிறகு வளர வளர அறிவு உண்டாய், வயதாய் விருத்தாப்பியம் வந்து இறக்கிறான். ஓரிடத்தில் விட்ட தண்ணீர் மற்றோரிடத்திற்குச் செல்லுகிறது. சமுத்திரத்து நீர் ஆவியாகி மேகமாகிப் பலவிடங்களுக்குஞ் சென்று மழையாய் பெய்து நீராகி ஓடி, மறுபடியும் சமுத்திரத்தில் கலக்கிறது. இந்த பூமி சமுத்திரத்தில் மிதந்துகொண்டிருக்கிறது, முதலியன விஷயங்கள் வியப்பைத் தருகின்றன. இந்தச் சக்தியை ஒரு சாரார் இயற்கை என்று சொல்லுகிறார்கள்:- இவர்கள்தான் நாஸ்திகர் என்று சொல்லப்படுபவர். இந்தச் சக்தியை மற்றொரு சாரார் சக்தி என்ற ஒரு தெய்வம் என்று வைத்து அதை வணங்குகிறார்கள். இவர்கள் சாக்தர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். மற்றொரு சாரார் இந்த சக்தியை வேறு பெயர் கொண்ட தெய்வம் என்று வைத்து அதை வணங்குகிறார்கள். ஆகையால் கொள்கைகளில் எல்லாம் ஒற்றுமைப்பட்டவர்களே. ஆஸ்திகம் நாஸ்திகம் என்ற வார்த்தைகளில்தான் சிறிது வித்தியாசம், நாஸ்திகர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் சத்தியத்துடனும், அன்புடனும், நடக்கப் பார்க்கிறார்கள். மற்றவர்கள் தெய்வ வணக்கத்தையே முக்கியமாகக் கொண்டிருக்கின்றார்கள். ஆகையால் இவர்கள் நடத்தையில் தான் சிறிது வித்தியாசம்.

தற்காலம் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல். ஆஸ்திகர்கள் தெய்வம் என்ற பெயரால் நடக்கக்கூடாத அசிங்கமான சில கதைகளை தங்கள் தெய்வத்திற்கு கூட்டி அதை வணங்கச் செய்கிறார்கள். கடவுள், நாமம், உருவம், பால், திணை, குணம் முதலிய எல்லாவற்றிற்கும் மேலானவர் என்று சொல்லிக்கொள்கிறார்கள். அதே மூச்சில் அந்தக் கடவுள் ஒருபெண்ஜாதியையோ, இரண்டு பெண்ஜாதியையோ கல்யாணம் செய்துகொண்டாரென்றும் இவருக்குப் பிள்ளைகள் பிறந்தனர் என்றும் கதைகள் சொல்லி அதைப்போல் விழாவும் நடத்துகிறார்கள்,

(1) சிவன் என்னும் ஒரு தெய்வம் தவம் செய்ததாம். இவரே தெய்வமானபிறகு யாரைக் குறித்து, எதற்குத் தவம் செய்யவேண்டும்? அப்படித் தவஞ் செய்தால் யாருக்கோ இடைஞ்சல் உண்டாகுமென்று விஷ்ணு என்னும் ஒரு தெய்வம் பெண் வேஷத்துடன் சிவனிடம் போனதாம். மனித

னும் செய்யாத மாதிரி அந்த சிவன் என்னும் தெய்வம் பெண் வேஷம் போட்ட ஆண் தெய்வத்தின்பேரில் ஆசைப்பட்ட தாம். பிறகு உலகத்திலேயே நடவாத மாதிரி பெண் வேஷம் போட்ட ஆண் தெய்வமாகிய விஷ்ணுவிற்கு அரிகரபுத்திரன் என்று ஒரு பிள்ளை பிறந்ததாம். இப்படிச் சொல்லும் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்கள் மேல்.

(2) சிவன் என்னும் தெய்வம் தான் படைத்த, மலையரசனின் பெண்ணாகிய பார்வதி என்னும் பெண்ணை (பேர்த்தியாகும் பெண்ணை) கல்யாணம் செய்துகொண்டாராம். இப்படி ஒரு மனிதன் செய்தால் அவனைக் கேவலமாகச் சொல்வோம். இப்படி மோகம் பிடித்தவராகக் கடவுளைப்பற்றி கதைகள் சொல்லும் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல்.

(3) சுப்பிரமணியர் என்ற கடவுள் ஒருவர் உண்டாம். அவர் தான் படைத்த கீழ் சாதிப் பிறப்பில் உதித்த வள்ளி என்னும் குறப் பெண்ணின்மேல் ஆசைப்பட்டாராம். தான் படைத்த பெண்ணின் மனதைக் கவர அவருக்கு முடியவில்லை. அதற்காக ஒரு வேடன் மாதிரி வேஷம் போட்டும், வளையல் காரன் மாதிரி வேஷம் போட்டும், கிழவன் மாதிரி வேஷம் போட்டும், முடியாமல் யானையைக் காட்டி பயமுறுத்தி அவளைக் கல்யாணம் செய்துகொண்டாராம். இப்படி ஒரு மனிதன் செய்தால் அவனை மோகம் பிடித்தவன் என்று சொல்லித் தண்டனைக்குள்ளாக்குவோம். இப்படி கேவலமாக நடக்கும் ஒருவரைக் கடவுளாக வைத்து வணங்கும் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல்.

(4) அரங்கநாதன் என்ற ஒரு பார்ப்பாரத் தெய்வம் துலுக்கநாச்சியார் என்ற துலுக்கப் பெண்ணை வைப்பாட்டியாக வைத்திருக்கிறாராம். இதற்காக அவள் இருக்கும் இடத்திற்கு இரவே திருட்டுத்தனமாக வந்து இரவே திருட்டுத்தனமாகப் போகிறாராம்.

(5) கிருஷ்ணன் என்ற ஒரு கடவுள் இருக்கிறாராம். அவர் தான் படைத்த ருக்மணி என்னும் பெண்ணின்மேல் ஆசைப்பட்டாராம். அந்தப் பெண்ணை கவருவதற்கு ஒரு பார்ப்பானை (டாபர், இண்டி மாமா உத்தியோகம் செய்ய) அனுப்பினாராம். இருவரும், அதன் நிமித்தம் திருட்டு ஒப்பந்தம் செய்துகொண்டார்களாம். அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அந்தப் பெண்ணை வேறு ஒருவனுக்கு விவாகம் செய்ய ஏற்பாடு செய்திருந்தார்களாம். அந்த சமயத்தில் கிருஷ்ணன் போய் ஊர்வலம் போய்க்கொண்டிருக்கும் பெண்

ணைத் தூக்கி தன் தேரில் வைத்துக்கொண்டு ஓடினாராம். பெண்ணைச் சேர்ந்தவர்கள் துரத்திச் சென்றபோது வெகு சாமர்த்தியமாக அவர்களை துரத்தி அடித்துவிட்டு தூக்கிப் போன பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டாராம். இப்படி ஒரு மனிதன் எவ்வளவு பெரியவனாக இருந்தும் செய்தால் அவனைக் கேவலமாக மதித்து, தண்டனைக்கும் உள்ளாக்கு வோம். அப்படிப்பட்ட கிருஷ்ணனை ஒரு தெய்வமாக வணங்குவதைவிட நாஸ்திகம் மேல்.

(6) சில பெண்கள் தங்கள் சேலைகளை அவிழ்த்துக் கரையில் வைத்துவிட்டுக் குளத்தில் நீராடிக்கொண்டிருந்தார்களாம். அந்தக் கிருஷ்ணன் வந்து அந்தச் சேலைகளை எல்லாம் எடுத்துக்கொண்டு பக்கத்திலிருந்த மரத்தில் ஏறிக்கொண்டானும்; பெண்கள் இது தெரிந்து, சாதாரணமாக நாணத்துடன் கேட்டபோது கொடுக்கவில்லையாம். பிறகு மர்ம ஸ்தானங்களை எல்லாம் காட்டிக்கொண்டு கேட்டபோது அவர்களை நிர்வாணமாக பார்க்கவேண்டுமென்று ஆசைப்பட்ட அந்தக் கிருஷ்ணன் அந்தச் சேலைகளைக் கொடுத்தானும். இப்படிச் சொல்லும் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல்.

(7) தற்காலம் ஆஸ்திகர் என்று சொல்லப்பட்டவர்கள் தங்கள் வணங்கும் தெய்வத்திற்கு எவ்வளவு பயத்துடன் உண்மையாய் நடக்கிறார் என்று அவரவர்கள் மனதைக் கேட்டால் தெரிந்து கொள்வார்கள். கிராமங்களிலும் பெரிய ஊர்களிலும் சிறுசிறு கோவில்கள் இருக்கின்றன. இவைகளுக்கு நித்தியம் பூசை செய்ய ஒரு பார்ப்பானை ஏற்படுத்தி இருக்கிறார்கள். சிறு கோவில்கள் ஆனதினால் 5 அல்லது 6 கோவில்களுக்கு ஒருவரை நியமித்து விடுகிறார்கள். ஒவ்வொரு கோவிலிலிருக்கும் தெய்வத்திற்கும் அன்னம் தினம் படைக்கும்படி ஏற்பாடு செய்கிறார்கள். ஆனால் அந்த தெய்வத்தைத் தொடும் பாத்தியத்தைக் கொண்ட அந்த உயர்குலத்தவர் எவ்வளவு உண்மையுடனும் விசுவாசத்துடனும் பூசை செய்கிறார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகும். ஒரு சிலர் ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் சாதம் வைத்துக்கொண்டு அதையே எல்லா சாமிக்கும் ஒரு சாமி எச்சல் செய்ததை மற்ற சாமிகளுக்கும் காட்டிவருகிறார்கள். இப்படிக் கடவுளை ஏமாற்றுபவர்களாகிய ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல். இப்படி அந்தப் பூசாரி நடத்துகிறான் என்று தெரிந்தும் அவனுக்கு ஒத்தாசையா யிருக்கும் அந்த கோவிலுக்கு அதிகாரிகளும் மற்றவர்களுமாகிய ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல்.

(8) சிலர் ஆலயங்களையும் தெய்வங்களையும் தன் ஜீவனத்திற்காகவும், சவுகரியத்திற்காகவும், வைத்து தீர்த்தம், மரியாதை, சாப்பாடு, முதலியவற்றிற்காகக் கடவுள் என்று சொல்லப்பட்டதைக் கேவலமாக நடத்துகிறார்கள். அப்பேர்ப்பட்ட ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மேல்.

(9) தற்சமயம் மைசூரில் தர்பார் ஊர்வலம் நடந்தது. அதுசமயம் மகாராஜா தனக்காக ஏற்படுத்திய அம்பாரி என்ற வாகனத்தில் ஊர்வலம் சென்றார். அந்த வாகனத்தில் அந்த மகாராஜாவைத் தவிர எவ்வளவு பெரிய மனிதனையும் ஏற்றிச் செல்ல யாரும் ஒவ்வார்கள். மனிதனுக்கே அப்படி என்றால் எல்லாவற்றையும் படைத்த தெய்வத்திற்கு அதற்கு மேலல்லவா? அப்படி இருந்தும் ஆஸ்திகர் என்றும், அதிலும் மேம்பட்டவர்கள் என்றும் சொல்லிக்கொள்பவர்கள், தங்கள், கடவுள் தெய்வம் என்று சொல்லப்பட்டது, ஊர்வலம் வருவதற்காக வைத்திருக்கும் ஒருதேர். இரதத்தில் கேவலம் ஒரு மனிதனாகிய, காந்தி என்பவரின் படத்தை வைக்கவேண்டும், வைத்தால்தான் தேர் இழுப்போம் என்று சண்டித்தனம் செய்யும் ஆஸ்திகர்களைவிட நாஸ்திகர்களே மிகமிகமேல் என்று சொல்லவேண்டும். இப்படியாக இன்னும் அநேகம் சொல்லிக்கொண்டே போகலாம்.

நாஸ்திகர்களோ உலகக் கட்டுக்குக் கட்டுப்பட்டுச் சுயநலம் இல்லாமல், உண்மையை கடைப்பிடித்து, உண்டாக்கப்பட்ட எல்லா மனிதர்களையும், மேல் கீழ் இல்லாமல் சகோதரத் தன்மையுடன் நடத்துவார்கள். சகல உயிருள்ள ஜீவன்களும் தம்மைப்போல ஜீவன் உள்ளதென்று அன்புடன் நடத்துவார்கள்.

இப்பேர்ப்பட்ட நாஸ்திகர் மேற்சொன்ன ஆஸ்திகர்களைவிட மேல்.

---

## ஓர் வேண்டுகோள்.

சாதாரணமாக ஒருவர் என் மதம் என்றும் உன் மதம் என்றும் சொல்வது எனக்கு அவ்வளவு பிடித்தமாக இல்லை. கடவுள் என்பவர் ஒருவர்தான் இருக்கக்கூடும். ஆதலால் மதமும் ஒன்றுதான் இருக்கக்கூடும். ஒரு கிறிஸ்துவர் என்னை (Brother) உடன்பிறந்தோர் என்று அழைக்கும்போதும், இஸ்லாமியர் (Bhai) உடன்பிறந்தோர் என்று அழைக்கும்போதும் எனக்கு எவ்வளவு சந்தோஷத்தைக் கொடுக்கிறது. உண்மையில் நாமெல்லோரும் உடன்பிறந்தோர்களே.

எல்லாரும் ஒரே கடவுளின் பிள்ளைகளே. மனிதர்களுக்குள்ளேயே அதிலும் மதத்தின் பேரால், கடவுளின் பேரால் வெறுப்பும் விரோதமும் இருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. மற்றொருவனை முட்டாள் என்பவனே முட்டாள், என்று பழமொழி கூறுகிறது. அதிலும் மற்றொரு மதத்தை முட்டாள் மதம் என்று கூறும் ஒரு மதஸ்தனை அதைவிடக் கேவலமாகச் சொல்லவேண்டுமல்லவா? கிறிஸ்து மதமும் இந்திய மதத்தைப்போல்தான் இரண்டிற்கும் ஒரு பொருளுக்கு, விஷயத்திற்குக் கொடுக்கும் சொற்கள்தான் வித்தியாசம். அநேக கிறிஸ்துவர்கள் பைபிள் என்பது சுமார் 400 அல்லது 500 கி. பி -யின்போதுதான் எழுதப்பட்டதென்றும், அதுவும் இயேசுகிறிஸ்து என்பவரைப்பற்றிய கதை என்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். அந்தக் கதைப்படி கடவுள் என்பவர் ஆதாம், ஏவாள் என்ற இருவர்களைத்தான் முதலில் உண்டாக்கினார் என்றும், அவர்களை ஒரு தோட்டத்தில் விட்டு, அந்தத் தோட்டத்திலிருந்து நல்லது கெட்டது என்று அறியக்கூடிய அறிவைக் கொடுக்கும் ஒரு மரத்தின் பழத்தைச் சாப்பிடக் கூடாது என்றும் உத்திரவு இட்டிருந்தார். அவர்கள் ஒரு பாம்பின் துர் போதனையால் அந்தப் பழத்தை சாப்பிட்டுவிட்டார்கள் என்றும், கடவுள் அதன்பேரில் கோபம் உண்டாகி இவர்களுக்குச் சாபம் இட்டு, பாபிகளாக்கி, இந்த உலகத்தில், தள்ளப்பட்டார்கள் என்றும், பாம்பையும் அவர் சாபமிட்டு இந்த உலகத்தில் தள்ளிவிட்டார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இது விஷயமாக நான் உங்களுக்குச் சாதாரணமாக ஒரு பிச்சைக்காரன் பாடும் பாட்டை ஞாபகப்படுத்துகிறேன். ஆனால் இது ஒரு சித்தர் பாடின பாட்டு. "நந்தவனத்தில் ஓர் ஆண்டி, அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி, கொண்டுவந்தா னொரு தோண்டி, அதைக் கூத்தாடி கூத்தாடி போட்டுடைத்தாண்டி." இதன் பொருள் உங்களுக்கு நன்றாக விளங்கும். ஒரு நல்ல பூந்தோட்டத்தில் (தெய்வலோகத்தில்) ஒரு நல்ல, பரிசுத்த ஆத்மா இருந்தது. அது ஒரு தாயார் வயிற்றில் 10 மாதம் கருப்பத்திலிருந்து இந்த உலகத்தில், ஒரு மனிதனாய் வந்தது. இந்த உலக மாயையில் வந்தவுடன், தன் பரிசுத்தத்தை மறந்து, இந்த உலகத்தின் அற்ப வாழ்வையும், பொய்த் தோற்றங்களையும் கண்டு, மகிழ்ந்து, வீண் கூத்தாடித் தன் அற்ப சரீரத்தை அழிவிற்கு உள்ளாக்கிக்கொண்டது. இதுவே அதற்குச் சாபமாக ஏற்பட்டுவிட்டது.

இதுதான் ஆதாம் ஏவாள் என்பவர்களின் கதை. இந்தியர்கள் $\frac{\text{ஆத்மா}}{\text{ஆதாம்}}$ என்பதும் $\frac{\text{சீவன்}}{\text{ஏவாள்}}$ என்பதும் பரிசுத்தமானது என்று சொல்லுகிறார்கள். நன்மை, தீமை என்பவற்றை அறியும் அறிவுடைய மரம் என்பதுதான் பகுத்தறிவு, ஞானம், உண்மை அறிவு.

பாம்பின் துர்போதனையால், மாயையால், அஞ்ஞானத்தால் அந்தப் பழத்தை சாப்பிட்டு விட்டார்கள். ஆகையால் அவர்கள் தங்கள் பகுத்தறிவை, உண்மை ஞானத்தை இழந்து விட்டார்கள். ஆகையால் அவர்கள் பாபத்தினால், கர்மபலனினால், கெட்ட செய்கைகளினால், இந்த உலகத்தில் வந்து பிறந்தார்கள். பொய்யான நிலையில்லா இந்த உலகத்தில் அந்தப் பாம்பானது, மாயையாகவும், அஞ்ஞானமாகவும் வரப்பட்டது.

கடவுளின் பரிசுத்த ஆவியாகிய, இயேசு கலியாணம் ஆகாத மேரி என்னும் பெண்ணின் வயிற்றில் பிள்ளையாகப் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. அவர் தானும், பிதாவும் ஒன்று என்று சொல்லியிருக்கிறார். இந்தியர்களில் சக்தி என்ற மாரிக்கு கணவன் கிடையாது. அந்தச் சக்தியால்தான் சீவன் உலகத்தில் வருகிறது என்று சொல்லப்படுகிறது. ஜீவாத்மாவும் (பரிசுத்தமான ஆவியும்) பரமாத்மாவும் (கடவுளும்) ஒன்றுதான். கிறிஸ்தவர்களுக்கு இருக்கும் மேரிதான் இந்தியர்களுக்கு மாரி. கிறிஸ்தவர்களுக்கு இருக்கும் இயேசு (ஜீஸஸ்) தான் இந்தியர்களுக்கு இருக்கும் ஜீவாத்மா. கிறிஸ்தவர்களுக்கு தடுக்கப்பட்டிருக்கும் 10 உத்திரவுகளும்தான் இந்தியர்களுக்கு நீக்கப்பட்ட மலங்கள்.

மேற்கு திசையிலிருக்கும், ஜெருசலேம் என்னும் ஊரிலிருந்துதான் கிறிஸ்து மதம் வந்தது என்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அந்த தேசத்தின் உடைகளும், நடைகளும் இந்த தேசத்திற்கு மாறுபட்டது. அந்தக் காலத்தில் அந்த தேசத்தில் இருந்த மனிதர்களின் கீழ் தரமான பகுத்தறிவுக் கேற்றபடியும், உடை, நடை முதலியவைகளுக்கும் ஒற்றுமையாகவும், இயேசு அவர்களுக்கு உபதேசம் செய்திருக்கிறார். லெமூரியா என்ற ஒரு தேசம் முன்பு மத்திய காலத்தில் இருந்தது என்றும், அது பிறகு சமுத்திரத்தில் மூழ்கிவிட்டதென்றும், அப்போது அதிலிருந்த மனிதர்கள் வெளிநாட்டிற்குப் போய், மேல்நாட்டில்

முதலில் எகிப்து தேசத்தில் குடியேறினர்களென்றும் ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயம். அப்போதுதான் அவர்கள் அதன் சுற்றுப் பக்கமிருக்கும் தேசங்களுக்கு நாகரீகமும், மதமும் பரவச் செய்தார்களென்றும், ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அந்த லெமூரியா என்ற தேசம்தான் முதலில் திருவனந்தபுரத்திற்கு தெற்கே இருந்த நாடு என்றும், அந்த நாடு பிறகு கடலில் அமிழ்ந்துபோய்விட்டது என்றும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அந்த நாடு அப்போது நாகரீகத்திலும் மதத்திலும் விருத்தியடைந்திருந்தது. அந்த நாட்டார்தான் மேல்நாட்டுப் பக்கம் குடியேறி தங்கள் மதத்தை அங்குள்ளவர்கள் அறிவிற்கு விளங்கும்படியும், அந்த நாட்டின் நடை உடை பாவனைக்கு ஏற்றபடி தங்கள் மதத்தின் கொள்கைகளை வைத்து போதித்தார்கள்.

கிறிஸ்து மதத்திற்குப் பின், பக்கத்து தேசமாகிய அரேபியா என்னும் தேசத்தில் அதே கொள்கையை வைத்து அந்த முரட்டு அரேபியர்களுக்கு அவர்கள் அறிவிற்கும், அவர்கள் நடை, உடை, பாவனை முதலியவைக்கும் ஏற்ப இஸ்லாமிய மதமாகப் போதிக்கப்பட்டது. ஆகவே இந்த எல்லா மதங்களும் ஒரே கொள்கையை யுடையவைதான். ஒரு விஷயம் பல பாஷைகளில் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால் எல்லா மதஸ்தர்களையும், நான் கேட்டுக் கொள்ளுவது என்னவென்றால், தங்கள் மதத்தின்மேலிருக்கும் அதிக அன்பால் மதவெறி கொள்ளாமல் பொறுமையுடனிருந்து, மற்ற மதஸ்தர்களையும் தங்களைப்போல் நினைக்கச் செய்ய உரிமை இருக்கிறதென்று உணர்ந்து, தங்கள் மதத்தின் உள் கொள்கை என்னவென்றும், ஆராய்ந்து உணர வேண்டும். அப்போது அவர்கள் அப்படியாதொரு உண்மையான வித்தியாசமும் இல்லை என்று உணர்வார்கள். அப்போது அவர்கள் மற்ற மதஸ்தர்கள்பேரிலும், அன்பு வைப்பார்கள். எல்லா மதங்களிலும் உடன்பிறந்த தன்மை வைக்க வேண்டுமென்றும் சொல்லி இருக்கிறது. அப்போது தற்காலம் நடைபெறும் மதச் சண்டைகள் எல்லாம் (நான் புத்தியில்லாத சண்டை என்று சொல்லவேண்டியிருக்கிறது) நின்றுவிடும். எல்லாரும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்போல், அண்ணன் தம்பிகள்போல், ஒருவருக்கொருவர் அன்புடன் நடந்துகொள்வார்கள்.

ஓங்காரத்தின் பொருள்.




ஞானம் வந்தால் இறப்பு பிறப்பு இல்லை. நிலைத்த ஆனந்தம் உண்டாகும்.

இதுதான் {
- பிறணவ எழுத்தின் பொருள்.
- ஐந்தெழுத்தின் பொருள்.
- ஆறெழுத்தின் பொருள்.
- 108 பெயர் பூசையின் பொருள். (அஷ்டோத்ர நாம அர்ச்சனை)
- 1008 பெயர் பூசையின் பொருள். (சகஸ்ராதார நாம அர்ச்சனை)

[எழுத்துக்களும் பெயர்களும் நாடிகளைக் குறிக்கின்றன.]

---

## ஓங்காரத்தின் தத்துவம்.

நமது சரீரத்தில் மொத்தம் 72,000 நாடிகள் இருக்கின்றன. இவைகளில் முக்கியமாக 1008ஐ எடுக்கப்பட்டிருக்

கின்றன. இவைகளிலெல்லாம் முக்கியமானது 1008-வதுநாடியாகிய சகஸ்ராதாரநாடி என்பது. இது உச்சந்தலையில் இருப்பது. இது சாதாரணமாக ஒரு தாமரை மொட்டு தலைகீழாக தொங்குவதுபோல் இருக்கும். இப்படி அது நமக்கு இருக்கும்வரை நமக்கு அஞ்ஞானம்தான் இருக்கும். அஞ்ஞானத்தைப்போக்கி ஞானத்தை அடைவதே நமது மதம். ஆதலால் அந்தஅஞ்ஞானத்தை ஒழித்து நாம் ஞானத்தை அடையவேண்டும். இது அந்த சகஸ்ராதார நாடியை நிமிர்த்தி தாமரைப்பூ மலர்ந்து இருப்பதுபோல், மலரச் செய்யவேண்டும். அப்படி மலர்ந்தால்தான்நமக்கு ஞானம் உண்டாகும். மற்ற நாடிகளும் கொஞ்சம் சுருண்டாற்போலிருக்கும். இவைகளை நிமிர்த்தினால் கடைசி நாடியும் மலரும். இதைக் குறிக்கத்தான் ஒவ்வொரு நாடிக்கும் ஒவ்வொரு பெயராகச் சொல்லி அந்த நாடியை நிமிர்த்தி எழுப்பச் சொல்லத்தான் 1008 பெயர் சொல்லி கடவுளை அர்ச்சிப்பது, அல்லது பூசிப்பது என்பது. இதற்குத்தான் சகஸ்ரநாம அர்ச்சனை என்று சொல்லுவது. இப்படி 1008 நாடிகளில் முக்கியமாக 108ஐ எடுத்துக்கொண்டார்கள். இப்படி இந்த நாடிகளை நிமிரச் சொல்லத்தான் அஷ்டோத்ரநாம அர்ச்சனை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் 18ஐ முக்கியமாக எடுத்துக்கொண்டார்கள். அதற்காக அந்தந்த இடங்களில் விபூதிபட்டை இடச் சொல்லிவிட்டார்கள். இவைகளில் 12ஐ முக்கியமாக எடுத்துக்கொண்டார்கள். அதற்கு அந்தந்த இடங்களில் நாமம் இடச்சொல்லிவிட்டார்கள். இவைகளில் 8ஐ முக்கியமாக எடுத்துக்கொண்டார்கள். இதைத் தான் அஷ்டாச்சரம் (எழுத்து) என்று சொல்லுவது. அந்த எழுத்துக்களும் கடவுள் பெயர்களும் நாடிகளைக் குறிக்கின்றன. இவைகளில் முக்கியமாக 6ஐ எடுத்துக்கொண்டார்கள். இதைத்தான் ஷடாச்சரம் என்றும் ஆறு ஆதாரங்கள் என்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இதில் முதலில் உள்ளது மூலாதாரம் என்னும் அடிவயிற்றில் உள்ளது மத்தியில் இருக்கும் நான்கும் நம் முதுகு எலும்பிற்குள்ளிருக்கும் மூளையில் நுட்பமாய் ஓடும் நரம்பில் இருக்கின்றன. இவைகளெல்லாம் சுருட்டிக்கொண்டிருக்கின்றன. இவைகளை நிமிரச் செய்தால் சகஸ்ராதார நாடி மலரும். அப்போது நமக்கு ஞானம் உண்டாகும். இவைகளில் ஒன்றை நீக்கிப்பார்த்தால் மீதம் இருப்பது ஐந்து. இவ்வைந்தையும்தான் பஞ்சாட்சரம் என்று சொல்வது. இப்படி மூலாதாரத்தில் இருக்கும் நாடியை சகஸ்ராதார நாடிக்கு செலுத்தினால் அந்த நாடிகளுக்கு உண்டாகும்

தோற்றம் ꠸. இதைக் குறிக்கத்தான் காளிங்கநர்த்தனமும், சோமாஸ்கந்தர் உருவமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதை நிமிர்த்திப்போட்டால் உண்டாவது ? என்ற உருவம். இந்த உருவத்தைத்தான் ஓங்காரம் என்பதும் பிரணவ எழுத்து என்பதும், பிரணவ சொரூபம் என்பதும் ஆகும். இது சங்கின் உருவம். ஆகவேதான் சிவன் கையிலும், விஷ்ணுவின் கையிலும் சங்கு என்று ஒரு ஆயுதத்தைக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஓங்காரத்தைக் குறிக்கவே விநாயகர் முகத்தில் அந்த உருவம் உள்ள யானையின் துதிக்கையை வைத்திருக்கிறது. இதைக்குறிக்கவே விஷ்ணு கோயில்களில் விஸ்வரூப தரிசனம் என்று பசுவின் பின்பாகத்தையும் யானையின் துதிக்கையையும் காட்டுகிறார்கள். 108ஆம் பக்கத்தில் போட்டிருக்கும் படத்தைப் பார்க்கவும்.

---

## தத்துவங்கள்.

பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், அல்லது மண், நீர், தீ, காற்று, வெளி, என்று பெரும் வஸ்துக்கள் ஐந்து உள்ளன. இவைகளை ஒவ்வொன்றையும் ஐந்தாகப் பிரிக்க வஸ்துக்கள் 25 ஆகின்றன. அந்த 25 வஸ்துக்களால் ஆக்கப்பட்டவைகளைச் சேர்த்தால் இந்த உடல் என்று கைவல்யம் கூறுகிறது. தவிர அந்த கைவல்யத்தில் இந்த உடலில் 35 தத்துவங்கள் இருக்கின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:—ஞானேந்திரியக்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, ஞானேந்திரியங்களால் அறியக்கூடிய விஷயங்கள் சத்தம் வகையறா 5, கன்மேந்திரியங்களால் செய்யும் தொழில்கள் வசனம் வகையறா 5, பிராணாதி வாயுக்கள் 10, அந்தக்கரணங்கள் 5. ஆக 35 தத்துவங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

அஞ்ஞானம் என்பதும், மாயை என்பதும், பாசம் என்பதும் ஒன்றே. ஆகமங்களில் இந்த மாயையை, சுத்த மாயை, அசுத்த மாயை, சுத்தாசுத்த மாயை என்று மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது.

சுத்த மாயையால் தோன்றுவது 5.

1. சுத்தாவித்தை—இதில் ஞானம் ஏறி கிரியை குறைந்திருக்கும்.
2. ஈசுரம்—இதில் ஞானம் குறைந்து கிரியை ஏறியிருக்கும்.

3. சாதாக்கியம்—இதில் ஞானமும் கிரியையும் ஒத்திருக்கும்.
4. சக்தி—இது எப்போதும் கிரியையாயிருக்கும்.
5. சிவம்—இது எப்போதும் ஞானமாயிருக்கும்.

அசுத்த மாயையில் தோன்றுவது :—

1. காலம்—இது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் காலம் என்று பொருத்துவிக்கும்.
2. நியதி—இது முக்காலத்திற்கும் கன்மம் இவ்வளவென்று நிச்சயம் செய்து நிறுத்தும்.
3. கலை—இது ஆணவத்தை நீக்கி கிரியையை எழுப்பும்.
4. புருடன்—இது ஆன்மாவைப் பஞ்சேந்திரியங்களிடமாக செலுத்தி விஷயத்திலே எழுப்புவிக்கும்.

இதில் கலையால் தோன்றுவது :—

1. வித்தை—இது ஆன்மாவுக்குச் சீக்கிரத்தில் அறிவை எழுப்பும்.
2. அராகம்—இது பெற்ற பதார்த்தங்களைச் சிறிதாக்கி பெருதவைகளின்மேல் இச்சையை உண்டாக்கும்.
3. மாயை அல்லது மான்—ஒன்றை நினைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யும்.

இந்த மாயையில் தோன்றுவது மொத்தம் 24. அதாவது ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, தன்மாத்திரை 5, பூதங்கள் 5, அந்தக்கரணங்கள் 4, ஆக தத்துவங்கள் 36. இதில் புருடனை நீக்கி தத்துவங்களை 35 என்பாரும் உண்டு.

கைவல்யத்தில் அந்தத் தத்துவங்களை நீக்கி உன்னைக் காண் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகமங்களில் அந்த தத்துவங்களை நீக்கி ஆன்மாவைக் காண் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆன்மா நம்மிடத்திலேதான் இருக்கிறது.

சிவ மதத்தில் நாமாகிய இடபத்தின்மேல் சிவன் இருப்பதும், வைணவ மதத்தில் நாமாகிய கருடன்மேல் விஷ்ணு இருப்பதும் இதைக் குறிக்கின்றன. ஆன்மாவும், சீவான்மாவென்றும் பரமான்மாவென்றும், நம் அஞ்ஞானத்தால், மாயையால், பாசத்தால், அவ்வாறு இரண்டாக தோன்றுகின்றன. அந்த அஞ்ஞானம், மாயை, பாசம், நீங்கினல் இரண்டும் ஒன்

ணாகத் தோன்றும். இதைக் குறிக்கவே கோயில்களில் பெரும் விழா ஆரம்பிக்கும் முன் கொடி ஏற்றம் வைத்திருக்கிறார்கள். சிவன் கோயில்களில் சிவனாகிய இலிங்கத்தையும், நாமாகிய, சீவனாகிய, நந்தியையும் ஒன்றின்பின் ஒன்றாய் ஒரு நீண்ட சீலையில் வரைந்து துஜஸ்தம்பம் என்ற தூணில் சுற்றிக் கட்டி விடுகிறார்கள். வைணவ மதத்தில் நாமத்துடன் சங்கு சக்கரம் ஆஞ்சநேயர் கருடன் தீட்டப்பட்ட துணியை கொடியாக ஏற்றுகிறார்கள். நாமம் இரண்டு வெள்ளை கோட்டிற்கு மத்தியில் ஒரு சிகப்பு கோடு உள்ளது. ஒரு வெள்ளைக்கோடு இரண்டாக இருப்பது, சிவனும் சீவனும், நாமும் கடவுளும், பரமாத்மாவும் ஜீவாத்மாவும், இரண்டும் பரிசுத்தமானதென்றும், இரண்டும் ஒன்றே என்றும், மத்தியில் இருக்கும் சிகப்புக் கோடாகிய, மாயையாகிய, பாசமாகிய, அஞ்ஞானம் இரண்டாகத் தோற்றுவிக்கிறது என்றும் உணர்த்துகிறது.

## ஞானத்திற்கு வழி.

அ




இத்துடன் மூன்று படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் அ லக்கமிட்டதில் ஒரு பாம்பு ஒரு தூணின்மேல் ஏறுவது போலவும், அப்போது நான்கு இடங்களில் அதைத் தாண்டுவது போலவும், அந்த இடங்களில் ஒவ்வொன்றிலும் நான்கு காய்கள் கெர்த்து இருப்பது போலவும், மேலே போனபோது ஒரு ஜோதிபோல் தோன்றுவது போலவும், அவ்விடத்தில் ஒரு மலர்ந்த தாமரை மலர் கவிழ்ந்தாப்போல் இருப்பது போலவும், அதன் காம்பு ஒரு முனையில் முடிவது போலவும் இருக்கிறது. ஆ லக்க

ஆ



மிட்ட மற்றொரு படம் ஒரு மனிதனது உடல்போலவும், அதில் தலை, மூளை, முதுகு எலும்பின் வழியாய் ஆசனவாய் வரைக்கும் வந்திருப்பதுபோலவும், அடிவயறு, ஆசனவாய், இடுப்பின் முதுகெலும்பு பாகங்கள் மூன்று சேர்த்து ஒரு முக்கோணம் காட்டியும், அந்த முது கெலும்பு மூளையில் இடுப்பு, நடுமுதுகு, கழுத்து, பிடறி இந்த பாகங்களில் 1, 2, 3, 4 குறிப்பிட்டிருப்பதையும், உச்சந்தலை பாகத்தில் 5 குறிப் பிட்டிருப்பதையும் பார்க்கலாம். இலக்கமிட்ட மூன்றாவது படத்தில் ஓம் என்பதை ௐ தலைகீழாக போட்டிருக்கிறது.

ஓங்காரத்தின் பொருள்.




இதில் ஒன்றில் நீண்ட கோட்டில் நான்கு இடத்தில் வட்டமாயு மில்லாமல், சதுரமாயுமில்லாமல் சுழித்து இருப்பதையும், அதில் தலையில் ஒரு தாமரை மொட்டுபோல் தலைகீழாக தொங்குவதுபோல் இருக்கிறது. மற்றொன்றில் அந்த தொங் கும் மொட்டு இருந்த பாகம் நிமிர்ந்தும், தாமரைமொட்டு நிமிர்ந்து மலர்ந்து இருக்கிறது. இதையேதான் திருமூலர்—

மூலநாடி முக்கட்டி லுச்சியு—ஞலுவாச னடுவு ளிருப்பீர்கள்—மேலைவாசல் வெளியுறக் கண்டபின்—காலன் வார்த்தை கனவிலுமில்லையே—என்ற பாட்டிலும், சிவவாக்கியர்—மூலமண்டலத்திலே முட்டி நின்ற தூணிலே—நான்றபாம்பின் வாயிலே நடுவுநின்ற தீபமாய்—என்றதாயு மப்பனு மெடுத்துரைத்த மந்திரம்—தோன்றுமோ ரெழுத்திலே சொல்ல அங்கு இல்லையே—என்ற பாட்டிலும் சொல்லி இருக்கிறார்கள். அதாவது அடிவயிற்றில் குண்டலமாதிரி சுழித்து இருக்கும் மூலாதார நாடியைக் கிளப்பி முக்கோணமாதிரி இருக்கும் ஆசனபக்கம் வந்து, அங்கிருந்து, அங்கு வந்துசேரும், முதுகெலும்பு உள்ளே இருக்கும் மூளை வழியாய் வரும் நாடி வழியாய் ஏற்றி இடுப்பு, நடு முதுகு, கழுத்து பிடற்பாகங்களில் அந்த நாடி வட்டவாயு மில்லாமல், சதுரமாயு மில்லாமல் சுழித்து இருப்பதை நிமிர்த்தி மேலே ஏற்றினால் தாமரை மொட்டுபோல் கீழே உச்சந்தலை பாகத்தில் தொங்கும் சகஸ்ராதார நாடி நிமிர்ந்து மொட்டு மலர்ந்தால் ஞானம் உண்டாகும். அப்போது ஞான ரூபமாக அஞ்ஞானத்தால் தோன்றும் இந்த பிரபஞ்சம் எல்லாம் ஒன்றுமில்லாத வெட்டவெளியாய்த்தோன்றும். ஞானி அப்போது அந்த வெளியில் கலந்துவிடுகிறார். இறப்பு இல்லை. இதுதான் சிதம்பர ரகசியத்தின் பொருள். சிதம்பர ஆலயத்தின் கர்ப்பக்கிரகத்தின் அமைப்பு இதையே உணர்த்துகிறது. விநாயகர் துதிக்கையில் அமிர்த கலசம் வைத்திருப்பதும் இதையேதான் உணர்த்துகிறது. சோம ரசத்தை வைத்து, பசுவை பலி கொடுத்து, ஓம குண்டத்திலிருக்கும் அக்கினியை மேலே கிளப்பவேண்டுமென்பதும் இதையேதான். சோம ரசத்தை வைப்பது என்று சொல்லி மது குடத்தை வைத்து பசுவை பலி கொடுத்து என்று சொல்லி முன்னாட்களில் பசுக்களை வெட்டி இப்போது பசுவிற்கு பதிலாய் ஆடு கிடாக்களை வெட்டி, பொசுக்கி, ஓம குண்டத்திலிருந்து அக்கினியை மேலே கிளப்புவது என்பதற்கு ஒரு குழியில் கட்டைகளை போட்டு கொளுத்தி கடைசியாய் மதுவையும் ஆடுகளின் மாமிசத்தையும் உண்பது இதன் பொருள் அல்ல. உண்மைப் பொருள், சோம ரசத்தை வைத்து என்றால் நம் தேகத்தின் சுகத்தை கவனியாது நம் சரீரத்தின் சத்தைக் கொடுத்து, பசுவை பலி கொடுத்து என்பது நமது ஆணவம் முதலிய பசுத் தன்மையை நீக்கி, ஓம குண்டத்திலிருக்கும் அக்கினியை மேலே கிளப்புவது என்பது சூடாக இருக்கும் அடி வயிற்றின் பாகத்தில் குண்டலம் மாதிரி இருக்கும் மூலாதார நாடியை மேலே கிடப்பி, சகஸ்

ராதார நாடி இருக்கும் இடத்திற்குச் செலுத்துவது என்பதாகும்.

## மதம் என்பது என்ன ?

பகுத்தறிவுடைய மனிதனுய் பிறந்த நாம் இந்த நமது கண்முன் தோன்றும் உலகத்தை உற்றுநோக்கினுல் பல சாதாரண அறிவிற்கு எட்டாத் விஷயங்கள் புலப்படும். உலகத்தில் உயிருள்ள வஸ்துவென்றும், உயிரில்லாத வஸ்துவென்றும், சில மரம் செடிபோல் ஓரறிவுள்ள வஸ்துவென்றும், சில நத்தைபோல் இரண்டறிவுள்ள வஸ்துவென்றும், சில எறும்புபோல் மூவறிவுள்ள வஸ்துவென்றும், சில வண்டுபோல் நான்கறிவுள்ள வஸ்துவென்றும், சில மிருகங்கள் பக்ஷிபோல் ஐந்தறிவுள்ள வஸ்துவென்றும், சில பகுத்தறிவுடன் கூடிய ஆறறிவுடைய்ய மனிதராகிய நாம் என்றும், இவைகள் உற்பத்தியாவதும், சிலகாலம் இருப்பதும், பிறகு அழிவதுமாக இருப்பதும், எல்லாருக்கும் பசி தாகம் முதலியன இருப்பதும், போன்ற பல விஷயங்கள் தோன்றும். பலர் இதைப்பற்றி கவனியாமலே இருந்தாலும் சிலராவது அறிவாளிகள் இதற்கெல்லாம் காரணம் என்ன, மூலம் எப்படி, எப்படி எங்கே போய் முடிகிறது என்று அறிவை உபயோகப்படுத்தி ஆராய்வார்கள். அப்படித் தெரிந்த சிலர் பிறரும் தெரிந்து கொள்ளும் வண்ணம் பிறருக்குத் தெரிவிப்பார்கள். விஞ்ஞான ஆராய்ச்சியில் ஒருசிலர் தாம் கண்டு பிடித்த விஷயத்தை மற்றவர்களுக்கும் தெரிவித்து அவர்களும் அதைத்தெரிந்து அநுபவிக்க செய்கிறுர்கள் என்பது இதற்கு ஒரு உதாரணம். அப்படி அறிவாளிகள் ஆராய்வதுதான் மதம் என்று பொதுவாகச் சொல்வது. ஒரு சிலர் இதற்குக்காரணம் கடவுள் என்று ஒருவர் இருக்கிறுர். அவர்தான் இப்படி எல்லாம் செய்கிறுர் என்பர். இவர்கள்தான் ஆஸ்திகர் எனப்படுவர். ஒருசிலர் எல்லாம் தானுகவே உண்டாகிறது, இயற்கையாக உண்டாகிறது என்பார்கள். இவர்கள்தான் நாஸ்திகர் எனப்படுகிறவர்கள். ஆகவே இரு சாராரும் ஒரே விஷயத்தை நோக்கினுலும் பலவிதமாகச் சொல்வதால் இருவகுப்பினராக பிரிக்கப்பட்டுவிட்டார்கள். விஷயம் ஒன்றுதான் நோக்கம் ஒன்றுதான்.

கடவுளேயும் இயற்கையையும் முடிவுகாணும்வரை நோக்குவதே (சித்தம் + அந்தம்) சித்தாந்தம் என்றும் (வேதம், அறிவு + அந்தம்) வேதாந்தம் என்றும் அழைக்கப்படுவது. ஆகவே சித்தாந்தம் என்பதும் வேதாந்தம் என்பதும் ஒன்றே. சாதர

ரணமாக ஒரு கணக்குப்போடுதல், ஒரு விஷயத்தைப்பார்த்தல் முதலியவற்றில் நாம் நம் கவனத்தை மற்றெதிலும் செல்ல விடாமல் அதிலேயே செல்ல விடுதல் போல், இந்த பெரிய விஷயத்திலும் நேராக நாம் நம் மனதை மற்றெதிலும் செல்ல விடாமல் நம்முழு மனதையும் அந்த விஷயத்திலே செலுத்த வேண்டும். நமக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்று ஐந்து இந்திரியங்கள் இருந்து நம் மனதை சதா ஏதாவதொரு விஷயத்தில் செலுத்திக்கொண்டிருக்கின்றன. இப்படி இருந்தால் மனது ஒடுங்கி நமக்கு வேண்டிய முக்கியமான விஷயத்தில் செல்ல முடியாது. நம்மால் அந்த விஷயத்தைக் காண முடியாது. அதற்காக ஆமை தன் ஐந்து அவயவங்களையும் உள்ளே இழுத்துக்கொள்வதுபோல், நாமும் நமது ஐந்து இந்திரியங்களையும் உள்ளடக்கி அறிவு ஒன்றேயே உபயோகப் படுத்த வேண்டும். இதற்குத்தான் மனது ஒருநிலைப்பட வேண்டும் என்பது, நிஷ்டையில் இருப்பது என்பது, தன்னை மறந்திருப்பது என்பது. இதுமகா பெரிய விஷயமானதால் அவ்வளவு சுலபத்தில் அறியக்கூடிய விஷயமல்லாததால், இந்தப்படி வெகுநாள் அதேநிலையில் இருக்கவேண்டும். அப்போது தான் அந்த கடவுள் அல்லது இயற்கை என்பது இன்னதென்று தெரியும், தெரிந்த பிறகு அதை நன்றாக உணர்வார்கள். இப்படி எல்லாராலும் உடனே இருக்க முடியாததால் அதில் இச்சை உள்ளவர்கள். தங்களை அதற்காக கொஞ்சம் கொஞ்சமாக பழக்கிக்கொள்வார்கள். அப்படி நாள்கணக்கில் இருக்கும் முன் நாழிகைக் கணக்கில் இருக்கப் பழகுவார்கள். நாழிகை கணக்கிற்கு முன் நிமிஷக்கணக்கிற்குப்பழகுவார்கள். எல்லாம் அடக்குவதற்கு முன் இந்திரியங்களை கொஞ்சமாவது அடக்கவேண்டும். அதற்கு மனது முதலாவது வேறெதிலும் போகாமலிருக்கப் பழக்க வேண்டும். இதற்கு முதல்படியாகத்தான் ஒருநாளைக்கு ஒரு தரமாவது, இரண்டுதரமாவது, மூன்றுதரமாவது, நான்கு தரமாவது, ஐந்துதரமாவது பழகவேண்டும். இதைத்தான் இஸ்லாமியர் ஐந்துதரம் தொழுவது என்பதும், கிறிஸ்துவர்கள் மாதாகோவிலில் தொழுவது என்பதும், சிலர் சந்தியா வந்தனம் செய்வது என்பதும், சிலர் அநுஷ்டானம் செய்வது என்பதும், சிலர் ஜபம் செய்வது என்பதும், சிலர் ஜபமாலை உருட்டுவதும், சிலர் அப்படியே உட்கார்ந்து ஜபிப்பார்கள் என்பதும், இப்படி அவர்கள் செய்து ஒரு மந்திரத்தை கடவுளின் பெயர் என்பதை உச்சரித்தோ, மனதை வேறெங்கும் செல்லவிடாமல் நிலைக்கப் பார்க்கிறார்கள். ஆகையால்

யார் எப்படி சொன்னாலும் விஷயமும் செயலும் எண்ணமும் ஒன்றேதான். கடவுள் என்பதும், தெய்வம் என்பதும், ஆண்டவன் என்பதும், சிவன் என்பதும், விஷ்ணு என்பதும், பிதா என்பதும், அல்லா என்பதும், இயற்கை என்பதும், பிரம்மம் என்பதும், ஞானம் என்பதும், உண்மை என்பதும், (உண்மையைக்காட்டிலும் பெரிது வேறில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள்) சுடர் என்பதும், சோதி என்பதும், வெளி என்பதும், எல்லாம் கடைசியில் அந்த ஒன்றையே குறிக்கின்றன. ஆகையால் உலகத்திலுள்ள மதங்கள் எல்லாம் ஒன்றே அதற்காக எல்லாரும் செய்யும் தொழிலும் ஒன்றே இதில் சில மதக் கொள்கைக் காரர்கள் கடவுள் என்பது அல்லது பிரம்மம் என்பதோடு நின்று விடுகிறார்கள். தமிழர்களோ கடைசியாகிய வெளி என்பதில் போய் முடிக்கிறார்கள். அதைக்கண்டு அநுபவித்தவர்களும் இருக்கிறார்கள். நம்மதம் நமக்குச்சரியாகத் தெரியாததால்தான் நாம் அவர்கள் யார், அவர்கள் எத்தன்மையவர்கள் அவர்கள் பெருமை என்ன என்பதை உணராமல் இருக்கிறோம்.

பொதுவாக உலகத்திலுள்ள மதங்கள் எல்லாம் அவரவர்களின் அறிவின் நிலைக்கு ஏற்றபடி நான்கு பாகுபாடாக பிரித்திருக்கிறார்கள்.

1. துவைதம் அல்லது இரண்டு:—இதில் கடவுள் வேறு நாம் வேறு என்று பிரித்து அதற்காகப் பாடுபடுவது. தற்காலம் உலகத்திலுள்ள அநேக மதங்கள் தற்போது இருக்கும் சைவம், வைணவம், இஸ்லாம் கிறிஸ்துவம் முதலிய மதங்கள் இதில் சேர்ந்தவை.

2. துவைதாத்வைதம் :—அதாவது இரண்டுமில்லை ஒன்றுமில்லை இதில்தான் கடவுளின் ஒரு பகுதி நாம் என்று எண்ணிப்பார்ப்பது.

3. அத்துவைதம், ஒன்று:—இதில் நாமே கடவுள் என்பது. நீ அதுவாயிருக்கிறாய் என்பது. இப்படிச் சொன்னதினால் சாதாரண மனிதன் இதன் விஷயத்தை உணராதவன் சொற்ப அறிவை வைத்துக்கொண்டு நானே கடவுள் ஆய் விட்டேன் என்று எண்ணி விபரீதம் விளையும்படி நடந்து கொள்கிறான்.

4. ஞானம், அறிவு:—இதில்தான் கடவுள் என்பது யார்? எங்கிருக்கிறார்? என்பனவான உண்மைகளை உணர்வது. இதையே ஜோதி என்றும் சுடர் என்றும், வெளி என்றும்

சொல்வது. இது சாதாரண அறிவுடையவருக்கு எளிதில் விளங்காது.

ஆகவே சாதாரண மனிதர் முதலில் துவைதம் பாவித்து கடவுளைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆவல்கொண்டு முயற்சித்தால் துவைதாத்துவைதம் தோன்றும். மறுபடியும் மேல் நோக்கி முயற்சித்தால் அத்துவைதம் தோன்றும். மறுபடியும் முயற்சித்தால் ஞானம் தோன்றும். ஆகையால் இந்தப்படிகள் ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதல்ல. ஒன்றுக்கொன்று முதல் ஆதாரம். அவரவர்கள் அறிவிற்கும் முயற்சிக்கும் ஏற்றவாறு தோன்றும். இப்படி ஞானம் உண்டானவர்கள் மறுபடியும் நான்கு விதப்படுவார்கள்.

1. பிரம்மவித்து:—இது முதல்படி. முதலில் ஞானத்தை அடைந்தவர்கள். தன்னை மறந்து இருந்து தியானம் செய்து அந்த ஒன்றை உணர்வார்கள். இவர்கள் முதலில் எப்பொழுதுமே அப்படி இருக்க முடியாது. சிறிது காலந்தான் இருப்பார்கள். மற்ற காலம் மறுபடியும் தன் உணர்ச்சி வந்து உலக உணர்ச்சியோடு இருப்பார்கள்.

2. பிரம்ம வரன்:— இது இரண்டாவது படி. இதில் ஞானத்தை உணர்ந்தவர்கள் முதல்படியைவிட அதிக நேரம் அப்படி இருப்பார்கள். இவர்கள் அப்படி இருக்கும்போது பசி தாகம் உண்டாகும். அப்போது அந்த நிலையை விட்டு உலக அனுபோகத்திற்கு வருவார்கள். அப்போது உணவை உட்கொண்டு மறுபடியும் பழைய நிலைக்கு தியான நிலைக்கு ஞானநிலைக்குப் போய்விடுவார்கள்.

3. பிரம்மவரியான்:—இது இரண்டாவது நிலைக்கு மேற்பட்டது. இதில் ஞானத்தை உணர்ந்து அதில் லயித்திருப்பார்கள். தனக்குப் பசியும் தாகவும் தோன்றாது அந்த ஞான உணர்ச்சியிலேயே இருப்பார்கள். அவர்கள் சாப்பிடும்வேளை வந்ததும் பக்கத்திலிருக்கும் அவர்களுடைய சிஷ்யர்கள் அவரைத் தூண்டி, அவரை அந்த நிலையை விட்டுவிடும்படி செய்வார்கள். அப்போது அவர்கள் தன் பழைய நிலையாகிய உலக அறிவிற்கு வருவார்கள். அப்போது உணவு முதலியன உண்டு மறுபடியும் பழைய நிலைக்குப் போய்விடுவார்கள்.

4. பிரம்மவரிட்டன்:—இதுதான் கடைசிநிலை. மூன்றாவது நிலைக்கு மேற்பட்டது. இதற்கு மேற்பட்டது ஒன்றுமில்லை. இதில் அவர் தன்னை முற்றிலும் மறந்து ஞான நிலையை அடைந்து, ஞானத்தை உணர்ந்து, உண்மையை

உணர்ந்து, உலகமெல்லாம் தான் உள்பட எல்லாம் ஒரே ஜோதியாய்ப் பார்த்து, பிறகு எல்லாம் ஒரேவெளியாகப் பார்த்து, தானும் அதில் லயித்து அதோடு கலந்துவிடுவார்கள் இதைத்தான். இரண்டறக் கலத்தல் என்பது. சிவபதவியை அடைந்து விட்டதாகச் சொல்வது. இயற்கையை எய்தினர் என்பது. இந்த நிலையில் அவர்கள் தன்னை மறந்து, வெயில் மழை என்றும், பகல் இரவு என்றும், பசிதாக மென்றும், மலஜலமில்லாமலும், தான் நிர்வாணமாயிருப்பதும் உணராமல், தன் உடலுக்கு, தன் உடல் என்று ஒன்று இருப்பதும் உணராத நிலை, ஏதாவது நேரிட்டாலும் அதையும் உணராமல். சிலகாலமிருந்து ஒன்றோடு கலந்துவிடுவார்கள். பக்கத்தில் இருப்பவர்களுக்கு. அவர்கள் அப்படி கலந்தது கூடத் தெரியாமல் உடலைத்தான் பார்த்துக்கொண்டிருப்பார்கள். இந்த நிலையையே கைவல்யநிலை என்றும், சமாதிநிலை என்றும் நிஷ்டை கூடி விட்டார் என்றும், சகசநிஷ்டை என்றும், நிர்விகல்பசமாதி என்றும் தூங்காமல் தூங்குவது என்றும் சொல்வது. இந்தநிலை வந்தால், பெயர் உருவம் இவைகளோடு தோன்றும் இவ்வுலகம் நம் அஞ்ஞானத்தால் அப்படித் தோன்றுகிறது. ஆனால் ஞானம் உண்டானால் ஞானக் கண்ணோடு பார்த்தால் எல்லாம் ஒரேவெளியாகத்தோன்றும். இதைத்தான் சிதம்பர ரகசியம் என்று சொல்லி ஒரு வெறுஞ் சுவற்றை, விஷயம்தெரியாத ஒரு தரகர் நமக்கு காட்டிவிடுகிறார். இப்படி விஷயங்கள் தெரிந்தாலும், நமது மதம் இன்னதென்றும் உணராத பாமரமக்கள், நமது கண்ணுக்கு முன் தோன்றினவர்கள் எப்பேர்ப்பட்டவர் எத்தன்மையவர் என்று உணராது அவர்களை மறந்துவிடுகிறார்கள். இவர்கள் இருந்தது நம்மவர்களுக்கு ஒரு ஞாபக மூட்டாக இருக்கவேண்டும். இராமகிருஷ்ணபரமாம்சரும், சுவாமி விவேகானந்தரும் பிரம்மவித்து நிலையைச் சேர்ந்தவர்கள். சுமார் 40 வருடங்களுக்கு முன்பிருந்தவர் கும்பகோணம் மௌனசுவாமிகள். இவரை அநேகர் நேரில் பார்த்திருக்கிறார்கள். மதம் இன்னது என்பது தெரியாமையால் அவருடைய பெருமையை யாரும் தெரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. தற்காலம் மௌனம் என்று வெறும் வேஷம் போட்டுக்கொண்டு வாய்மாத்திரம் பேசாமல் மற்றபடி எல்லா காரியங்களும் செய்யும் ஆட்களைப் போலல்லாமல் எல்லாமே மௌனமாக இருந்தார். நிர்வாணமாயிருந்தார் அந்த நினைவே அவருக்கில்லை. இவர் வேஷம் போடுகிறார் என்று எண்ணி போலீஸ்காரர்கள் அவரைத் தூக்கிக்கொண்டுபோய் இல்லாத இம்சை எல்லாம் செய்து

பார்த்தார்கள். இவைகள் ஒன்றையும் அவர் உணரவில்லை. முழுதும் தன்னை மறந்திருந்தார். போலீஸ்காரர்கள் அவரைப் பிறகு வெளியே கொண்டுபோய் போட்டுவிட்டார்கள். அவருக்கு வெயில் மழை ஒன்றும் தெரியாது. பசி தாகம் கிடையாது. மலஜலம் கிடையாது. அப்படியே கிடப்பார். யாராவது மனமிரங்கி வாயில் ஒன்று இரண்டு பொட்டுக் கடலையோ, ரோஜா மலர் இதழ்களையோ திணித்துவிட்டு போய், மறுதினமோ அப்புறமோ வந்து பார்த்தாலும் வைத்தவை அப்படியே இருக்கும். இவர் எப்போது ஒன்றோடு கலந்தார் என்று யாருக்கும் தெரியாது. இவரைப்போலவே இருந்தவர் சுமார் 100 வருஷங்களுக்கு முன் தஞ்சாவூர் ஜில்லா திருவாரூரிலே இருந்தவர் தக்ஷிணாமூர்த்திசுவாமி என்பவர். இதற்கு முன் சுமார் 150 வருடங்களுக்கு முன் திருச்சினாப்பள்ளி ஜில்லாவில் கரூர் தாலுக்காவில் நேரூர் கிராமத்தில் இருந்தவர் சதாசிவ பிரம்மம் என்பவர். இவர்கள் எல்லாரும் பிரம்மவரிட்டன் வகையைச் சேர்ந்தவர்கள். இம்மாதிரி மற்ற நாடுகளில் யார் யார் இருந்தார்கள் என்று என்னால் சொல்ல முடியாது. என் சிநேகிதரான ஒருவர் அம்மாதிரி ஒருவர் இப்பொழுதும் இராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு கிராமத்தில் இருப்பதாக சொல்லி இருக்கிறார்.

இந்த நிலை வருவதற்கு நம் சரீரத்தில் இருக்கும் மூலாதார நாடியை உச்சந்தலையிலிருக்கும் சகஸ்ராதார நாடிக்கு கிளப்பவேண்டும். அப்போது அந்த நாடி முனை கீழே தொங்கி இருந்தது நிமிர்ந்து மலர்ந்த தாமரை மலர் போல் தோன்றும். அப்போது ஞானக்கண் உண்டாகும். அப்போது இந்த உலகம் தன் நிஜ ரூபத்தோடு நமக்குத் தோன்றும். இதற்குத்தான் சைவசித்தாந்தம் என்பது. அது சிவா + சித்தம் + அந்தம். வாசி என்பது சிவா என்று ஆயிற்று. வாசி என்றால் மூச்சு, அதாவது இடகலை பிங்கலைகளில் ஓடும் மூச்சை அடக்கி சுழுமுனை நாடியில் நிறுத்தி மூலாதாரத்தில் இருக்கும் நாடியை சகஸ்ராதார நாடிக்கு ஏற்றுவது. இதைத்தான் விநாயக ரூபத்தில் துதிக்கையின் முனையில் அமிர்த கலசம் வைத்திருப்பதென்பது. திருப்பால்கடலை கடைவது என்பது. சோமரசத்தை வைத்து, பசுவை பலிகொடுத்து, ஓமகுண்டத்திலிருக்கும் அக்கினியை கிளப்புவது என்பது. ஓங்காரப்பொருள், ஓங்காரம் என்பது. சிவனுக்கும் விஷ்ணுவிற்கும் சங்கு என்னும் ஆயுதம் கொடுத்திருப்பது. விஷ்ணு கோயில்களில் விஸ்வரூப தரிசனம் என்று பசுவையும் யானையின் துதிக்கையையும்காட்டுவது. காளிங்கநர்த்தனம் என்பது.

சோமாஸ்கந்தர் என்பது. பஞ்சாக்ஷரம் என்பது. ஷடாக்ஷரம் என்பது. அஷ்டாக்ஷரம் என்பது. ஆறு ஆதாரம் என்பது. சுப்பிரமணியருக்கு ஆறு தலைகள் என்பது. கிறிஸ்துவர்களில் பெரிய பாதிரிகளுக்கு பாதிரி தடி என்று சொல்லி ஸ்ரீ மாதிரியுள்ள தடியைத் தூக்கிச்செல்வது முதலியன. இந்தக்கடைசிநிலை அடையச் சொல்வதே நம் தமிழர் மார்க்கம். இது சுலபத்தில் எல்லாராலும் அறியக்கூடிய விஷயமல்ல. மற்றவைகள் அவரவர்கள் நிலைக்கும் அறிவிற்கும் ஏற்றபடி அமைக்கப்பட்டவை. அவைகள்தான் முடிபு என்று நினைத்துவிடாமல் மேல்நோக்கிப் பார்க்க வேண்டும். ஆகையால் உலகத்திலுள்ள எல்லாருமே ஒரே மதத்தார்கள். நிலைதான், அறிவுதான் வித்தியாசம். அதுதான் முடிவு என்று நினைத்து விடாமல் மேல்நோக்கிச் செல்லவேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு கடைசிநிலை கிட்டும்.

தோற்பதமேவித் துரிசற்று மேலானதற் பரங்கண்டுளோர் சைவசித்தாந்தரே—என்பது திருமூலர் வாக்கியம்.

---

## வேத சாஸ்திரங்கள்.

நமது மதத்தில் நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், அறுபத்துநான்கு கலைக்ஞானங்கள், பதினெண் புராணங்கள், என்று சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகள் நன்ருய்த் தெரிந்தால்தான் ஞானம் உண்டாகும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவைகள் வெறும் புத்தகங்கள் அல்ல. சிதம்பரத்தின் ஆலயம் நமது மதத்தின் உண்மையை எடுத்துக் காட்டாக அமைக்கப்பட்டிருக்கிறது என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆலயத்தில், மற்ற எல்லா தென்னாட்டு ஆலயங்களைப்போலவே, ஐந்து பிரகாரங்களும் அவைகளின் மத்தியில் கர்ப்பக்கிரகமும் இருக்கின்றது. அது ஐந்து கோசங்களை உடைய நமது சரீரத்தின் மத்தியில் இருக்கும் இருதயத்தில் கடவுள் இருக்கிறார் என்று உணர்த்துகிறதென்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. சிதம்பரத்தின் கர்ப்பக்கிரகத்தின் முக்கிய அமைப்பு என்னவென்றால், அந்த கிரகம், உள் பிரகாரத்தின், நம் சரீரத்தில் இருதயம் இருப்பதைப்போல், கொஞ்சம் இடதுபுறம் தள்ளியும், சற்று உயர்ந்தும் இருக்கிறது. ஆனால் சிதம்பரத்தின் கர்ப்பக்கிரகத்தின் விசேஷ அமைப்பு என்னவென்றால் முதலில் பதினெட்டு தூண்கள் உள்ள மண்டபமும் அப்புறம் இருக்கும்

அறைக்கு தொண்ணூற்றாறு பலகணிகளும், அறுபத்து நான்கு கைமரங்களும், அறைக்குள் முதலில் ஆறு சாதாரண தூண்களும், அப்புறம் நான்கு தங்கத் தூண்களும் இருக்கின்றன. அப்புறம் சோதி உருவமாய் இருக்கும் நடராசரும், அப்புறம் வெளியாகிய இரகசியமும் இருக்கின்றன. இந்த பதினெண் தூண்களும் பதினெண் புராணங்களையும், அறுபத்து நான்கு கைமரங்களும் அறுபத்துநான்கு கலைக்ஞானங்கள் என்கிற கிளை நாடிகளையும் ஆறு வெறும் தூண்கள் ஆறு சாஸ்திரங்களையும், நான்கு தங்கத் தூண்கள் நான்கு வேதங்களையும் குறிக்கின்றன. இவைகளைத் தாண்டினுல்தான் கடவுளாகிய சோதியையும் அப்புறம் சுத்த வெளியாகிய இரகசியத்தையும் காணலாம் என்று அந்த ஆலயம் குறிக்கின்றது.

இப்போது அந்தப் புராண, கலைக்ஞான, சாஸ்திர, வேதங்கள், எவை என்று ஆராய்வோம். இவைகள் வெளிப் புத்தகங்கள் அல்லவென்றும் எல்லாம் நம்மில் இருப்பவைகள் தான் என்றும் முன் சொன்னதில் இருந்து நன்கு விளங்கும். பதினெண் புராணங்கள் என்பவை, நம் பதினெட்டு தத்துவங்கள். அவையாவன ஐந்து உயிர் உறுப்புகளாகிய ஞான இந்திரியங்கள், ஐந்துதொழில் உறுப்புகளாகிய கன்ம இந்திரியங்கள், ஐந்து பிராணுதி வாயுக்கள், மூன்று அந்தக் கரணங்களாகிய, சித்தம், மனம், புத்தி, அறுபத்திநான்கு கலைக்ஞானங்களாவன நம் சரீரத்தில் இருக்கும் அறுபத்தி நான்கு கிளை நாடிகள், ஆறு சாஸ்திரங்களாவன நமது சரீரத்தில் இருக்கும் மூலாதாரம் முதலாகிய ஆறு ஆதாரங்கள் நாடிகள், நான்கு வேதங்களாவன, நமது முதுகு எலும்புக்குள் இருக்கும் வால்மூளையில் நான்கு இடங்களில் உள்ள முக்கிய நாடிகள்.

நாம் கடவுளாகிய, சோதியாகிய, அந்த ஒன்றைக் கண்டு, அதை அடையவேண்டுமானுல், நாம் முதலில் நமது பதினெண் தத்துவங்களையும் அடக்கி, பிறகு அறுபத்திநான்கு கிளை நாடிகளையும் அடக்கவேண்டும். பிறகு நமது ஆறு ஆதாரங்களாகிய ஆறு நாடிகளையும் அடக்க வேண்டும். இப்படி எல்லாம் அடக்கினுல்தான் நமது முதுகுவால் மூளையில் இருக்கும் நமது முக்கிய நான்கு நாடிகளையும் நிமிரச் செய்யலாம். அப்படிச் செய்தால் நமது தலை உச்சியில் இருக்கும் சகஸ்ராதார நாடி, தாமரைமொட்டு உருவம்போல், வாழைப்பூ உருவம்போல், தலைகீழாகத் தொங்குவது நிமிர்ந்து தாமரை மலர்போல் மலர்ந்து விரியும். அப்படி விரிந்தால்

நமக்கு ஞானக்கண் உண்டாகி, பிரபஞ்சத்தின் உண்மை உருவம், முதலில் எல்லாம் ஒரே சோதியாய்த் தோன்றி கடைசியில் எல்லாம் சுத்த வெளியாய்த் தோன்றும்.

ஆ




1, 2, 3, 4, 5, 6-ம் ஆறு ஆதாரங்கள், ஆறு சாஸ்திரங்கள், நாடிகள்.

I, II, III, IIII-ம் நான்கு வேதங்கள், முக்கிய நாடிகள், இவைகள் நிமிர்ந்தால் தான், ஞானக்கண் திறந்து, உண்மை தோற்றம் தெரியும்.

பக்கத்தில் இருக்கும் படத்தில் ஆ லக்கமிட்டதைப் பார்க்கவும். (இது சுவாமி விவேகானந்தர் போட்டுக் காட்டியது.) இதில் ஆறு இதழ்கள் உள்ள ஒரு இலைமேல் ஒரு தூண் நிற்கிறது. அதின் அடியில் இருந்து ஒரு பாம்பு கிளம்பி நான்கு இடங்களில் அதைச் சுற்றி மேலே போகிறது. உச்சிபோனதும் அவ்விடத்தில் ஒரு சோதி உருவம் இருக்கிறது. அதற்குமேல் ஒரு தாமரை மலர் மலர்ந்து, ஒரு காம்பின் முனையில்போய், பிறகு அதுவும் ஒன்றுமில்லாமல் போய்விடுகிறது. இதைக் குறிக்கத்தான் நம் நாட்டில் அரசமரத் தடிகளில், இப்படி கீழ் இருந்து மேல் செல்லுவதுபோல் பாம்பு ஒத்தையாகவாவது, ஜோடியாகவாவது, போவது போல் ஒரு கல்லில் குறித்துப் புதைத்து வைத்திருக்கிறார்கள். இதில் முதலில் இருக்கும் இலையில் இருக்கும் ஆறு இதழ்களும் 1, 2, 3, 4, 5, 6 என்று குறிக்கப்பட்ட ஆறு ஆதாரங்கள். இதன் ஆதாரத்தில் நிற்கும் தூண் நமது முதுகு எலும்பிற்குள் இருக்கும் வால்மூளை. நாம் ஞானம் அடைய விரும்பினால் முதலில் தலை கழுத்து, முதுகெலும்புகள் எல்லாம் நிமிர்ந்து நிற்கவேண்டும். ஆகையினால்தான் அது

நிமிர்ந்து நேராக நிற்கும் தூணாக இருக்கிறது. அதைப் பற்றிச்செல்லும் பாம்புதான் நமக்கு அடியில் இருக்கும் மூலாதார நாடி நிமிர்ந்து அந்த வால் மூளை வழியாக மேலே செல்வதைக் குறிக்கிறது. அது I, II, III, IIII இடங்களில் அந்தத் தூணைத் தாண்டி செல்வதாவது, அந்த வால் மூளையில் அது நான்கு இடங்களில் வட்டமாய் இல்லாமலும், சதுரமாயில்லாமலும், சுருண்டுகிடப்பது நிமிர்ந்து செல்வதைக் குறிக்கிறது. அதற்காகத்தான் அந்த இடங்களில் நான்கு காய்கள் உள்ள கொத்துப்போல் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த சுருட்டல் நிமிர்ந்து மேலே செல்லவேண்டும். அப்படி சென்று மேலே மொட்டுபோல் தொங்கும் சகஸ்ராதார நாடி நிமிர்ந்து மலர் போல் மலர வேண்டும். அப்போது ஞானக்கண் உண்டாகும். அப்போது முதலில் எல்லாம் சோதிபோல் தோன்றும். பிறகு தாமரை மலர் இதழ்கள் சுமார் ஆயிரத்தெட்டு உள்ளது எல்லாம் ஒன்ருய் இருப்பதுபோல் இக்தப் பிரபஞ்சமே ஒன்ருய்த் தோன்றும். பிறகு அதன் காம்பு முனையில் வந்து ஒன்றுமில்லாமல் போவது, எல்லாம் சுத்த வெளியாய் போய் விடும். இதைக் குறிக்கத்தான், ''மூல மண்டலத்திலே, மூட்டிநின்ற தூணிலே நான்ற பாம்பின் வாயிலே, நடுவில் நின்ற சோதியாய் அப்பனும் அம்மையும் எடுத்துரைத்த மந்திரம், அங்கு ஓர்எழுத்திலே, காணஅங்கு இல்லையே.'' என்று சிவவாக்கியர் சொல்லி இருக்கிருர். இதில் மூலமண்டலத்திலே என்பது ஆறு இதழ்கள் கொண்ட இலையாகிய, மூலாதாரம் முதலாகிய ஆறு ஆதாரங்கள், ஆறு சாஸ்திரங்கள். முட்டிநின்ற தூணிலே என்பது நிமிர்ந்து நிற்கும் வால்மூளையாகிய தூண், நான்ற பாம்பு என்பது நான்கு இடங்களில் அந்தத் தூணைச் சுற்றி போகும் மூலாதாரத்தில் இருந்து மேலே போகும் நாடி, நான்கு இடங்களில் தாண்டி நிமிர்வது நான்கு வேதங்கள் என்று சொல்லப்பட்ட இடங்கள், நடுவில் நின்ற சோதி என்பது சகஸ்ராதார நாடி நிமிர்ந்து, முதலில் சோதியாய் தோன்றுவது. அப்பனும் அம்மையும் எடுத்துரைத்த மந்திரம் அங்கு ஓர் எழுத்திலே என்பது மூலாதாரத்திலிருந்து சகஸ்ராதார நாடிக்குப்போகும் நாடி, தலை கிழாய் போடப்பட்ட பிரணவ எழுத்தாகிய ? உருவமாய் இருப்பது. இப்படி செய்தால் காண அங்கு இல்லையே என்பதுபோல், பார்க்கப்போனுல் எல்லாம் ஒன்றும் இல்லாமல் சுத்த வெளியாய் இருப்பது. இதைத்தான் ஒரு சித்தர் ''வெட்டிவெளி தன்னை மெய்யென்று இருப்பார்க்கு'' என்று சொல்லி இருக்கிருர்.

அ.




1, 2, 3, 4, 5, 6-ம் ஆறு ஆதாரங்கள், ஆறு சாஸ்திரங்கள், நாடிகள்.

I, II, III, IIII-ம் நான்கு வேதங்கள், முக்கிய நாடிகள், இவைகள் நிமிர்ந்தால்தான், ஞானக்கண் திறந்து, உண்மை தோற்றம் தெரியும்.

பக்கத்தில் இருக்கும் படத்தில் அ லக்கமிட்டதைப் பார்க்கவும். இது ஒரு மனித உடலைப் போல் இருக்கிறது. அதாவது அதில் குறிப் பிட்டவைகள் நம் சரீரத்தில் அவைகள் குறிப்பிட்ட இடத்தில் இருக்கின்றன என்று காட்டுகிறது. இதில் 1, 2, 3, 4, 5, 6 என்று குறிப் பிட்டிருக்கும் இடங்களில்தான் ஆறு சாஸ்திரங்கள் என்ற ஆறு ஆதாரங்கள் என்ற முதல் ஆறு முக்கிய நாடிகள் இருக்கும் இடங்களைக்காட்டுகின்றன. அதில் 1 குறிப்பிட்ட இடத்தில் இருக்கும் மூலாதார நாடி முக்கோண வடிவமாக இருப்பதைப் பார்க்கவும். இதில் அந்த வால் மூளையானது முதுகு எலும்பில் அடிப்பாகத்தில் அதில் குறிப்பிட்ட நான்கு இடங்கள் வழியாய் நமது சரீரத்தில் வலது புறமும் இடது புறமும், இருபுறங்களிலும், நாடியாய் வெளிவந்து அங்கு 1 என்று குறிப்பிட்ட இடத்தில் சேருகின்றன. இங்கு மூலாதார நாடி 1 என்பதில் இருந்து புறப்பட்டு I, II, III, IIII என்ற நான்கு இடங்கள் வழியாய் உச்சந்தலையில் இருக்கும் சகஸ்ராதார நாடிக்கு செல்வதைப் பார்த்தால் தலைகீழாக போட்ட ? என்ற உருவம் வருகிறது. இதைத்தான் "மூல நாடி முக்கட்டின் உச்சியில், நாலுவாசல் நடுவுள் இருப்பீர்காள், மேலவாசல் வெளியுறக் கண்டபின், காலன் வார்த்தை

கனவிலும் இல்லையே" என்று திருமூலரும் சொல்லி இருக்கிறார். மூலநாடி முக்கட்டின் உச்சி என்பது, மூலாதாரம் இருக்கும் முக்கோண வட்டமாக இருப்பதின் உச்சி என்பது, நான்குவாசல் நடுவுள் இருப்பீர்காள் என்பது I, II, III, IIII என்றும் நான்கு இடங்களில் இருக்கும் நாடிகளைத் தாண்டிச் சென்று என்பது, மேல்வாசல் வெளியுறக்கண்டபின் என்பது சகஸ்ராதார நாடி சென்று சுத்தவெளி தோன்ற காண்பது என்பது, காலன் வார்த்தை கனவிலும் இல்லை என்பதாவது, இறப்பு என்பது எப்போதும் இல்லை என்பது. அதாவது மூலாதார நாடியை சகஸ்ராதார நாடிக்குச் செலுத்தி அதை நிமிர்த்தி மலரச்செய்து ஞானக்கண் உண்டாகி எல்லாம் சுத்த வெளியாய் கண்டவர்களுக்கு இறப்பு என்பதே கிடையாது என்பது.

---

## அறிவு.

சைவ மதத்தைச் சார்ந்தவர்களில், தாயுமானவர் சித்தாந்தியென்று ஒரு சிலரும், வேதாந்தியென்று ஒரு சிலரும் வாதம் செய்துவருகின்றனர். இவர்கள் எல்லாம் சித்தாந்தம் வேறு, வேதாந்தம் வேறு, என்னும் கொள்கை உடையவர்கள். உண்மையில் தாயுமானவர் சைவம் என்னும் சுத்த அத்விதத்தை உடையவர். ஆனால் இப்போது இருக்கும் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள் சைவம் என்பது சுத்த அத்துவிதம் என்று சொல்லிக்கொண்டாலும் அவர்கள் நடப்பெல்லாம் துவிதமே. அந்த துவிதத்திலும் பக்தி, யோகம், ஞானம் என்று சொல்லப்பட்டிருக்கிற மூன்றுவித மார்க்கத்திலும் மேலான இரண்டையும் மறந்துவிட்டு கீழான பக்தி மார்க்கத்தையே கொண்டு நடத்துகிறார்கள். இந்த பக்தி மார்க்கந்தான் சரியை, கிரியை, என்று இரு பிரிவாக பிரித்து நடத்துகிறார்கள். இதிலும் நிர்க்குண உபாசனை, சகுன உபாசனை என இரு பிரிவுகள் உண்டு. இதிலும் கீழான சகுன உபாசனையைக் கொண்டு நடத்துகிறார்கள். அதன்படி கடவுள் என்பவருக்கு பெயர் உருவம், பெண்டு பிள்ளைகள் இவர்களைப்போன்ற சகல குணங்களுடன் கூடியவர் என்று வணங்குகிறார்கள். தாயுமானவர் இப்படி சகுன உபாசனைகளையுடையவரா என்று அவர் முதலில் வணக்கத்துக்கு பாடியிருக்கும் மூன்று பாடல்களையும் கவனித்தால் தெரியவரும்.

தவிர, அவர் பாடியிருக்கும் பாட்டுகளில் சில பாட்டுகளில் "சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே,

தேசோமயானந்தமே'' என்று சொல்லி யிருப்பதைக் கவனிக்கவும். சித்தத்தின் மீது இருக்கும் அறிவு என்பது தெய்வம். அது தேசோமயம், சோதிமயம், ஒளிமயம் ஆனது. அது நித்தியானந்தமாய் உள்ளது. சத் சித் ஆனந்தம் என்று கடவுளை அழைக்கிறார்கள். அவர் சத்தாய் எப்பொழுதும் நிலையாய் உள்ளவர். அவர், சோதி, ஒளி உருவமாய் உள்ளவர். அவர் நித்யானந்தமாய் உள்ளவர் என்று விளங்கும். அந்த அறிவும், பேரறிவு, சிற்றறிவு, என இருவகைப்படும். அவர் பேரறிவு நமக்கு இருப்பது சிற்றறிவு. நமது சிற்றறிவைக் கொண்டுதான், நித்தியானந்த பேரறிவை அறியவேண்டும். இதைத்தான் அறிவை அறிவினால் அறியவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.




பக்கத்தில் போடப்பட்டிருக்கும் படத்தைப் பார்க்கவும். இது நமது தலையில் இருக்கும் மூளையை வரைந்து காட்டியிருக்கிறது. நம்து மூளைதான் நமது எல்லா காரியங்களுக்கும், காரணம் என்று எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

அந்த மூளையில் ஆஞ்ஞை, என்றும் சகஸ்ராதாரம் என்றும் இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது. மூளைதான் அறிவிற்கு இடம் என்பதில் ஒன்று கீழும் மற்றொன்று மேலும் இருக்கின்றன. கீழிருப்பது சிற்றறிவைக் கொடுக்கிறது. மேலிருப்பது பேரறிவைக் கொடுக்கிறது. இதில் சகஸ்ராதாரம் என்று குறிப்பிட்ட இடத்தில் இருப்பது தான் பேரறிவு இருக்கும் இடம். அது அங்கே மூடப்பட்டிருக்கிறது. அதைப் பதன்படுத்தினால் பேரறிவு கிளம்பும். இதற்குத்தான் ஞானக்கண் உண்டாகும் என்பது. இதைத் தான் சுவாமி விவேகானந்தர் என்பவர் அறிவு என்பது எல்லாரிடத்திலும் இயற்கையாக இருக்கிறது. அது மூடப்பட்டிருக்கிறது என்று சொல்லியிருக்கிறார். சுரங்கங்களில் இரத்தினம் அழுக்கு மூடியிருப்பதுபோல் கிடக்கிறது. அந்த இரத்தினத்தைப் பொறுக்கி நல்ல சாணையில் இட்டு அந்த அழுக்குகளையெல்லாம் போக்கினால்தான் அந்த இரத்தினத்தின் பிரகாசம், ஒளி தெரியுமென்று தெரிந்த விஷயம். அது போல் அந்த மூடிக்கிடக்கும் சகஸ்ராதார நாடியைக் கண்டு கிளப்பவேண்டும், என்று சொல்லியிருக்கிறார்கள். அப்படி செய்யவல்லது நம் சிற்றறிவுதான். அது அந்த மூளையில்

ஆஞ்ஞை என்று குறிப்பிட்ட இடத்தில் இருக்கிறது. இது தான் நாம் இப்போது நடப்பதற்கெல்லாம் காரணமாய் இருக்கிறது. நாடி என்ற நரம்பு பட்டத்தை சற்று கவனித்தால் இதில் இருந்துதான் கண், மூக்கு, வாய், செவி இன்னும் மற்ற அவயவங்களுக்கெல்லாம் நாடிகள் நரம்புகள் செல்லுகின்றன. அப்படி சென்று ஒவ்வொரு உருப்புகளையும் நடத்தி அதில் உண்டாகும் பலன்களை தெரிந்து நமக்கு அறிவிக்கிறது. இன்னும் சொல்லப்போனால் (Mental Shock) என சொல்லப்பட்ட அதிற்சி என்பது இதனால் உண்டாகிறது. அதின் சக்திக்கு மீறின வேலையை அதற்குக் கொடுத்தால் அது செயலற்று விழுந்து விடுகிறது. அப்போது அவருக்கு சுரணையற்று மயக்கம் வந்து விடுகிறது. இதினால் சில சமயங்களில் உயிரே போய்விடுகிறது. ஒரு வக்கீல் கச்சேரியில் வாதித்துக் கொண்டிருக்கும்போதே அதன் பயனாய் கீழே விழுந்து மரணம் அடைந்ததைக் கேள்வியுற்றிருக்கிறேன். அப்படியே ஒரு சபையில் ஒருவர் வாதித்துக்கொண்டிருக்கும்போதே கீழே விழுந்து, பிறகு மயக்கம் தெளியாமல் இறந்துபோனதையும் பார்த்து இருக்கிறேன். சிலர் பேயால் அடிக்கப்பட்டு இறந்ததையும் பார்த்து இருக்கிறேன். அதாவது பேய் என்று மனதில் அதே திகில்பட்டு அந்தச் சிற்றறிவு என்னும் மூளைக்குத் தாக்கி அது தாங்காமல் மயங்கி உயிர் போகிறது.

இதை இன்னும் சொல்லவேண்டுமானால் நமது உடல் உறுப்புக்களைப்பற்றி சொல்லியிருக்கிற (Physiology) என்னும் புஸ்தகத்தைப் படிக்கிறவர்கள் நமது உறுப்பிற்கு ஒத்திருக்கும் தவளையை வைத்து சோதிப்பது உண்டு. இவர்கள் மேற் சொன்ன ஆஞ்ஞை (Cavernous) என்பதைப்பற்றி சோதிக்கையில் அந்த பிராணியின் தலையில் அந்த நாடியிருக்கும் இடத்தைப் பார்த்து அதில் படும்படியாய் ஒரு ஊசியை ஏற்றினால் அந்த பிராணி அப்படியே மயங்கிக் கிடக்கிறது. ஆனால் அந்த ஊசியை பிடுங்கி விட்ட மாத்திரத்தில் அது முன்போல் ஓட இருக்கச் செய்கிறது.

அந்தச் சிற்றறிவினால் நமது ஊனக்கண்ணால், நமது இயந்திரங்களால் அறியப்படும் இந்த பிரபஞ்ச உலக விஷயங்கள் எல்லாம் நிலையற்றவை என்று தெரிந்து அந்த இந்திரியங்கள் வழி செலுத்தாமல் அடக்கவேண்டும். அப்படி அடக்கி பக்குவ நிலையை அடையவேண்டும். அந்த நிலையை அடைந்து மேல்நோக்கி நிற்பவர்க்கு, அது தெரிந்த பிரம்ம வித்து நிலையை அடைந்த ஒருவர் குருவாக தானாக வந்து

அந்த பக்குவமடைந்தவர்க்கு ஞானோபதேச மூலமாக அந்த பேரறிவு என்கிற சகஸ்ராதார நாடியைக் கிளப்ப வழி சொல்லிக் கொடுப்பார்கள். அதன்பிரகாரம் சகஸ்ராதார நாடியைக் கிளப்பவேண்டும். அப்போது ஞானக்கண் உண்டாகி ஒளியைப் பார்த்து அந்த இருக்கும் ஒன்றை அடைந்து நித்யானந்தத்தில் இருக்கலாம். தாயுமானவர் சரிதமே இதற்குச் சான்று.

---

## வேற்றுமையில் ஒற்றுமை.

எல்லாம் ஒரே சமயம் எல்லாம் ஒரேமதம் என்பது திருமூலருடைய வாக்கியம்.

அஞ்ஞானிகளுக்கு இவ்வுலகத்திலிருக்கும் எல்லா வஸ்துக்களும் உயிருள்ள வஸ்துக்கள், உயிரில்லா வஸ்துக்கள் என்று பேதப்பட்டவை. உயிருள்ள வஸ்துக்களிலும் பலவிதமாக பேதப்பட்டிருப்பன வைகளெல்லாம் ஞானக்கண்ணுடன் பார்ப்பவர்களுக்கு ஞானிகளுக்கெல்லாம் ஒன்றே, ஒன்ருகவே தோன்றும்.

உலகத்தில் நடக்கும் மாறுதல்களுக்கெல்லாம் காரணம் ஒன்று உண்டு என்று எல்லாருமே சொல்லுகிருர்கள். அதை ஒரு சிலர் எல்லாம் கடவுளால் உண்டாகிறது என்று சொல்லுகிருர்கள். வேறுசிலர் எல்லாம் இயற்கையாக உண்டாகிறது என்கிருர்கள். இவர்கள் இருவிதமாகச் சொன்னுலும் அது ஒன்றுதான். ஒரு சாரார் ஆஸ்திகர் என்று சொல்லப்படுகிருர்கள். மற்ருெரு சாரார் நாஸ்திகர் என்று அழைக்கப்படுகிருர்கள். இதில்ந் தான் அதிகம் ஆஸ்திகர்—ந் + ஆஸ்திகர்.

ஆஸ்திகர் என்று அழைக்கப்பட்டவர்களில் அநேக வகுப்பார் உண்டு. ஒவ்வொரு வகுப்பாரும் அந்தக் கடவுளை வெவ்வேறு பெயர் கொண்டு அழைக்கிருர்கள். மற்றவர்கள் சொல்லும் கடவுளை ஒப்புக்கொள்வதில்லை. இவர்கள் எல்லாருமே கடவுள் ஒருவர்தான் என்றும் ஒப்புக்கொள்கிருர்கள். பகுத்தறிவோடு பார்த்தால் ஒரே கடவுளாக இருப்பவர் எப்படி ஒவ்வொரு வகுப்பார்க்கும் வெவ்வேறு கடவுளாக இருக்க முடியும். அந்த ஒரே கடவுளாய் இருப்பவரை பல வகுப்பார்களும் தங்கள் தங்கள் அறிவிற்கு ஏற்றபடி வெவ்வேறு பெயர் கொண்டு அழைக்கிருர்களே தவிர கடவுள் என்பவர் ஒவ்வொருவருக்கும் வெவ்வேருய்விடவில்லை. இருக்கும் ஒரு வாழைப்பழம்போன்ற ஒரே வஸ்துவை பல பாஷை தெரிந்த

வர்கள், அந்த அந்த ப்ராஷையில் வாழைப்பழம், அரட்டி பண்டுலு, மௌஸ், பிளாண்டின் புரூட் என்று பல பெயரிட்டு அழைப்பதுபோல் அந்த இருக்கும் ஒரே கடவுளை ஒவ்வொரு வகுப்பாரும் வெவ்வேறு பெயர்கொண்டு அழைக்கிறார்கள்.

இப்போது இருக்கும் மதக்குறிகளை எடுத்துக்கொள்வோம். என்பது சூலம். இது சிவமதத்திலும், காளி, என்கிற சக்திக்கும் உள்ளது. இது கிறிஸ்துவ மதத்தில் உள்ளது. இதற்கு சிலுவையென்று பெயர். என்பதில் பக்கத்தில் மேல் வளைந்திருக்கும் இரு கைகளையும் நேராக நீட்டினால் உண்டாகிறது. ஆகவே இரண்டு குறிகளும் ஒன்றே. என்பது வைணவ மதத்தில் தென்கலையார் என்று சொல்லப்பட்டவர்களுடைய குறி. இதைத் தென் கலை நாமம் என்பது. இது என்பதில் அடியில் நீண்டிருக்கும் காம்பைக் கொஞ்சம் விட்டு வெட்டினால் இது உண்டாகிறது. ஆகவே இந்த இரண்டு குறிகளும் ஒன்றே. அடுத்தபடியாக வைணவர்களில் வடகலை என்று சொல்லப்பட்டவர்களுக்கு குறி . இதை வடகலை நாமம் என்று சொல்வது. இது அந்த சூலம் என்று சொல்லப்பட்ட ல் இருக்கும் அடிக்காம்பை அடியோடு வெட்டிவிட்டால் உண்டாகிறது. ஆகவே இந்த இரண்டு குறிகளும் ஒன்றுதான். என்பது இஸ்லாமியரென்று சொல்லப்பட்டவர்களுடைய இளம்பிறை ஐந்து முனை நட்சத்திரம் என்று சொல்லப்பட்ட குறி. வடகலை நாமத்தில் அடிவளைந்த கோட்டை கொஞ்சம் விரித்து, வளைவு கோட்டை அடியை பெருக்கவைத்து, முனைகளைக் குறிக்கி மேலிருப்பதை ஐந்து புள்ளி நட்சத்திரமாக்கினால் உண்டாகிறது. ஆகையால் இந்த இரண்டு குறிகளும் ஒன்றேதான். ஆனால் இந்த எல்லாக் குறிகளையும் சற்று கவனித்தால் எல்லாம் மூன்றைக் குறிக்கின்றன வென்று நன்கு விளங்கும்.

ஆகையால் எல்லா மதங்களும் மூன்றில் அடக்கம் என்று விளங்கும். இதிலும் எல்லாவற்றிலும் ஒற்றுமையே.

இருக்கும் மதங்கள் எல்லாம் மூன்றில் அடங்குகின்றன. அவைகளை ஒன்று பதி, பசு, பாசம் என்றும், ஒன்று கடவுள், உயிர், உலகம் என்றும், ஒன்று சிவன், சீவன், அஞ்ஞானம் அல்லது மாயை என்றும், ஒன்று பரமாத்மா, சீவாத்மா, மாயா என்றும், ஒன்று கடவுள், திருக்குமாரன், பரிசுத்த ஆவி என்றும், ஒன்று கடவுள், நாம், உலகம் என்றும் இப்படி பலவிதமாக சொல்கின்றன. ஆகவே பதி என்றாலும், கடவுள் என்றாலும், சிவன் என்றாலும், பரமாத்மா என்றாலும், எல்லாம் ஒன்றையே குறிக்கின்றன. அதேபோல் பசு என்றாலும், உயிர் என்றாலும், சீவன் என்றாலும், சீவாத்மா என்றாலும், திருக்குமாரன் என்றாலும் நாம் என்றாலும் ஒன்றையே குறிக்கின்றன. அதேபோல் பாசம் என்றாலும், உலகம் என்றாலும், அஞ்ஞானம் என்றாலும், மாயை என்றாலும், மாயா என்றாலும், பரிசுத்த ஆவி என்றாலும் ஒன்றையே குறிக்கின்றன. எல்லா மதங்களின் உள் பொருளை நோக்கினால் பாசம், உலகம், மாயை, பரிசுத்த ஆவி முதலியன எல்லாம் இன்னவை என்று நாம் நம் அறிவைக்கொண்டு தெரிந்து அவை நிலையில்லாதவை, அழிந்துபோகக்கூடியவை என்று தெரிந்து பசு, உயிர், சீவன், சீவாத்மா, திருக்குமாரன், நாம் என்பது என்னவென்று உணர்ந்து அதற்குமேல் கடவுள், பதி, சிவன், பரமாத்மா என்பது என்னவென்று அறிந்து, அந்த சிவன், பரமாத்மா, பதி, கடவுள் உலகம், கடவுளை அடையவேண்டும் என்று சொல்லுகின்றன. எல்லா மதங்களின் நோக்கமும் சொல்லுபவைகளின் பொருள்களும் ஒன்றே. நாம் யார், ஏன் இங்கு வந்தோம், நம்மின் முடிவு என்னவென்று நோக்குவதே மதங்களின் முக்கியமான வேலை. ஆகவே இவ்விஷயத்திலும் எல்லா மதங்களிலும் ஒற்றுமையே.

பண்டிகை கொண்டாடுவதில் கிறிஸ்துவர்கள் கொண்டாடும் மைக்கல்மஸ் ரிட்ரீட் (Michalmas Retreat) ஏன்பதின் நோக்கமும் இஸ்லாமியர்கள் ரம்சான் நோன்பு கொண்டாடுவதின் நோக்கமும், சக்தியை வணங்குபவர்கள் நவராத்திரி கொலுவு என்று கொண்டாடுவதின் நோக்கமும், சைவமதத்தார்கள் கந்தர்சஷ்டி என்கிற சூரசம்மாரம் என்று கொண்டாடுவதின் நோக்கமும், எல்லாம் ஒன்றே. கடப்பை ஜில்லாவில் அந்த சக்தியை கொண்டாடுகிறவர்களில் ஒரு ஊரார் சக்தியாக விக்கிரகத்தை எடுத்து

வரும் போது ஒருவர், காளிவேஷம் போட்டுக்கொண்டு, எருமை மாட்டின் பேரில் வந்து, ஒரு இடத்தில் இருக்கும் மூன்று இராட்சத உருவங்களாகிய பொம்மைகளை அழிக்கிறான். வங்காள தேசத்தில் அந்த பண்டிகையின்போது இருவர்கள் இராமர் மாதிரியும் இலக்குமணன் மாதிரியும் வேஷம் போட்டுக்கொண்டு போய் மூன்று பூதங்கள் மாதிரி மூங்கிலாலும்,காகிதத்தாலும்செய்துவைக்கப்பட்டிருப்பதைக் கொளுத்திவிடுகிறார்கள். இங்கு இராமர் என்பது ஞானம், இலக்குமணன் என்பது யோகம். யோகத்தில், சக்தியைக் கொடுக்கும் யோகம் என்றும் ஞானம் கொடுக்கும் யோகம் என்றும் இரண்டுண்டு. இங்கு சொல்லப்படுவது ஞானம் கொடுக்கும் யோகம். யோகம் செய்து ஞானத்தை அடைய வேண்டும். ஆகவே இராமன் என்பதும், இலக்குமணன் என்பதும்,எப்போதும் சேர்ந்தே இருக்கும், தனித்து இராது. இது விஷயத்திலும் எல்லாம் ஒற்றுமையே.

நம் பிராணன் போன பிறகு என்ன நடக்கிறது என்பதிலும் மதங்களிலெல்லாம் ஒற்றுமையே. கிறிஸ்துவர்கள் நாம் கடவுள் முன்போய் நாம் செய்தவற்றிற்கெல்லாம் பதில் சொல்லவேண்டுமென்கிறார்கள். இஸ்லாமியரும் அப்படியே பதில் சொல்லவேண்டுமென்று சொன்னாலும், ஒன்று அதிகமாகச் சொல்லுகிறார்கள். அப்படிச்சொல்லும்போது பாரபட்சமற்ற அன்புள்ள கடவுள், அவரவர்கள் செய்கைக்குத் தக்கபடி தீர்ப்பு தண்டனை கொடுக்கிறார். அப்படி கொடுப்பதிலும் தப்பு அதிகமாக இருந்தால் தண்டனை அதிகமாக இருக்கும். அவ்வளவும் அவன் தாங்க முடியாது என்று தோன்றினால் அன்பாயுள்ள கடவுள் தாங்கக்கூடிய அளவிற்குத்தான் தண்டனை கொடுக்கிறார் என்கிறார்கள். சைவ வைணவர்களோவெனில் இதையேதான் இன்னும் திருத்தமாகவும் விரிவாகவும் சொல்லுகிறார்கள், அதாவது அந்த தண்டனை யென்னவென்றால் தப்பிற்கும் நன்மைக்கும் ஏற்றபடி அடுத்த ஜென்மத்தில் துக்கமும், சுகமும் அநுபவிக்கும்படி செய்கிறார். தப்பு அதிகமாக இருந்து தண்டனை அதிகமாக இருந்தால், ஒரேஜென்மத்தில் அனுபவிக்கமுடியாவிட்டால், அநுபவிக்கக்கூடியதை பிராரப்த கர்மம் என்று சொல்லி பாக்கி இருப்பதை சஞ்சித கர்மம் என்கிறார்கள். கிறிஸ்துவர்களும் இந்த மறுஜன்மம் என்பதை ஒருவிதமாக ஒப்புக்கொள்கிறார்கள். அவர்கள் வேதபுஸ்தகத்தில் உள்ள ஒருகதை அதைருசுப்படுத்துகிறது. அதாவது கடவுள் ஒரே விதமான பொருளை மூன்றுபெயர்களிடம் கொடுத்து பிறகு

வந்து அப்படியே வைத்திருந்தவனிடமிருந்தும் கொஞ்சம் விருத்திசெய்தவனிடமிருந்தும் அப்பொருள்களை வாங்கி மற்றொருவனிடம் கொடுத்தார் என்றும் நன்றாக விருத்தி செய்தவனைமட்டும் தன்னுடன் அழைத்துச்சென்றுவிட்டார் என்னும் கதையே. இதில் கொடுத்திருந்த பொருள் அறிவு. சரியாக விருத்தியாகாத அறிவைப்பிடுங்கி கொடுக்கப்பட்ட வேறுமனிதன் என்பது மறுபிறப்பு. ஆகவே இவைகளிலும் ஒற்றுமையே.

---

## கோயில்.

கோயில் என்பது சாதாரணமாக எல்லா மதத்தாரும் கடவுளை வணங்கும் இடமாக இருந்தாலும் தென்னாட்டில், நம் தமிழ்நாட்டில், சைவ வைணவர், கோயில்கள் ஒரு விசேஷ அமைப்பாயுள்ளது. முதன்மையாக சைவர்களுக்கு சிதம்பரம் கோயிலும், வைணவருக்கு திருவரங்கம் கோயிலும் இருக்கின்றன. கிறிஸ்துவ மதம் சுமார் 2000 வருஷங்களுக்கு முன் உண்டானது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அதேபோல் நபிமுகம்மதுவால் ஸ்தாபிக்கப்பட்ட இஸ்லாமியமும் அதற்கப்புறம் உண்டானது என்றும் அதேபோல் புத்தரால் ஏற்படுத்தப்பட்ட புத்தமதம், இராமானுசரால் சொல்லப்பட்ட வைணவமதம் முதலியமற்றெல்லாமதங்களையும் ஏற்படுத்தப்பட்டவர்கள் பெயரும் காலமும் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் தமிழர் மதமாகிய சைவமதம் ஏற்படுத்தியவர் பெயரும் காலமும் வரையறுக்க முடியாமல் இருக்கின்றன.

இப்போது நாமிருப்பது வடகுமரி நாடு. இதற்கு தெற்கில் இதன் தொடர்ச்சியாகத் தென்குமரி நாடு என்று ஒன்று இருந்து கடல் கொண்டுபோய்விட்டது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. அப்போது விந்திய மலைக்கு வடக்கே உள்ள பாகம், காசி, இமயமலை முதலிய எல்லாம் கடலாக இருந்தது அந்தக் கடல் கொண்டுபோன தென்குமரி நாட்டில் குமரிமலையென் ஒன்றும், தென்குமரி ஆறு என ஒன்றும் இருந்திருக்கின்றன. அவ்வாற்றங்கரை ஓரமாக வடமதுரை என்கிற ஊர் இருந்திருக்கிறது. அந்த ஊரில் தான் தமிழில் தலைசிறந்த தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற சங்கங்கள் இருந்திருக்கின்றன. அப்படி தலைச்சங்கம் இருந்தகாலம் சுமார் 12000 வருஷங்களுக்கு முன் என்று ஏற்படுகிறது. அக்காலத்தில் தென்குமரி நாட்டில் இருந்தவர்கள்தான் நாகரீகம், தமிழ்வித்தை, வியாபாரம்,

மதம் முதலிய எல்லாவற்றிலும் தலைசிறந்து விளங்கினார்கள் என்றும் அப்போது மேல்நாடு முதலிய எல்லா நாடுகளும் அஞ்ஞான இருளில், அநாகரீகம் முதலியவைகளில் மூழ்கி இருந்தார்கள் என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம் தென்குமரி கடல்கொண்டுபோனபோது, அதிலிருந்த சிலர் எகிப்து தேசம்போய் குடியேறி அப்புறம் அப்பாகத்தில் தங்கள் நாகரீகம், மதம், முதலியவற்றைக் கொஞ்சம் பரப்பினார்கள் என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அப்போது அக்குமரி நாட்டிலிருந்தவர்களுக்கு மதம் சைவமதமாயிருந்தும் அவர்களுக்கு கோயில் என்பது கிடையாது. பிறகு ஏற்பட்டதுதான் இமயமலை, கங்கை, காசி, அயோத்தி, துவாரகை முதலியன. அப்புறம் அவைகளை ஒட்டி மதத்தின் உண்மைகளை வைத்து எழுதப்பட்டவைதான் இராமாயணம், பாரதம், பாகவதம் என்ற கதைகள்.

ஆனால் இந்தக் கோயில்கள் எப்போது, யாரால், எதற்காக ஏற்பட்டனவென்றும் சற்று கவனிப்போம் கோயில்களின் காலம் ஆராய்ச்சியாளர்களால் சுமார் 1500 வருஷங்களுக்குள் என்று ஏற்படுகிறது. அப்போது இந்நாட்டை ஆண்டவர்கள் வேந்தர்கள். அவர்கள் அரசாங்கத்திலிருந்தே அக் கோயில்களைக் கட்டினார்கள் என்பது தெரிகிறது. சாதாரணமாக வித்வான்களை ஆதரித்து அந்த வித்தையை விருத்தி செய்ய செய்வது அக்காலத்தில் அரசரின் கடமை. அதை அனுசரித்து மதமும் அதன் தத்துவங்களையும் தெரிந்த வித்வானை ஆதரிக்கும் முறையிலும் அவைகளைப் படியாதவர்கள் தெரிந்துகொள்ளும்படியும் ஒரு கட்டிட உருவமாக அமைக்க ஏற்பாடு செய்தார்கள். அதைக் கல்தச்சர்களைக் கொண்டு தன் திறமையை சாதாரண கட்டிடங்களில் காட்ட முடியாததால் கோயில் அமைப்பில் அவன் திறமையைக் காட்டச் செய்தார்கள். கடைசியாக நல்ல கொத்தனைக் கொண்டு அவன் அறிவை உபயோகப்படுத்தி கோயிலைச் செவ்வனே அமைக்கச் செய்தார்கள். அப்படிச் செய்து அம் மூன்று வித்வான்களையும் ஆதரித்தார்கள். இப்போது அக் கோயில்களில் நம் மதத்தின் கொள்கைகளெல்லாம் அமையப் பெற்றிருக்கின்றன.

அக்கோயில்கள், கடவுள் என்பவர் எங்கிருக்கின்றார், எப்பொழுது எப்படி அவரைக் காணலாம் என்று நமக்கு, தெரியாதவர்களுக்கு உணர்த்த இருக்கின்றன. வெளிப்படையாகப் பார்க்கப்போனால், கோயில்களெல்லாம் ஐந்து பிரகாரம் உள்ளதாகவும் அவைகள் மத்தியில் கர்ப்பக்கிரகம் என்று

ஒரு கட்டிடமும், அதில் கடவுளின் உருவமும் இருக்கின்றன. இவைகளை அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோன் மயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்று நம் சமயத்தில், நம் சரீரஉடல் அமைந்திருக்கின்றன வென்று சொல்லப்பட்டவைகள் ஐந்தும், ஐந்து பிரகாரங் களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த கோசங்கள் மத்தியில் கர்ப்பக்கிருகம் இருக்கிறது. கடவுளின் உருவம் அந்த கர்ப்பக்கிருகத்தின் மத்தியில் இருக்கிறது. அதுபோல் கடவுள் நம் இருதயத்தின் மத்தியில்தான் இருக்கிறார் என்று கட்டிடம் உணர்த்துகிறது. அந்தக் கல் உருவம் கடவுள் அல்ல, கடவுள் மனிதனைப் படைக்கிறார் என்று எல்லா ஆஸ்திகர்களும் ஒப்புக்கொள்ளுவார்கள். மனிதன் கடவுளைப் படைக்கிறான் என்று யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். முன் கல்லாயிருந்த அந்த உருவம் எப்போது யாரால் கடவுள் ஆயிற்று என்று சற்று யோசித்துப் பார்க்கவும்.

இரண்டாவதாக நன்றாக கட்டப்பட்ட கோயில்களை கவனித்தால் வெளியில் முதலில் ஒரு குளமும், அப்புறம் 5, 7, அல்லது 9 வாயில்களை உடைய கோபுரமும், அப்புறம் பலி பீடம் என்னும் இடமும், அப்புறம் துவஜஸ்தம்பம் என்று சொல்லப்படும் தூணும், அப்புறம் நந்தி அல்லது கருடனும், அப்புறம் சபாமண்டபமும், அப்புறம் அர்த்தமண்டபமும், அப்புறம் கர்ப்ப கிரகம் என்னும் அறையும், அதற்குள் கட வுளின் உருவமும், அந்த இடத்தில் ஒரு விளக்கும் இருக்கும். இந்த விளக்குதான் கடவுளாகிய ஜோதியை, ஒளியைக் குறிக் கிறது. அதைக்காணவேண்டியதே நமது கடமை, கடைசி முடிவு. சாதாரணமாக ஒருவன் எல்லாவற்றிற்கும் வெளியே நின்றால் அந்தவிளக்கும் அதன் வெளிச்சமும் தெரியாது. அதாவது சுத்தம் அதாவது மனச்சுத்தம் இல்லாத மிலேச்ச னாகிய, அஞ்ஞானமுடைய ஒருவருக்கு அந்தக் கடவுள் கொஞ்சமும் புலப்படாது. ஆனால் அவன் அந்தக்கோயில் முன் இருக்கும் குளத்தில் சுத்தம் செய்துகொண்டு, அதாவது தன்மனதைச் சுத்தம்செய்துகொண்டு அந்தக்கோபுரவாயிலைத் தாண்டும் மாதிரி ஐந்து இந்திரியங்கள், ஏழுவகைத்தோற்றம், நவத்துவாரங்களை அடக்கல் செய்தால், அந்த ஒளி மிகச் சொற்பமாக தோன்றும். பிறகு பலிபீடத்தைத்தாண்டும் மாதிரி, நமது ஆணவத்தை பலி கொடுத்து அடக்கினால், அந்த ஒளி கொஞ்சம் அதிகமாகத்தோன்றும். துவஜ ஸ்தம்பத்தைத் தாண்டும்மாதிரி, வைராக்கியத்துடனிருந்து, அந்த ஸ்தம்பத்தின்மேல் ஆறு சதுர துவாரம்மாதிரி

பலகையால் செய்யப்பட்டிருப்பது போல் நமது உடலில் இருக்கும் ஆறு ஆதாரங்களேயும் அடக்கினல் அந்த ஒளி இன்னும் அதிகமாய்த் தோன்றும். அப்புறம் நந்தி அல்லது கருடன் இருக்கும் இடம் போவதுபோல், அவைகள் சதா கடவுளேயே, பார்த்துக்கொண்டிருப்பதுபோல், சதாகாலமும் கடவுளேயே நினைத்துக்கொண்டு அல்லது தியானம் செய்து கொண்டு நின்றால், அந்த ஒளி இன்னும் அதிகமாகத் தோன்றும். பிறகு சபாமண்டபம் போவதுபோல் அந்தநிலே அதிகரித்தால் அந்த ஒளி இன்னும் அதிகமாகத் தோன்றும். அப்புறம் அர்த்த மண்டபம் போவதுபோல் அந்த நிலேயை இன்னும் அதிகரிக்கச்செய்தால் ஒளி இன்னும் அதிகமாகத் தோன்றும். பிறகு கர்ப்பகிருகத்திற்குள் போவதுபோல் அந்தநிலே இன்னும் அதிகப்பட்டால் அந்த ஒளி பூரணமாய்த் தோன்றும். இதில் நந்தி அல்லது கருடன் இருப்பதுதான் ஞானிகளின் பிரம்ம வித்துநிலே. சபாமண்டபம் போவது தான் பிரம்மவரன் நிலே. அர்த்தமண்டபம் போவதுதான் பிரம்மவரியான் நிலே. கர்ப்பக்கிரகம் போவதுதான் பிரம்ம வரிட்டன் நிலே. ஆகவே இந்தக் கோயில்களின் அமைப்பு நாம் கடவுள் அல்லது இயற்கை என்பதைச் சரியாய் அறிய, நாம் என்னென்ன செய்யவேண்டும் எப்படி நடக்கவேண்டு மென்று உணர்த்துகிறது. இதேபோல் அந்தக் கோயில்களில் நடக்கும் விழாக்கள், பத்துநாள் விழா, தேர்விழா, கருட சேவை அல்லது இரிஷபவாகன சேவை சாதாரணமாகப் பறக்கும் கருடனே சேவைசெய்தல் முதலிய எல்லாமுமே கடவுள் என்பது நம்மிடத்தில் இருக்கிறதென்பதை உணர்த்துகிறது.

மூன்றாவதாக நம்மதத்தில் 36 தத்துவங்கள் இருக்கின்றன. அதாவது சுத்தமாயையில் தோன்றுவது 5, அசுத்த மாயையில் தோன்றுவது 7, பெரும்பூதங்கள் 24 உள்ளனவென்றும், அல்லது 16 தத்துவங்கள் அதாவது சுத்த மாயையில் தோன்றுவது 5, அசுத்த மாயையில் தோன்றுவது 7, ஞான இந்திரியங்கள், கன்ம இந்திரியங்கள், வாயுக்கள், அந்தக்கரணங்கள் உள்ளனவென்றும், தெரிந்த விஷயம். அத்துடன் நம் சரீரத்தில் 18 புராணங்கள் என்ற 18 நாடிகள், அப்புறம் 64 கலேக்கியானம் என்கிற 64 கிளேநாடிகள், 6 சாஸ்திரங்கள் என்கிற 6 ஆதாரங்கள், 4 வேதங்கள் என்கிற 4 முக்கிய நாடிகளும், கடைசியாக கைலாசம் அல்லது வைகுந்தம் அல்லது கமலாலயம் அல்லது சகஸ்ராதார நாடி என்று ஒன்றும் இருக்கின்றனவென்று, அந்தக் கோயில்களின் அமைப்பு காட்டுகிறது. எல்லா பெரிய கோயில்களுக்கும் வெளியே

முதலில் 4 கால் மண்டபம் இருக்கிறது. அதற்கப்புறம்தான் கோபுறங்களும் பஞ்சப்பிரகாரங்களுமுள்ள கோயில்கள் இருக்கின்றன. ஆகவே கோயில்களுக்குப் போகவேண்டுமானல் முதலில் 4 கால் மண்டபம் தாண்டவேண்டும். அதாவது கடவுளைகாணுமுன் இந்த 4 கால் மண்டபம் குறிக்கும் சித்தம், மனம், புத்தி, அகங்காரம் என்ற 4 அந்தக்கரணங்களையும் அடக்கவேண்டுமென்று உணர்த்துகிறது. அதற்கப்புறம் இருக்கும் முதல்கோபுறம் நுழைவதாவது நமக்கு இருக்கும் ஆறு ஆதாரங்களாகிய முக்கிய நாடிகளின் மூலாதார நாடியை (Sacral plexus) அடக்கித்தாண்ட வேண்டுமென்று குறிக்கிறது. பிறகு இருக்கும் 64 கால் மண்டபத்தைத் தாண்டுவது, பிறகு நமது உடலில் இருக்கும் 64 கலைகியானம் என்ற 64 கிளை நாடிகளை (Vesical plexus) தாண்டவேண்டும், அடக்கவேண்டுமென்று குறிக்கிறது. இது மூத்திரப்பையை கண்டிக்கிறது. அதற்கடுத்து இருக்கும் கோபுறவாயிலைத் தாண்டுவது, ஸ்வாதிஷ்டானம் (Prostate) என்கிற இரண்டாவது நாடியைத் தாண்டவேண்டும், அடக்கவேண்டும் என்று குறிக்கிறது. அதற்கடுத்த கோபுரவாசல் மூன்ருவது நாடியாகியமணிபூரகம் (Epigastric) என்ற நாடியைக் குறிக்கிறது. இதை அடக்கித் தாண்டவேண்டும் (கடவுள் இருக்கும் இடத்திற்குப் போகவேண்டுமானல்) அப்புறம் இருப்பது கர்ப்பகிருகத்திற்கு போகும் கோபுரவாசல்படி. இது அனுகதம் என்கிற நான்காவது நாடியைக் காட்டுகிறது. இது இரண்டு பிரிவாக உள்ளது. ஒன்று இருதயம். மற்ருென்று அதன் பக்கத்தில் இருக்கும் ⊓ போன்றது, Heart and solar plexus) இதில் இருதயம் என்னும் கர்ப்பகிரகத்தில்தான் கடவுள் என்னும் உருவம் இருக்கிறது. ஆகவே கடவுள் நம் இருதயத்திலேயே மனத்திலேயே இருக்கிருர் என்று உணர்த்துகிறது. ⊓ போல் இருக்கும் (Solar plexus) என்பது நமது உடலில் இருக்கும் வயிறு, நுரையீரல், பிச்சு, தாமரைக்காய் (Pancreas), குடல்களை கண்டிக்கிறது. அவரைக்—கடவுளைக் காணவேண்டுமானல் அவரை வெளிப்படுத்திப் பார்க்கவேண்டும். மார்கழி மாதத்தில் ஏகாதசி திதியில் திரு அரங்கத்தில் பெருமாளை வெளியே இருக்கும் 1000கால் மண்டபத்திற்கு கொண்டுவந்து எல்லாரையும் பார்க்கச் செய்கிருர்கள். அதேபோல் சிதம்பரத்தில் அதே மாதத்தில் திருவர்திரை என்னும் நட்சத்திரத்தில் நடராச உருவத்தை வெளியே இருக்கும் 1008கால் மண்டபத்தில் கொண்டுபோய் எல்லாரையும் பார்க்கச் செய்கிருர்கள். இது நாம் ஆறு

ஆதாரங்களையும் நாடிகளையும் அடக்கி சகஸ்ராதார நாடிக்கு ஏற்றினால் கடவுளை, அந்த ஒன்றைக் காணலாம் என்று உணர்த்துகிறது. அப்படி அந்த உருவத்தை எடுத்து வரும் போது வழியில் அந்தப் பிரகாரத்திற்கு வெளியில் இருக்கும் இடத்தை தாண்டிப் போகிறது. திருவரங்கத்தில் இது முதல் பிரகாரத்தில் இருக்கும் புதிதாசக் கட்டப்பட்ட வாசல்படியைக் குறிக்கிறது. அது விசுத்தி என்ற நாடியைக் குறிக்கிறது. இது இரண்டுபாகமாயுள்ளது. ஒன்று மேல் ஒத்தையாக உள்ளது. மற்றது அதன் கீழ் இரட்டையாக உள்ளது. இது சிதம்பரத்தில் சிவகாமி என்றதையும், தில்லைநாயகர், தில்லைநாயகி, என்பதையும் குறிக்கிறது. ஆங்கிலத்தில் இதை Laryngyal, Pharangial என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவை கழுத்திலிருக்கின்றன. அடுத்து இருப்பது ஆறுவது நாடியாகிய ஆஞ்ஞை என்பது. இது தலை மூளையில் அடிப்பாகத்திலிருப்பது. இது இரண்டு பிரிவாயுள்ளது. Pituitory gland என்னும் Cavernous plexus என்றும் சொல்வது. முதலாவது நமக்கு நீரை, அமிர்தத்தை சுரக்கிறது என்பது. மற்றொன்று அறிவைக் கொடுப்பது என்பது. திருவரங்கத்தில் வைகுண்டவாசல் என்பது இரண்டாவது அறிவைக் கொடுக்கும் Cavernous plexus என்பது. அதற்குப் பக்கத்திலிருக்கும் வாவி, கிணறு என்பது முதலாவது அமிர்தம் நீர் சுரக்கும் Pituitory gland என்பது. சிதம்பரத்தில் வெளியம்பலம், 108 லிங்கங்கள் உள்ளகோயில் என்பது. இரண்டாவது, அதற்குப் பக்கத்தில் இருக்கும் வாவி சிறுகுளம் முதலாவது. கடைசியாக இருக்கும் 1000 அல்லது 1008 கால் மண்டபம் சகஸ்ராதார நாடியாகிய Pinial Bodyயைக் குறிக்கிறது. சகஸ்ரார நாடிக்கு நம் நாடியை ஏற்றுவது நமது மதத்தில் சொல்லி இருப்பது. அப்படிச் செய்தால்தான் ஞானம் உண்டாகிற ஞானக்கண் திறந்து, கடவுள் அல்லது சோதி, அல்லது இருக்கும் ஒன்று இன்னது என்று விளங்கும், தோன்றும். இதைக் குறிக்கவே மார்கழி மாதத்தில் திருவாதிரை நட்சத்திரம் என்னும் தினத்தில் சிதம்பரத்திலும், ஏகாதசி என்ற தினத்தில் திருவரங்கத்திலும், நடராசர், அரங்கநாதர் என்ற கடவுளரின் உருவத்தை அந்த 1000 கால் மணடபத்தில் கொண்டுபோய் வைத்து ஜனங்கள் அந்த உருவத்தை போய் பார்க்கிறார்கள், தரிசிக்கிறார்கள். அந்த உருவங்களின் தத்துவங்கள், பொருள்கள், தனித்தனியாக முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. 1000 தலையுடைய ஆதிசேஷனாகிய பாம்பின்மேல் விஷ்ணு இருக்கிறார் என்று சொல்

வதும் இந்த சகஸ்ரார நாடிக்கு ஏற்றினல் விஷ்ணு என்று சொல்லப்பட்ட பொருளைப் பார்க்கலாம், என்பதே.

நான்காவதாக கோயில்களில் கர்ப்ப கிருகத்தின் மேலிருக்கும் விமானம் என்கிற கோபுரம் சுமார் 1008 இதழ்களையுடைய ஒரு தாமரைப்பூ கவிழ்ந்தால்போல் இருக்கிறது. அதன் காம்பும் ஒரு சிறு முனையில் போய் முடிகிறது. இது எதைக் குறிக்கிறதென்ருல் சுமார் 1008 தாமரைப்பூவின் இதழ்களும் ஒருகாம்பில் போய் முடிகிறமாதிரி உலகத்தில் இருக்கும் எல்லா வஸ்துக்களும் கடவுளாகிய ஒன்றில் முடிகிறது. கடவுள் எல்லா வஸ்துக்களிலும் இயங்கி நிற்கிருர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் காம்பும் கடைசியாக ஒரு முனையில் முடிகிறமாதிரி அந்தக்கடவுளும் கடைசியில் ஒன்றுமில்லாத இரகசியம் என்று சொல்லப்படுவதில் போய் முடிகிறது என்பதைக்குறிக்கவே.

நமது சரீரத்தில் இருக்கும் இன்னும் மற்ற நாடிகளை அந்த அந்த கோயில்களின் மற்ற பாகங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்படியே இருக்கும் மற்றக்கோயில்கள் அந்தக் கோயில் அளவிற்கு ஏற்றபடி சில தத்துவங்களை வைத்து அமைக்கப்பட்டிருக்கின்றன.

நமது முக்கிய கோயில்களில் முதலில், நான்கு கோபுர வாசல் படியாக அமைக்கப்பட்டிருக்கிறது. அதாவது நமது மதத்தில் கடவுள் என்னும் பொருளைக்காண நான்கு வழிகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு வழிகளைக் குறிக்கின்றன.

நம் நாட்டில் சிவன்கோயில்களில் முக்கியம் 108 கோயில்கள் என்றும், இன்னும் சிலவற்றைச் சேர்த்து 1008 கோயில்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. வைணவ கோயில்களில் 108 திருப்பதி என்றும் 1008 திருப்பதிஎன்றும் வைத்திருக்கிருர்கள். இதில் நம் சரீரத்தில் இருக்கும் 72000 நாடிகளில் முக்கியம் 1008 என்றும் அதிலும் முக்கியம் 108 என்றும் உள்ளதைக் குறிக்கிறது.

சிதம்பரம் கர்ப்பகிரகத்தின் விசேஷ அமைப்பு என்னவென்ருல் அதற்கு 9 படிகள் உண்டு. அவை, நம், நவதுவாரங்களை அடக்கவேண்டுமென்றும், அப்புறம் 18 தூண்கள் உள்ள மண்டபம் உண்டு, அவை நம் 18 தத்துவங்களையும் முதலில் நீக்கவேண்டுமென்றும், அப்புறம் கடவுள் இருக்கும் அறை நம் உடலைக் குறிக்கிறதென்றும், அந்த அறைக்கு 96 பலகணிகள்

உண்டு, இவை நமது 96 தத்துவங்களைக் குறிக்கின்றன வென்றும், அந்த அறைக்கு 64 கைமரங்கள் உண்டு, இவை 64 கிளை நாடிகளை குறிக்கின்றனவென்றும், மேல் கூறைக்கு 21600 ஓடுகள் உண்டு, இவை நாம் சாதாரணமாக விடும் மூச்சு தினம் 21600 என்றும், அந்த ஓட்டிற்கு அடிக்கப் பட்டிருக்கும் ஆணிகள் 72000, இவை நம் சரீரத்தில் இருக் கும் 72000 நாடிகளை குறிக்கின்றன. இவைகளுக்கு மேல் இருக்கும் 9 கலசங்களும் நமது 9 சக்திகளைக் குறிக்கின்றன. மேற்சொன்ன அறைக்குள் இருக்கும் முதல் 6 சாதாரண தூண்கள் நாம் முன் தாண்டவேண்டிய ஆறு ஆதார நாடி களைக் குறிக்கின்றன.

அப்புறம் நாம் தாண்ட இருக்கும் நான்கு தங்கத் தூண் களும் நம் நான்கு வேதங்கள் என்று சொல்லப்பட்ட முக்கிய நாடிகளைக் குறிக்கின்றன. பிறகு நாம் காணும் நடராசர் உருவம் நாம் காணும் சோதியை, ஒளியை குறிக்கின்றது. அப்புறம் சிதம்பர இரகசியம் என்று சுவற்றில் இருக்கும் வில்வ இலையான்து மூன்று இலைகள் ஒன்று சேர்ந்திருப்பதுபோல் நம் ஞேயம், ஞாதுரு, ஞானம் என்னும் காண்பான், காணப் படும் பொருள், காணும் காட்சி ஆகிய மூன்றும் ஒன்றுபடும். அப்போது சிதம்பர இரகசியம் என்ற வெளி தோன்றும்.

திருவரங்கம் கோயில்— இதுவும் சிதம்பரம் கோயி லும் தெற்குபார்த்த சந்நிதிகள். இந்தக்கோயில் நான்முக வாசல் கோபுரம், மதில்சுவர் உள்பட உள்ள கட்டிடம் மேல் தொடைக்குமேல் உள்ள, நமது சரீரத்தைக் குறிக்கிறது. இதில்தான் நமது முக்கிய நாடிகள் இருக்கும் இடம். நமது உடலில் மொத்தம் 7200 நாடிகள் இருக்கின்றன. அவைகளில் 1008 முக்கியமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளில் பின்னும் 108 முக்கியமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. இவை களை அமைத்துதான் அந்தக் கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. முதலில் இருக்கும் மொட்டை மண்டபம் என்பது நமது கால்பாதங்களைக் குறிக்கின்றது. அந்த 108-ல் முக்கிய மானவைகளைப்பற்றி இப்போது பேசுவோம். முதலில் இருக்கும் நான்முகக் கோபுரம் ஆறு ஆதாரங்களில் முதலாவதாக மூலாதாரத்தைக் குறிக்கின்றது. அதற்கு அடுத்து இருக்கும் அரங்கவிலாச மண்டபம் நமது குடல்கள் மத்தியிலிருக்கும் 64 கிளைநாடியாகிய Visical plexus என்று சொல்லப்பட்டதைக் குறிக்கிறது. அடுத்த பிரகாரத்தில் மேற்கு பக்கமும், வடமேற்காகவும் இருக்கும் பிரகாரத்திலும்மாக இருக்கும் நான்கு 4 கால் மண்ட

பங்கள் நமது அதிமுக்கிய நாடிகளாகிய நமது முதுகு எலும்பு, மூளையில், இடுப்பு, நடுமுதுகு, கழுத்து, பிடற்பாகங் களிலிருக்கும் நாடிகளைக் குறிக்கின்றன. அடுத்து இருக்கும் கார்த்திகை கோபுரம், ஸ்வாதிஷ்டானம் என்கிற prostate என்னும் நாடியைக் குறிக்கிறது. அடுத்து இருக்கும் ஆரிய பட்டான் வாசல் என்பது மணிபூரகம் என்கிற Epigastric என்பதைக் குறிக்கிறது. அடுத்து இருக்கும் மூலஸ்தான வாசல்படி, அனுகதம் என்னும் நாடியைக் குறிக்கிறது. இதில் இரண்டுபாகம் உண்டு. ஒன்று Heart. இதுதான் கர்ப்பகிரகம், மூலவிக்கிரகம், உருவம் இருக்கும் இடம். மற் றொன்று Solar plexus என்பது. இத் அதைச் சுற்றி மண்ட பங்களாக இருக்கும் முதல் பிரகாரம். அடுத்தாற்போல் உள்ள ஆதாரம் என்கிற நாடி, விசுத்தி என்கிற Laryngyal Pharangial என்பது. இது மேல்சொன்ன உள் பிரகாரத்தில் வடபாகத்தில் இருக்கும் வாசல்படி வடபாகத்தைக் குறிக் கிறது. இதற்கு நேரே மேலே இரண்டாம் பிரகாரத்தில் வடபாகத்தில் இருக்கும் வைகுண்ட்வாசல் என்பதும் அதற்கு வடகிழக்கில் இருக்கும் வாவி கிணறும், ஆக்ஞை என்னும் ஆறுவது ஆதாரத்தைக் குறிக்கிறது. இதுவும் இரண்டு பாகம் உள்ளது. வாசல் என்பது Cavernous plexus என்னும் அறி வைக் கொடுக்கும் பாகம். இது நமது மூளையில் அடிப்பாகத் தில் பின்பாகத்தில் உள்ளது. மற்றொன்று வாவி என்னும் Pituitory gland என்பது. இது மேற்சொன்ன மூளை அடி பாகத்தில் முன் பாகத்தில் இருப்பது. இது நமது உடலுக்கு நீரை, அமிர்தத்தைச் சுரக்கிறது. அதற்குமேல் மூன்றும் பிரகாரத்தில் வடபாகமாக இருக்கும் மூன்றுவாசல் ஐந்து குழி, என்பது நமது தலை மூளை நேர் பின்னுலிருக்கும் பாகம். அவ்விடத்தில் மூளை மூன்று Cerebrum, Medulla, Carebellum என்கிற பாகங்கள் சேர்ந்திருக்கிறது. இதற்குத்தான் மூன்று வாசல் என்று வந்தது. அது மூலாதாரம், அதற்குமேல் முதுகு எலும்பு மூளையில் உள்ள நான்கு நாடிகளை நான்கு வாசல் என்கிறது, அடுத்த பிரகாரத்தில் உள்ள நான்கு 4 கால் மண்டபங்களைத் தாண்டி உள்ளது. ஆகவே அதற்கு ஐந்து குழி என்கிறது. முக்கோணத்தின் மேல் நான்கு சதுரம் காண வேண்டுமென்று சிவவாக்கியர் சொல்லியிருக்கிறார். மூலா தாரம் என்பது முக்கோணமாக உள்ளது. இந்த நான்கு 4 கால் மண்டபங்களும் அந்த நான்கு சதுரத்தைக் குறிக்கின் றன. இந்த மூன்று வாசல் ஐந்துகுழி தாண்டி உள்ள பிர காரத்தில் கொஞ்சம் கிழக்கே தள்ளி இருப்பது சகஸ்ராதார

நாடி என்ற 1000 கால் மண்டபம். இது நமது மூளை உச்சியில் இருப்பது.

உள்ளிருக்கும் கர்ப்பகிருகம், சிதம்பரம் கர்ப்பகிரகம் மாதிரி விசேஷ அமைப்புள்ளது. இது நமது இருதயத்தைக் குறிக்கிறது. இருதயத்திற்கு இருபுறமும் இரத்தக்குழாய்கள் இருக்கும் மாதிரி இதற்கு இருபுறமும் படிகள் எவ்வேழு இருக்கின்றன. அதாவது முதலில் நாம், நம் ஏழுவகைத் தோற்றங்களையும் தாண்டவேண்டும். மேலேறினால் ஒரு புறம் 18 தூண்கள் உள்ள மண்டபம். இவை நம் முதல் 18 தத்துவங்களையும் குறிக்கின்றன. அவை நீக்கி உள்ளே போகிறோம். அங்கே உள்ள சாதாரண 8 தூண்களும் தகடு போட்டு 4 தூண்களும் உள்ளன. இந்த அறை சாதாரண தூண்கள் முக்கிய நாடிகளாகிய Sacral plexus, Prostate, Epigastric Heart, Solar plexus, Laryngyal, Cavernous plexus and Pitutory gland என்பவைகளைக் குறிக்கின்றன. தகடுபோட்ட 4 தூண்கள் நமது முதுகு எலும்பு மூளையில் இருக்கும் 4 அதி முக்கிய நாடிகளைக் குறிக்கின்றன. மேலிருக்கும் விமானத்தில் 8 கலசங்கள் இருக்கின்றன. இவை நமது எட்டு சக்திகளைக் குறிக்கின்றன. நம் உடலில் எட்டு அங்கங்கள் உள்ளன வென்றும் உடல் 8 வித வஸ்துக்களால் ஆனது என்றும் குறிக்கின்றன. அந்த விமானத்தில் முக்கோண வடிவாக உள்ள தகடுகளால் மூடப்பட்டது போலிருக்கிறது. இவை நாம் நித்தமும் விடும் 21600 மூச்சுக்களை குறிக்கின்றன. அந்த விமானத்தில் இருபுறமும் இருமுகங்களும் முன் ஒரு முகத்தில் வாசுதேவர் என்ற உருவமும் இருக்கின்றன. இருபுறமும் உள்ள முகங்கள் நாம் மூச்சு விடும் இடகலை, பிங்கலை நாடிகளைக் குறிக்கின்றன. வாசுதேவர் என்பது சுழிமுனை நாடியை குறிக்கிறது. வாசுதேவர் என்பது சுவாச தேவர் என்பது. சுவாசத்திற்கு, மூச்சிற்கு அதிபதி. அதாவது சுழிமுனை நாடி. வாசுதேவர், மேல்தொடைக்கு மேலிருக்கும் மனித உருவம். அதாவது நமது முக்கிய நாடிகள் உள்ள நமது சரீரத்தை அந்தக்கட்டிடம் குறிக்கிறது.

உள்ளிருக்கும் உருவம் மூலவர், ஒரு ஐந்து தலை நாகம் மூன்று சுற்று சுற்றி இருப்பதில் ஒருவர் படுத்திருக்கிறார். பக்கத்தில் இரண்டு பெண்கள் விலகி உட்கார்ந்திருக்கின்றார்கள். ஐந்துதலை நாகம் நமது 5 இந்திரியங்கள். இவைகளை முதலில் அடக்க வேண்டும். மூன்று சுற்று சுற்றி இருப்பது முப்பாழும் பாழாக்கவேண்டுமென்பது முப்பாழாவன முதலா

வது மூன்று கர்மங்களையும் பாழாக்கவேண்டும். அவை யாவன பிராரப்தகர்மம், சஞ்சிதகர்மம், ஆகாமியகர்மம். இரண்டாவது பாழ் என்பது நமது மாமிச உடல், காரண உடல், அறிவு என்கிற சூக்கும உடல்களைப் பாழாக்கவேண்டும் என்பது, மூன்ருவதாக பாழாக்கவேண்டியது திரிபுடி என்கிற ஞானம் ஞேயம் ஞாதுரு என்பது. இதைக் குறிக்கத்தான் மூன்று இதழ்கள் ஒன்றுசேர்ந்த இலையை உடைய வில்வ மரத்தை தாயார் சந்நிதிக்கு பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. நமது இச்சை, கிரியை, என்கிற சக்திகளை நீக்க வேண்டும். இதற்குத்தான் இருபெண் உருவங்களை நீக்கி வைத்திருக்கிறது. இப்படியெல்லாம் செய்து நாம் யோக நித்திரையில் இருக்கவேண்டும், கடவுளாகிய ஒன்றைக் காண. அதற்குத்தான் பெருமாள் பள்ளிகொண்டிருப்பதாக வைக்கப் பட்டிருக்கிறது.

இவ்வளவு பொருள்கள் அமைந்த கோயில்கள் கட்டிடங்கள் மற்றெந்த மதக்காரரிடமும் தேசத்திலும் இல்லை. மதத்தின் இவ்வளவு பொருள்களையும், கொள்கைகளையும் கோயில் உருவமாக, கட்டிட உருவமாகக் காட்டி அமைத்த நம் முன்னேர்களின் அறிவே அறிவு.

வடலூரில் இராமலிங்க சுவாமி சிற்சபை என்று கட்டி இருக்கும் கட்டிடமும் நம் சரீரத்தில் இருக்கும் தத்துவங்களை அமைத்துக்காட்டி இருக்கிறார். அதிலிருந்து காட்டப்படும் சோதியானது நமக்குள்ளே யிருக்கும் கடவுள் என்னும் பொருளைக் குறிக்கிறது. அதற்காக நீக்கப்படும் திரைகள் 6, 7 என்பது கடவுள் என்னும் பொருளை நாம் காண தாண்ட வேண்டிய ஆறு ஆதாரங்களையும் 6 ஆதாரங்களுடன் கூடி சகஸ்ராதார நாடியையும் சேர்த்து 7 என்பதுமே.

---

## இரதம்—தேர்.

சாதாரணமாக நம் நாட்டில் எல்லா முக்கியமான கோயில்களில் இரதம் அல்லது தேர் என ஒன்று இருக்கிறது. இது மரத்தினல் செய்தது. ஒரு விசேஷ அமைப்பாயுள்ளது. நம் ஒவ்வொரு கோயில்களிலும் வருஷத்திற்கு ஒரு முறை 10 நாள் விழா கொண்டாடுகிருர்கள். அதில் ஏழாவது நாள் கடவுளின் உருவத்தை அந்தத் தேரில் வைத்து ஊரைச்சுற்றி இழுத்து வருவார்கள். இதில் ஏழாவது என்பதைக் கவனிக்கவும். தஞ்சாவூர் ஜில்லா திருவையாற்றில் சப்தஸ்தானத்

தன்று கடவுளின் உருவத்தை ஒரு பல்லக்கில் வைத்து ஏழு ஊர்கள் சுற்றிக்கொண்டு வருகிறார்கள். திருப்பதியில் ஏழு மலை தாண்டி பெருமாள் இருக்கும் இடத்திற்குப் போகவேண்



டியிருக்கிறது. வடலூரில் இராமலிங்கசுவாமி ஏற்படுத்தின கட்டிடத்தில் ஏழு திரைகள் நீக்கி ஜோதியைக் காட்டுகிறார்கள். இவைகள் எல்லாம் முதலில் நம் ஆறு ஆதாரம் என்கிற ஆறு முக்கிய நாடிகளை அடக்கி ஏழாவது சகஸ்ராதார நாடிக்கு நம் நாடியை ஏற்றினால் ஜோதி என்கிற அந்த ஒன்றைக் காணலாம் என்று உணர்த்துகிறது.

இரண்டாவதாக கோயில்களில் 10 நாள் விழாவில் விஷ்ணு கோவில்களில் மூன்றாவது நாள் கருட சேவை என்ற விழாவும், சிவன் கோயில்களில் ஐந்தாவது நாள் இடப வாகன சேவை என்னும் விழாவும் இரண்டு கோயில்களிலும் 10-வது நாள் தீர்த்தவாரி அல்லது தீர்த்தம் கொடுப்பது என்னும் விழாவுமாக கொண்டாடுகிறார்கள். இதில் முதலில் நாம் பக்தி செய்து ஒரு நிலையை அடைந்து பிறகு ஞானம் வரச்செய்து, 10-வது நாள் ஞான வெள்ளம் என்கிற நீரில் நாம் மூழ்கி நித்தியானந்தத்தில் அழுந்தியிருப்பதைக் குறிக்கிறது. அல்லது

வேறு விதமாக சொல்லப்போனால் முதலில் கடவுள் என்பவர் எல்லாவற்றிலும் இருக்கிறார் என்று உணர்ந்து, பிறகு கடவுள் நம்மிடத்திலிருக்கிறார் என்று உணர்ந்து, பிறகு நாமே கடவுள் என்ற நிலை வந்து முடிவெய்தி நித்தியானந்தமாயிரும்ப்தை உணர்த்துகிறது இதை உணர்த்தத்தான் கோயில்களில் முதல் பிரகாரத்தில் இருக்கும் மூன்று மண்டபங்களும் இந்த மூன்று நிலையைக் குறிக்கின்றன.

அடுத்து அந்த தேரின் உருவத்தை கவனிப்போம். அது நம் உடலைக்குறிக்கிறது. அது கோணவட்ட உருவமாக இருக்கிறது. அதற்கு மத்தியில்தான் கடவுளின் உருவத்தை வைக்கிறார்கள். அப்போது அந்த உருவம் அந்த கோணவட்டத்தின் மத்தியில் இருக்கிறது. இது கடவுள் நம் சரீர மத்தியாகிய இருதயத்தில் இருப்பதைக்குறிக்கிறது. சாதாரணமாக ஒருமுட்டையையோ அல்லது உயிர் கர்ப்பம் தரிப்பதையோ கவனித்தால் அந்த கரு தரிக்கும் பாகமானது இவைகளுக்கு சரிமத்தியிலிருப்பதும் நமக்கு நன்கு விளங்கும்.

அந்த தேருக்கு அடியில் உருண்டு செல்லும் ஆறு சக்கரங்கள் இருக்கின்றன. இது நம் சரீரம் செல்லும் ஆறு நிலையைக் குறிக்கின்றன. அவையாவன :—தேகம் பிறத்தல், பால்யம், கெளமாரம், யவ்வனம், விருத்தாப்பியம், மரணம், அல்லது, பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறியமைதல், தேய்தல், அழிமாய்தல் என்பனவாம்.

இதற்குமேல், பட்டரை என்று சொல்லப்பட்ட மரத்தினால் செய்யப்பட்ட பாகம் உள்ளது. குறுக்கே பார்த்தால் இது சுமாரான முக்கோணவட்டமாயிருக்கும். இந்த பாகம் அடி, நான்குபக்கம் உள்ளது. ஒவ்வொரு பக்கத்திலும் ஐந்து பூதங்கள் தோள்களில் அந்த பட்டரையைத் தாங்கி இருக்கும் மாதிரி இருக்கிறது. அந்த நான்கு பக்கங்களும் நம் உடல், பிரிதிவி என்கிற மண், அப்பு அல்லது நீர், தேயு அல்லது தீ. வாயு அல்லது காற்றினால் ஆனது என்பதைக் குறிக்கிறது. அந்த நான்கு ஐந்து பூதங்களும், பிரிதிவியால் ஆன உரோமம், நரம்பு, தோல், மாமிசம், எலும்பு ; அப்புவால் ஆன சுக்கிலம், இரத்தம், வியர்வை, சிறுநீர், வாய்நீர் ; தேயுவால் ஆன சங்கமம், ஆலசியம், நித்திரை, தாகம், பசி ; வாயுவால் ஆன தத்தல், ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல் என்பவைகளை குறிக்கின்றன.

இதற்குமேல் நான்கு பக்கம் உள்ள பட்டரை. இதில் ஒவ்வொரு பக்கமும் ஐந்து பட்டையாக உள்ளது. இவை

நாம் ஞான இந்திரியங்கள் ஐந்தும், கன்ம இந்திரியங்கள் ஐந்தும், ஞான இந்திரியங்களால் அறியும் விஷயங்கள் ஐந்தும், கன்ம இந்திரியங்களால் செய்யும் தொழில்கள் ஐந்தையும் முறையே குறிக்கின்றன.

அந்த பட்டரை ஐந்து அடுக்குகளால் ஆனது. இது நம் ஐந்து கோசங்களாகிய அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோன்மயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்த மயகோசம், என நம் சரீரத்து ஐந்து பிரிவுகளை காட்டுகிறது.

இந்த ஐந்து அடுக்குகளுக்கும் மத்தியில் நான்கு இடவழிகள். இவைகள் மத்தியில் நான்கு பக்கமுமாக 64 சிறு உருவங்கள் செதுக்கப்பட்ட பலகைகளால் மூடப்பட்டிருக்கின்றன. இவை நம்து 64 கலைஞானங்கள் என்கிற கிளை நாடிகளாகிய நாடிகளைக் குறிக்கின்றன.

இதற்குமேல் மூன்று தட்டுகள் இருக்கின்றன. அடித்தட்டு எட்டுக் கோணமுள்ளதாகவும், மேலிருக்கும் இரண்டும் சதுரமாக உள்ளதாகவும் இருக்கின்றன. அடித்தட்டு எட்டு கோணமுள்ளதானது நம் உடல் எட்டு அங்கங்கள் கொண்டது என்பதைக் குறிக்கிறது. அவையாவன :—கால்கள் 2, கைகள் 2, கண்கள் (அல்லது) கன்னங்கள் 2, மார்பு, நெற்றி என்பன. தவிர நம் உடல் ஆயிருக்கும் எட்டுவித வஸ்துக்களைக் குறிக்கின்றன. அவையாவன :—மயிர், தோல், எலும்பு, தசை, நரம்பு, இரத்தம், பிராணவாயு, அபானவாயு என்பன. இதற்குமேல் இருக்கும் இரண்டு சதுர தட்டுகளும் உயிர் உற்பத்தியாகும் நான்கு வகையாகிய அழுக்கிலிருந்தென்றும், வித்திலிருந்தென்றும், முட்டையிலிருந்தென்றும், பையிலிருந்தென்றும், உணர்த்துவதொன்று, சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு படிகளைக் குறிப்பது மற்றொன்று.

அங்கு மூன்று தட்டுகளாக இருக்கும் மூன்று படிகளும் ஆணவம், கர்மம், மாயை என்கிற மும்மலங்களையும் அடக்கி, மனம், வாக்கு, காயம் என்பவைகளை அடக்கி, தாமதம், இராசதம், சாத்துவிகம் என முக்குணங்களில் முதவிரண்டையும் நீக்கி, சாத்துவிகம் அடையவேண்டுமென்றும், பிறகு முக்கர்மங்களாகிய பிராரப்த கர்மம், சஞ்சித கர்மம், ஆகாமிய கர்மம் நீக்கி, மாமிச சரீரம், காரண சரீரம், அறிவு சரீரம் மூன்றையும் கடந்து, ஞானம், ஞேயம், ஞாதுரு என்கிற மூன்றையும் கடந்தால் அங்கு இருக்கும் உருவம் குறிக்கும் ஆன்மாவைக் காணலாம் என்று உணர்த்துகிறது.

இந்த கெட்டியாக கட்டப்பட்ட கீழ்பட்டரைக்குமேல் கொஞ்சம் காலி. இதில் 16 தூண்கள், அந்த பட்டரைமேல் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த தூண்கள்மேல் இலேசான சட்டங்களால் சேர்க்கப்பட்ட நான்கு சதுர அடுக்குகள் இருக்கின்றன. இவைகளில் அடி இரண்டு அடுக்குகள் மத்தியில் சதுரமாக காலியாக இருக்கின்றன. நான்காவது மேலடுக்கு மேல் ஒரு கலசம் இருக்கிறது. அது மலர்ந்த தாமரை மலர் போலும், அதுவும் கடைசியில் ஒரு முனையில் போய் முடிகிறது. இதில், கீழிருக்கும் முக்கோண மர பட்டரை, நமக்கு இருக்கும் ஆறு சாஸ்திரங்கள் என்கிற ஆறு ஆதாரங்கள் என்கிற ஆறு நாடிகளில் முதலாவதாக இருக்கும் மூலாதாரம் என்னும் நாடி. மேலிருக்கும் இரண்டு சதுர பலகைத் தட்டுகளும், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் என்னும் நாடிகள். அதற்குமேல் கடவுள் உருவம் வைக்கும் காலி இடமும், இதை சுற்றிலும் இருக்கும் தூண்களும், அனாகதம் என்னும் நாடி. இதில் உருவம் வைக்குமிடம் இருதயம். அதைச்சுற்றியிருக்கும் தூண்கள் இருதயத்தை சுற்றியிருக்கும் Solar plexus என்னும் நாடி. இதற்குமேல் இருக்கும் இரண்டு அடுக்குகள் மத்தியிலிருக்கும் காலி சதுரங்கள், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் நாடிகள். மேலிருக்கும் கலசம் சகஸ்ராதார நாடி.

முக்கோணத்தின்மேல் நான்கு சதுரம் காணவேண்டுமென்று சிவவாக்கியர் சொல்லியிருக்கிறார். அதாவது முக்கோணம் என்பது மூலாதார நாடி. அதற்கு மேலிருக்கும் நான்கு சதுரங்கள், நான்கு வேதங்கள் என்று சொல்லப்பட்ட நமது முதுகெலும்பு மூளைக்குள் சதுரமாயுமில்லாமல், வட்டமாயுமில்லாமல் இடுப்பு, நடுமுதுகு, பின்கழுத்து, பிடர் என்கிற பாகங்களில் இருக்கும் நாடிகள். இதுகளைக் கடைசியாக நிமிர்த்தித்தான் சகஸ்ராதார நாடியை நிமிர்த்தவேண்டும். கீழிருக்கும் முக்கோண பட்டரை அந்த முக்கோணம் என்னும் மூலாதாரம். அதற்குமேல் நான்கு சதுரங்கள் என்று சொல்லப்பட்ட நாடிகள் மேலிருக்கும் நான்கு சதுர அடுக்குகள். மலர்ந்த சகஸ்ராதார நாடியைத்தான், அந்த தாமரை மலர்போன்ற கலசம் குறிக்கிறது. அப்படி மலரச் செய்தால் எல்லாம் ஒன்றாய்த் தோன்றி கடைசியில் ஒன்றுமில்லாமல் போவதைத்தான் அந்தக் கலசம் ஒரு முனையில் முடிந்து கடைசியில் ஒன்றுமில்லாமல் போகிறது. இதைத்தான் எல்லாம் வெட்டவெளியென்று நம் மதத்தில் சொல்லியிருக்கின்றது. இதைத்தான் சிதம்பர ரகசியம் என்கிறது. புத்த

மதத்தில் இதைத்தான் நிர்வாணம் எய்துதல் என்பது. இதை யேதான் பாகவதத்தில் விஷ்ணு பத்தாவது அவதாரமாக கடைசியில் கல்கி அவதாரம் எடுக்கிறார் என்றும் அப்போது உலகத்தை அழிக்கிறார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஞானம் உண்டானால் உலகம் என்கிற தோற்றம் அழிந்து எல்லாம் ஒரே வெளியாய் தோன்றுமென்பது. இது சாதாரண மனிதருக்கு எளிதில் விளங்காது.

எல்லாவற்றிற்கும் மேல், கலசத்தில் ஒரு கொடி கட்டி யிருக்கும். அதாவது நாம் வைராக்யத்துடனிருக்கவேண்டு மென்பதை உணர்த்துகிறது.

கடைசியாக இந்த தேரில் நான்கு குதிரைகள் கட்டி யிருக்கின்றன. இவைகள் அந்தத் தேரை இழுத்துச் செல்வ தாக பாவனை. இவைகள் நான்கிற்கும் கடிவாளம் போட்டு அந்த நான்கு கடிவாளங்களையும் பாகன் மாதிரி முன்னால் உட் கார்ந்திருக்கும் மனிதன் கையில் பிடித்திருக்கிறான். அந்த மனிதன் அந்த குதிரைகளை தப்பான வழியில் செலுத்தாமல் சரியான வழியில் செலுத்துவதாக பாவனை. இந்த நான்கு குதிரைகளும் நம் நான்கு சித்தம், மனம், புத்தி, அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்கள். இவைகள் வாயிலிருக் கும் கடிவாளங்கள் இவைகளைச் செலுத்தும் நம் அறிவு. பாகன் நமது மனச்சாட்சி. நமது மனச்சாட்சியைக்கொண்டு அறிவினால் நாம் அந்தக்கரணங்களைத் தப்பான வழியில் நடத் தாமல் சரியான வழியில் நடத்தினால் நம்முள்ளிருக்கும் ஆன்மா வெளிப்படும். ஆன்ம தரிசனம் கிடைக்கும். இதை யேதான் தேர் ஊர் சுற்றி வருவதைக் குறிக்கிறது.

இந்த நம் ஆன்மா என்கிற பசு, பரம ஆன்மா என்கிற பதியுடன் கலந்துவிடுகிறது என்பதைக் குறிக்க, நம் கோயில் கள். ஆகவேதான் நம் கோயில்களுக்கு ஆலயம் என்று பெய ரிடப்பட்டிருக்கிறது. ஆ என்பது லயிக்குமிடம். அதாவது பசுவாகிய நம் ஆன்மா, பரம் ஆன்மாவாகிய பதியுடன் லயிக்குமிடம்.

முன் சொன்னபடி தேர் செலுத்துவதைத்தான் பகவத் கீதை என்பது உணர்த்துகிறது. அர்ச்சுனனுடைய இரதம் இந்த தேர். அந்த இரதத்தில் கட்டியிருக்கும் நான்கு குதி ரைகள் இந்த தேரில் கட்டியிருக்கும் நான்கு குதிரைகளாகிய நான்கு அந்தக்கரணங்கள். அந்த கடிவாளம்தான் இந்தக் கடிவாளம்போல் அறிவு. அந்த கிருஷ்ணன் இந்த பாகன் போல் மனச்சாட்சி. கிருஷ்ணன் இரதத்தை சரிவரச் செலுத்தி

நாமாகிய அர்ச்சுனன் கொடிகட்டின மாதிரி வைராக்யத்துட னிருந்து துரியோதனுதியர்களாகிய தீக்குணங்களை அழிக் கிருன்.

---

## திருவரங்கம் கோவில் திருநாட்கள்.

ஆரியர்கள் இந்த நாட்டிற்கு வந்தபிறகுதான் அந்தக் கோயிலுக்கு சீரங்கம் என்றும், அதிலிருக்கும் மூலவருக்கு ரெங்கநாதர் என்ற பெயரும் வந்தன. இப்பெயர்கள் அர்த்த மற்றவை. அதற்குமுன் இக்கோயிலுக்கு திருவரங்கம் என் றும் அதிலிருக்கும் மூலவருக்கு அரங்கநாதன் அல்லது அரங்கமாநகருளான் என்கிற பெயர்களும் இருந்தன. அதில் திரு என்னும் முன் மொழிக்கு பெருமை வாய்ந்த அல்லது அழகு பொருந்தியதென்று பொருள். அரங்கம் என்ருல் கோட்டை அதாவது மனமாகிய கோட்டை. அரங்கமாநக ருளான் அல்லது அரங்கநாதன் என்ருல் அந்த மனமாகிய கோட்டையில் இருப்பவன், கோட்டைக்கு அதிபதி என்று பொருள். அந்த கோயிலைப்பற்றி எழுதப்பட்ட வியாசமும், அந்த கோயிலின் அமைப்பும் இதை நன்கு விளக்குகின்றன.

அந்தக் கோயிலின் அமைப்பை கவனித்தால் அந்த கோயிலின் கர்ப்பக்கிரகத்தை சுற்றியிருக்கும் முதல் பிரகா ரத்தில் வடமேற்கு மூலையில் யோகசாலை என்கிற யாகசாலை இருப்பதும், அவ்விடத்தில் யாகம் என்னும் சடங்கு செய்வ தும் அந்தப் பிரகாரத்தின் வடகிழக்கு மூலையில் ஒரு மண்ட பம் இருப்பதும் முக்கோட்டை ஏகாதசி விழாவின் முதல் 10 தினங்களும் உத்ஸவரை இந்த மண்டபத்தில் கொண்டு வந்து வைத்து பிறகு கர்ப்பக்கிரகத்திற்கு எடுத்துப் போவது மாக நடத்துகிருர்கள். அந்தப் பிரகாரத்தின் தென்கிழக்கு மூலையில் சுவற்றில் ஒரு பெரிய நிலைக்கண்ணாடி புதைக்கப்பட் டிருக்கிறது. இதைச் சாதாரண நாட்களில் இரண்டு கதவு களால் மூடி வைத்திருந்து அந்த உத்ஸவத்தின்போது, உத் ஸவரை அங்கு கொண்டுவரும்போது அதற்குமுன் நிறுத்தி, கதவுகளைத் திறந்து, உத்ஸவரை அதில் தன்னைப் பார்க்கும் படி செய்கிருர்கள்.

இது மனிதன், கடவுளை, பிரபஞ்சத்தை, பிரம்மத்தை, உண்மையை அடையவிருக்கும் மூன்று படிகளைக் குறிக்கின் றன. அவைகளுக்கு மூன்று படிகள் குறிக்கப்பட்டிருக்கின் றன. அவை பக்தி, யோகம், ஞானம் என்பன மூன்றே.

அதாவது அன்பு பாராட்டல், மனதை ஒருநிலைப்படுத்தல், தெய்வத்தன்மை பொருந்தல் என்பன. யாகசாலையைத் தாண்டுவதென்பது மனதை ஒருநிலைப்படுத்துதலை தாண்டுதலென்பது. மண்டபத்தில் தங்கி தாண்டுவதென்பது ஞானத்தை அடைவது, கண்ணாடிமுன் நின்று தன்னைப் பார்த்துக்கொள்வதென்பது தன்னையே எங்கும் பார்ப்பது, அதாவது எல்லாம் பிரம்மம் என்பது. சர்வம் பிரம்மம் என்பது.

திருநாள்கள் :—போது—விஸ்வரூபதரிசனம் என்று ஒரு விசேஷ திருவிழா பிரதி தினமும் காலையில் இந்தக் கோவிலில் நடைபெறுகிறது. அதுசமயம் ஒரு பசுவை கொண்டுவந்து அதன் பின்பாகத்தை காட்டியும், ஒரு யானையைக் கொண்டு வந்து அதன் முகத்தையும் காட்டப்படுகிறது. அப்போது கர்ப்பூர ஆரத்தி காட்டி எல்லாரும் அந்த உருவத்தை பார்க்கிறார்கள். ஆனால் அந்த உருவத்தில் யாதொரு மாறுதலும் இல்லாமல்போனாலும் அந்த விழாவிற்கு விஸ்வரூப தரிசனம் என்று பெயரிட்டிருக்கிறார்கள். விஸ்வரூப தரிசனம் என்றால் இந்தப் பிரபஞ்சமே அந்த உருவத்தில் காணப்படுகிறதென்று பொருள். விஷ்ணுமயம் ஜகத்தென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது விஷ்ணு என்பது இந்தப் பிரபஞ்சமே. ஞானத்தை அடைந்த ஒருவர் இந்த பிரபஞ்சமே எல்லாம் ஒன்றாகவும், ஜோதி உருவமாகவும், பிரம்ம உருவமாகவும், எல்லாம் நிர்வாணமாகவும், ஒன்றுமில்லாத வெளியாகவும் காண்பார். இந்த மாதிரி ஞானத்தை ஒரு மனிதனால் தான் காணமுடியும் என்பதை உணர்த்த பசுவின் பின்பாகத்தை அங்கு வைக்கிறார்கள். மனிதனைப் பசுவாக குறிக்கப்பட்டிருக்கிறது. காளையும் பசுவும் முன்பக்கம் ஒன்றாகத் தோன்றும். பசு என்று குறிக்கவே பசுவின் பின்பாகம் வைக்கப்பட்டிருக்கிறது. பதி, பசு, பாசம் என்பதில் பதி என்பது முதல்வனையும், பசு என்பது மனிதனையும், பாசம் என்பது மாயை, பொய்த்தோற்றம், அறியாமை என்பதையும் குறிக்கின்றன. யானையின் முகம் விநாயகரின் தலையை அல்லது பிள்ளையார் தலையைக் குறிக்கிறது. பிள்ளையார் அல்லது விநாயகர் தலை ஓம் என்பதைக் குறிக்கிறது. ஓம் என்பது ૭ என்பதைக் குறிக்கிறது. ૭ என்பது மூலாதாரத்தில் இருக்கும் நாடியை சகஸ்ராதாரத்திற்கு ஏற்றுவதைக் குறிக்கிறது. அப்போதுதான் ஒருவருக்கு ஞானம் உண்டாகும்.

சூடம் எரியும்போது ஒருவர் அதை நன்றாக கவனித்தால் முதலில் அது நீராக உருகுவதையும், பிறகு சுடர்விட்டு

எரிவதையும், பிறகு அது புகையாக கிளம்புவதும், கடைசியில் அது கண்ணுக்கு புலப்படாமல் மறைவதையும் கவனிக்கலாம். இந்த உலகம் ஐந்து பெரும் வஸ்துக்களால் ஆகியிருக்கிறது. பிருதிவி அல்லது மண், அப்பு அல்லது நீர், தேயு அல்லது நெருப்பு, வாயு, ஆகாயம் அல்லது வெளி, என்பவைகளால் ஆகியிருக்கிறது. இந்த உலகம் வெறும் வெளியிலிருந்து வந்தவை. எப்படியென்றால் ஆகாயம் அல்லது வெளியிலிருந்து வாயுவும், தேயு அல்லது நெருப்பு வாயுவிலிருந்தும், அப்பு அல்லது நீர் தேயு அல்லது நெருப்பிலிருந்தும், பிருதிவி அல்லது மண் அப்பு அல்லது நீரிலிருந்தும் வந்தவை. உலகம் அழியவேண்டுமானால் வந்தவழியே போகவேண்டியிருக்கிறது. அதாவது பிரிதிவி அப்புவாகவேண்டும். அப்பு தேயுவாக மாறவேண்டும். தேயு வாயுவாகவேண்டும். வாயு ஆகாயமாக மறையவேண்டும். இதைத்தான் சூடம் எரிந்து மறைவதை காட்டுகிறது.

சமீப காலத்தில் அந்தக் கோயிலில் ஒரு புது திருநாள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சுவர்கள் உள்பக்கமெல்லாம் நான்கு பக்கமும் நிலைக்கண்ணாடிகளால் அமைக்கப்பட்ட ஒரு அறை கட்டியிருக்கிறார்கள். அக்கோயிலில் 10 நாள் திருவிழா கொண்டாடப்படும்போது உத்ஸவ விக்ரகத்தை மற்ற காலங்களில் மூலவருக்கு பக்கத்தில் வைத்திருப்பதை திருநாளுக்காக வெளியே கொண்டுவரும்போது அன்றாடம் விழா முடிந்தவுடன் பழையபடி மூலவருக்கு பக்கத்தில் கொண்டு போய் வைத்துவிடாமல் அந்த 10 நாட்களிலும் அன்றாட விழா முடிந்ததும் இக்கண்ணாடி அறையில் கொண்டுபோய் வைத்துவிடுகிறார்கள். அக்காலங்களில் எல்லாரும் அந்த அறைக்குள் போய் அந்த விக்ரகத்தை பார்க்கலாம். நான்கு பக்கமும் கண்ணாடி உள்ள அறையில் யாராவது போய் நின்று சுற்றிப் பார்த்தால் தன்னை எல்லா பக்கமும் காணலாம். அதேபோல் அந்த அறையில் உருவத்தை வைத்து சுற்றிப் பார்த்தால் எப்பாகமும் அந்த உருவம் தெரியும். இது கடவுள் எங்கேயும் எல்லாவற்றிலும் இருக்கிறார் என்று உணர்த்துகிறது.

திருநாள்கள் குறிப்பானவை:— சித்திரை மாதத்தில் விருப்பன் திருநாள் என்று அழைக்கப்படும் பிரம்ம உத்ஸவம் என்கிற பெரும் திருநாள் நடைபெறுகிறது. பெயரிலிருந்தே அது விரும்புகிறவன் திருநாள் என்று விளங்கும். இது 10 நாள் நடைபெறும். இதில் முதலில் கொடியேற்றுவிழாவொன்று கொண்டாடப்படுகிறது. அன்று ஒரு நீண்ட சீலை

யில் ஒரு நாமத்தை முதலில் குறித்து பிறகு சங்கு சக்கரங்கள் குறிக்கப்படுகின்றன. இந்தச் சிலையை துஜஸ்தம்பம் என்று சொல்லப்பட்ட தூணில் உயர்த்துகிறார்கள். பிறகு அந்தச் சிலையை தூணில் சுற்றுகிறார்கள். பிறகு அச்சிலையை அத் தூணிற்கு அடியில் தர்ப்பை புற்களையும் சேர்த்துச் சுற்றிக் கட்டிவிடுகிறார்கள். அச்சிலையில் குறிக்கப்பட்டிருக்கும் நாமம் என்பது அடியில் ஒன்றுசேரும் இரண்டு வெள்ளைப் பட்டைகளும், மத்தியில் ஒரு சிகப்புப் பட்டையுமாக உள்ளது. இந்த இரண்டு வெள்ளைப் பட்டைகளும் பரமாத்மா, அல்லது கடவுள், நாம் என்பவைகளைக் குறிக்கின்றன. அந்த இரண்டு பட்டைகளும் வெண்மையாக இருக்கின்றன. இது அந்த இரண்டு ஆத்மாக்களும் பரிசுத்தமானவை என்பதைக் குறிக்கின்றன. அவை அடியில் ஒன்று சேர்வது அந்த ஆத்மாக்கள் கடைசியில் ஒன்றுதான் என்று குறிக்கிறது. மத்தியில் இருக்கும்சிகப்புக்கோடு, அவை ஒன்றாக இருந்தாலும் இரண்டாகத் தோற்றுவிப்பதைக் குறிக்கிறது. அதாவது மாயை அல்லது அஞ்ஞானம், நாமத்தைப்போல் நம்மை இரண்டாக பிரித்துக் காட்டுகிறது. சங்கு என்பது ஓங்காரத்தைக் குறிக்கிறது, அதாவது ? என்ற உருவம். இதுதான் சங்கின் உருவம். அதுதான் ஞானத்தை உண்டாக்குவது. அப்போது இரண்டும் ஒன்றாகத் தோன்றும் சக்கரம் என்பது இந்த உலகத்தில் எதுவும் நிலைத்திருப்பதில்லை என்று உணர்த்துகிறது. தர்ப்பை புற்களைக்கொண்டு ஒன்று சேர்த்து கட்டுவதென்பது இவ்வுலகத்தில் இருக்கும் எல்லா ஆத்மாக்களும் கடைசியில் ஒன்றுதான் என்று குறிக்கிறது.

பத்து தினங்களும் அந்த உத்ஸவர் என்ற உருவத்தை தினமும், காலையிலும் மாலையிலும், வேளைக்கொரு வாகனத்தின் மேல் வைத்து நான்கு சித்திரை வீதிகளிலும் எடுத்து வருகிறார்கள். அப்போது தீண்டப்படாதவர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் உள்பட எல்லாரும் அதைப் பார்க்கிறார்கள். ஒவ்வொரு வாகனமும், அந்த வாகனம் எதைக் குறிக்கிறதோ, அந்த வஸ்து அல்லது சிவனைக் குறிக்கிறது. அவ்வாகனத்தில் உருவம் வருவது, கடவுள் அந்த வஸ்து, சிவனில் இருக்கிறார் என்று உணர்த்துகிறது. வித்தியாசமில்லாமல் எல்லாரும் அதைப் பார்ப்பதென்பது கடவுள் என்பவர் ஒரு தனிப்பட்ட நபருக்கு அல்லது தனிப்பட்ட இனத்தாருக்குமாத்திரம் உடையவர்அல்லவென்றும், தீண்டப் படாதவர்கள் போன்றவர்கள் உள்பட எல்லாருக்கும் பொதுவானவர் என்றும் உணர்த்துகிறது. கருடசேவை என்கிற

விழாவும், தேர்விழாவும் இந்த திருநாட்களில் சேர்ந்தவை. தேர் அல்லது இரதம் என்பதைப்பற்றி நான் எழுதியிருக்கும் வியாசத்தில் இவைகளைப்பற்றி விரிவாக எழுதியிருக்கிறேன். தேர் விழாவின்போது அநேகமாக கிராமத்து ஜனங்கள் வந்து தேர்முன் தேங்காய் உடைத்து சூடத்தை கொளுத்துகிறார்கள். தேங்காய் என்பது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்து பொருட்களால் ஆகியிருக்கிறது. தேங்காயை உடைப்பதென்பது இந்த சரீரமாகிய, இந்த ஐந்துப் பொருட்களையும் உடைத்தெரியவேண்டும் என்று உணர்த்துகிறது.

கடைசி நாளில் அந்த உருவத்தை ஆற்றிற்கு எடுத்துப்போய் அவ்விடத்தில் கூடியிருக்கும் எல்லா பக்தர்கள் மீதும் தண்ணீர் தெளிக்கிறார்கள். இதற்கு தீர்த்தவாரி விழா என்று பெயர். தீர்த்தம் அல்லது அந்த நீர் என்பது அருள் அல்லது கிருபையைக் குறிக்கிறது. அதாவது கடைசியில் கடவுள் தன் பக்தர்களுக்கு அருள், கிருபை என்பதைக் கொடுக்கிறார் என்பதைக் குறிக்கிறது.

(2) வசந்த உத்ஸவம் என்று சொல்லப்படும் அடுத்த உத்ஸவம் வைகாசி மாதம் நடக்கிறது. இதில் புஷ்பம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட வசந்த மண்டபத்தை தினமும் அந்த உருவத்தை சுற்றி சுற்றிக்கொண்டு செல்லுகிறார்கள். இது கடைசியில் நம் ஆத்மா அடையும் ஆனந்தத்தைக் குறிக்கிறது.

(3) அடுத்தாற்போல் ஆனி மாதத்தில் ஜேஷ்டாபிஷேகம் என்று சொல்லப்படும் உத்ஸவம் நடைபெறுகிறது. இதில் பக்தர்கள் அநேகர் காவேரி ஆற்றிற்குப்போய் குடங்களில் தண்ணீர் கொண்டுவந்து கோவிலுக்குள்ளிருக்கும் உருவத்தின்மீது கொட்டுகிறார்கள். இதுவும் ஆத்மா கடைசியில் குளிர்ந்து சந்தோஷத்துடன் இருப்பதைக் குறிக்கிறது.

(4) அடுத்து ஆவணி மாதத்தில் வரும் உத்ஸவத்திற்கு திரு பவித்ர உத்ஸவம் என்று பெயர். பவித்ரம் என்பதற்கு பூணூல் என்று பொருள். பார்ப்பனர்க்கு ஆவணி அவிட்டம் என்னும் முப்பிரி பூணூல் மாற்றும் விழாவும் இதே மாதத்தில்தான் வருகிறது. இந்த உத்ஸவத்தில் பொன் நிறம், வெள்ளை நிறம், சிகப்பு நிறம், மேக நிறம், புகை நிறமாகிய ஐந்து நிறமுடைய பட்டு நூலால் ஐந்து மாலைகளைத் தயாரித்து மந்திரம் ஜெபித்து, அந்த உருவத்தின்மேல் போட்டு, கடைசியில் அன்பு மிகுந்த, தகுதி உடைய பக்தர்களுக்கு கொடுக்கப்

படுகிறது. இந்த உலகம், மண், நீர், நெருப்பு, வாயு, வெளி என்கிற ஐந்து பெரும் பொருள்களால் ஆனவை. இந்த் ஐந்து வஸ்துக்களும் மேற்சொன்ன ஐந்து நிறங்களால் குறிக் கப்பட்டிருக்கின்றன. இந்த ஐந்து மாலைகளையும் அந்த உரு வத்தின்மீது போடுவதால் இந்த உலகத்தைக் குறிக்கும் அந்த உருவம், இந்த ஐந்து பொருள்களால் ஆனவை என்பதைக் குறிக்கிறது.

(5) தோல உத்ஸவம் அல்லது ஊஞ்சல் திருநாள் என்பது அடுத்துவரும் உத்ஸவம். இது ஐப்பசி மாதத்தில் நடைபெறு கிறது. இந்தத் திருநாளிலே ஒரு ஊஞ்சலின்மேல் அந்த உருவத்தை வைத்து முன்னும் பின்னுமாக ஆட்டுகிறார்கள். இது ஆத்மா அநுபவிக்கும் மற்றொருவித ஆனந்தத்தைக் குறிக்கிறது.

(6) அடுத்தாற்போல் கார்த்திகை மாதம் தீபத் திரு நாள் நடைபெறுகிறது. அந்த தினத்தில் சுலபத்தில் எரிந்து போகக்கூடிய வஸ்துக்களால் ஒரு சிறு கோபுரம் மாதிரி கட்டி அதற்குத் தீமூட்டுகிறார்கள். அப்போது அது சுடர்விட்டு பெருந்தீயாய் எரிகிறது. இது நாம் முதலில் காணும் உண்மை அல்லது வெளிக்குமுன் காணும் சோதியை குறிக் கிறது. இது ஏகாதசி திருநாளுக்குமுன் வருவதைக் கவ னிக்கவேண்டியது.

(7) அடுத்த மார்கழி மாதத்தில் முக்கோட்டை ஏகா தசி, அல்லது வைகுண்ட ஏகாதசித் திருநாள் நடைபெறு கிறது. இதுதான் இக்கோயிலில் நடைபெறும் விழாக்களில் முக்கியமானது. இது கார்த்திகை தீபத்திருநாளைக்கு அடுத் தாற்போல் வருகிறது. முதலில் 10 நாள் விழாவிற்கு பகல் பத்து என்று பெயர். இது நம் முடிபிற்குமுன் நடைபெறும் சில அம்சங்களைக் குறிக்கிறது. இதற்கப்புறம் வைகுண்ட ஏகாதசி என்பது நடைபெறுகிறது. அன்று அந்த உருவம் வைகுண்டவாசல் என்று சொல்லப்பட்ட வாசல் வழியாய்ப் போய் வைகுண்டத்தைக் குறிக்கும் ஏகாதசி மண்டபம் என் னும் 1000 கால் மண்டபத்தில் கொண்டுபோய் அதை வைக் கிறார்கள். இது உண்மையை உணர்வதைக் குறிக்கிறது. பகல் முழுவதும் அங்கு வைத்திருந்து இரவு வெகு நாழிகை கழித்து ஏகாந்தசேர்வை என்று சொல்லி ஒரு ஆடம்பரமு மின்றி உருவத்தை தனியாக கர்ப்பக்கிரகத்திற்கு எடுத்துப் போய்விடுகிறார்கள். உருவத்தை அளவுமீறி அந்த இடத்தி லேயே இருக்கக்கூடாதென்று அப்புறமெடுத்துச் சென்று

விடுகிறார்கள். இதற்கப்புறம் இராப்பத்து என்று சொல்லப்படும் விழா, இக்காலங்களில் உருவத்தை இரவு வெகுகாலம் வரைக்கும் அந்த மண்டபத்தில் வைத்திருந்து எடுத்துப் போய் விடுகிறார்கள். பகல்பத்து விழாவில் உருவத்தை கோயிலின் முன்பாகத்தின் வடகிழக்கு மூலையில் இருக்கும் மண்டபத்தில் கொண்டுபோய் சிலகாலம் வைத்திருக்கிறார்கள். இது யோகம் என்கிற ஒருநிலைப்படும் நிலையைத் தாண்டி ஞானம் அடையும் நிலையைக் குறிக்கிறது. இப்படிச் சிலகாலம் அதாவது 10 நாள் பழகியபின் ஒருவன் உண்மையைக் காண முடியும். பிறகு ஏகாதசி தினம் உருவம் வைகுண்டவாசலைத் தாண்டி சகஸ்ராதார நாடியைக் குறிக்கும் ஏகாதசி மண்டபம் என்கிற 1000 கால் மண்டபத்திற்கு போகிறது. இது மூலாதாரத்தில் இருக்கும் நாடியை சகஸ்ராதார நாடிக்கு ஏற்றுவதைக் குறிக்கிறது. அப்படி ஏற்றினால்தான் நாம் உண்மையை அல்லது வெளியைக் காணலாம். இந்தத் திருநாளைக்கு அத்தியாயன உத்ஸவம் என்று பெயர். அதாவது அனுபோகத் திருநாள்.

(8) தைமாதமாகிய அடுத்த மாதத்தில் பூசநட்சத்திரத்தில் நடைபெறும் தைபூசத் திருநாள் என்னும் அடுத்த திருநாள் வருகிறது. இதிலும் 10 நாள் விழா கொண்டாடப்படுகிறது. இதிலும் கொடியேற்றம், பல வாகனங்களில் உருவத்தைத் தெருவே எடுத்துபோவது முதலியன நடைபெறுகின்றன. இதிலும் கடவுள் எல்லாவற்றிலும் இருக்கிறார் எங்குமிருக்கிறார். உலகமே கடவுள் என்பதைக் குறிக்கிறது.

(9) இதற்கடுத்த உத்ஸவம் மாசி மாதத்தில் நடைபெறுகிறது. இதற்கு தெப்பு உத்ஸவம் என்று பெயர். இதில் தேர்போல் ஒன்றைக்கட்டி தண்ணீரின்பேரில் மிதக்கவைத்து அதன்மேல் உருவத்தை வைத்து ஒரு குளத்தில் சுற்றிச்சுற்றிக் கொண்டு வருகிறார்கள். முன் சொன்னதுபோல் தெப்பத்தில் இருக்கும் உருவம் ஆத்மாவைக் குறிக்கிறது. கடவுள் நம்மிடத்தே இருக்கிறார் என்பது. குளத்தில் இருக்கும் பரந்த நீர் உலகத்தைக் குறிக்கிறது. ஆகவே ஆத்மா என்கிற கடவுள் உலகமே என்று உணர்த்துகிறது.

(10) அடுத்தாற்போல் வருஷத்தில் கடைசியாக வரும் உத்ஸவம் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் நடைபெறுகிறது. அந்தச் சமயத்தில் அந்த உருவத்தை உரையூரிலிருக்கும் நாச்சியார் அம்மன் கோயிலுக்கு கொண்டுபோகிறார்கள். நாச்சியார் என்பது ஒரு துலுக்கப் பெண். அரங்கநாதர் என்பவர் தன் துலுக்க வைப்பாட்டிப் பெண்ணாகிய

அந்த நாச்சியார் வீட்டுக்குப் போவதைக் குறிக்கிறது. இது கடவுள் என்பவர் தன் பக்தர்களில் ஜாதி, மதம், பார்ப்பதில்லை யென்றும், தன்னை யார் உண்மையாய் நேசிக்கிறார்களோ அவரிடம்தான் போவதைக் குறிக்கிறது.

இதுவரைக்கும் பலவித உத்ஸவங்களைப்பற்றி சொன்னோம். இனி கடவுளிடம் மனிதன் நடந்துகொள்ளும் விஷயத்தைப்பற்றி பேசுவோம். கோயில்களில் மனிதர் பொதுவாக அர்ச்சனை என்று செய்கிறார்கள். அதாவது கடவுளின் பெயர்களைச் சொல்லுகிறார்கள். இதில் இரண்டு வகையுண்டு. அஷ்டோத்திர நாம அர்ச்சனை என்றும் சகஸ்ர நாம அர்ச்சனை என்றும் இரண்டு வகை. இதில் அஷ்டோத்திர நாம அர்ச்சனை என்பதில் கடவுளின் 108 பெயர்களைச் சொல்வது. சகஸ்ர நாம அர்ச்சனை என்பதில் கடவுளின் 1008 பெயர்களைச் சொல்வது. இப்படி பெயர்களைச் சொல்வதென்பது மனதை ஒருநிலைப்படுத்துவதற்குப் பழக்குவதாகும். இந்த அர்ச்சனைக்கு பிறகு தேங்காய் உடைத்து சூடம் கொளுத்துகிறார்கள்.

உண்மையைக் காணுவதில் மூன்று படி சொல்லியிருப்பதில் பக்தி என்பதுதான் முதல் படி, எல்லாவற்றிற்கும் கீழான படி. இதுவாவது கடவுளிடத்தில் அன்பு பாராட்டுவது. இதுவும் இரண்டு பிரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சரியை, கிரியை என்று 2 பிரிவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சரீர மூலமாகவும், அறிவின் மூலமாகவுமென சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்றினால் கோவில் கட்டுவதும், அதை சுத்தம் செய்வதும், தோட்டம் உண்டுபண்ணுவதும், அதில் கடவுளுக்கென்று மலர்கள் உண்டுபண்ணுவதும் முதலியவை. இவைகளைக் கூலிக்கு செய்வதில் பலனில்லை. மனப்பூர்வமாக எப்போதும் அவனையே நினைத்துக்கொண்டு செய்ய வேண்டும். இது மனதை ஒருநிலைப்படுத்துவதற்கு ஒரு வழி. மற்றொன்று அறிவின் மூலமாய் அறிவது. எப்போதும் அவனைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பதும், அவனைப்பற்றிப் புகழ்ந்து பாடிக்கொண்டிருப்பதுமாம். இவைகளினால் மனம் வேறெதிலும் செல்லாமல் அவன்பேரிலேயே இருக்கும்.

ஒரு கதை ஒன்றிருக்கிறது. கிருஷ்ணன் என்பவன் அநேக கோபிப்பெண்களுடன் ஓடித்திரிந்தானென்றும், அவர்களுடன் அன்பின் காரணமாக விளையாடி பரிகாசம் செய்தானென்றும், ஒரே காலத்தில் அநேகருடன் அப்படிச் செய்தானென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கோபியும்

அவனிடமிருக்கும் அன்பைக் குறிக்கிறது. இது யாரொருவர் தன்னை உண்மையாக நேசிக்கிறார்களோ அவர்களிடம் கடவுள் இருக்கிறார் என்றும், அப்படி அநேகர் இருந்தாலும் எல்லாரிடத்திலும் அவர் ஒரே காலத்தில் இருப்பாரென்றும் குறிக்கிறது. இதற்கு அனுசரணையாக மற்றொரு கதை இருக்கிறது. அநேக கோபிகள் தங்கள் ஆடைகளைக் களைந்து ஒரு குளத்தங்கரைமேல் வைத்துவிட்டு நிர்வாணமாக அக்குளத்தில் நீராடிக்கொண்டிருந்தார்கள். அதுசமயம் கிருஷ்ணன் வந்து அந்த ஆடைகளை எடுத்துக்கொண்டு பக்கத்தில் இருந்த மரத்தின்மேல் ஏறி ஆடைகளை அம்மரத்தின் கிளைகளில் கட்டிவிட்டுத் தான் அம்மரத்தின்மேல் ஆனந்தமாயிருந்துகொண்டிருந்தான். கோபிகள் நீராடல் முடித்து கரைக்கு வந்து பார்க்க தங்கள் ஆடைகள் அங்கு இல்லாமலிருப்பதையும், ஆடைகள் மரக் கிளையில் கட்டப்பட்டிருப்பதையும், கிருஷ்ணன் அங்கு ஆனந்தமாயிருப்பதையும் பார்த்து, அவனை, தங்கள் ஆடைகளைத் திருப்பிக் கொடுக்கும்படி தங்கள் மர்ம பாகத்தை மூடிக்கொண்டும், மானத்துடன் கேட்டார்கள். அவன் இவர்களைத் திரும்பிக்கூட பார்க்கவில்லை. இது பலியாதென்று உணர்ந்து பெண்கள் தங்கள் மானத்தையும் மறந்து நிர்வாணமாக நின்று ஆடைகளைக் கேட்க கிருஷ்ணன் அவைகளைக் கொடுத்தான் என்பது கதை. இது எதைக் குறிக்கிறதென்றால் கோபிகள் தானென்றும், தனது உடல் என்றும், மானம், அவமானம் என்பவைகளை மனதில் வைத்துக்கொண்டும், அதாவது தான் தனது என்பவை இருக்கும்வரை கேட்டால் பலிக்கவில்லை. எந்த வினாடி, தான், தனது என்பதை மறந்து கடவுளிடம் போனால் கேட்டது பலிக்கும் என்று உணர்த்துகிறது.

ஆகவே கடவுளுக்கு ஒருவன் செய்யவேண்டிய கடமை என்னவென்றால் அவரை உண்மையாக நேசிக்கவேண்டும். நான் எனது என்பதை மறக்கவேண்டும். சும்மா கடவுளின் பெயரைச் சொல்லிக்கொண்டு தன் நலத்திற்காக எதைச் செய்தாலும் அதற்கு ஒரு பலனுமில்லை.

---




வடலூர் ஞானசபை—படம்.

# வடலூர் ஞானசபை

வடலூர் என்னும் ஊரில் இராமலிங்கசுவாமி அவர்கள், சிற்சபை அல்லது சத்தியஞானசபை என்று ஒரு கட்டிடம் அமைக்கச் செய்தார்கள். அது நமது உடலில் அடங்கியிருக்கும் தத்துவங்களில் சிலவற்றை கட்டிட உருவமாக அமைத்தார்கள். அதினுள் ஒரு ஜோதியை வைத்து, அதை முன் 6 அல்லது 7 திரைகளிட்டு மறைத்து, பின் ஒவ்வொரு திரைகளாக எல்லா திரைகளையும் நீக்கி உள்ளிருக்கும் ஜோதியை எல்லாரையும் பார்க்கும்படி செய்யப்படுகிறது. அதன் நோக்கம், நம் சரீரத்தில்தான் அந்த ஜோதி அல்லது ஒன்று இருக்கிறது. அதை நமக்கு தெரிய ஒட்டாமல் மறைக்கும் மறைப்புகளை நீக்கினால் அதைக் காணலாம் என்று உணர்த்த ஏற்பட்டது. தற்காலம் நடப்பதுபோல் ஒவ்வொரு திரைகளையும் நீக்கும்போது ஒரு தரகன் நடுவில் நின்று சூடம் கொளுத்தி அதற்கு காண்பிப்பதும், அப்போது அங்கு கூடியிருக்கும் மக்கள் அரகரா என்று சொல்லிக்கொண்டு கன்னத்தில் போட்டுக்கொள்வதற்கல்ல.

பகுத்தறிவுள்ள மனிதர்களாகிய நாம், நம் பகுத்தறிவை உபயோகப்படுத்தி ஊர்ந்து அந்தக் கட்டிடத்தை நோக்கினால், முதலில் ஒரு நீண்ட சதுரமாயுள்ள கட்டிடமும், அதற்கு முக்கோண வட்டமாக ஒட்டுக்கூரையும் தோன்றும். அந்த நீண்ட சதுரத்து பின்பக்கம் அரைவட்டமாக ஒரு கனத்த இருப்பு சங்கிலி போடப்பட்டிருக்கிறது. இந்த சங்கிலி அரைவட்டத்துக்குள், அந்த நீண்ட சதுரத்தின் நீண்ட ஒரு பக்கத்தை ஒட்டி ஒரு 8 பட்டை கட்டிடமும் இருக்கிறது. இதற்கு சுற்றி 8 பக்கமும் தாழ்வாரம் இருக்கிறது. இந்த தாழ்வாரம்மேல் மெத்தையாக மூடப்பட்டிருக்கிறது. இதில் முன்பக்கம் தாழ்வாரம் போக மிச்சம் 7 தாழ்வாரத்தைச் சுற்றிலும் சுமார் 3 அடி உயரமுள்ள கைப்பிடி சுவர் கட்டப்பட்டிருக்கிறது. அந்தச் சுவர் ஒவ்வொன்றிலும் 9 துவாரங்கள் உண்டு. ஆக 63 துவாரங்கள் உண்டு. ஒவ்வொரு சுவற்றிலும் 4 தூண்கள் உண்டு. ஆக 28 தூண்கள் உண்டு. உள் கட்டிடம் முன்பக்கம் போக மீதி 7 பக்க சுவற்றிலும் ஒவ்வொரு பக்கமும் 2 ஜன்னல்களும் ஒரு வாசல்படியுமாக 14 ஜன்னல்களும் 7 வாசல்படிகளும் இருக்கின்றன. இவைகளுக்கு கீழ் அந்த சுவர்களில் முன்னதும் பின்னதும் போக மீதி 6 பக்க சுவர்களில் ஒவ்வொன்றிலும் ஒரு சிறிய நீண்ட சதுர ஜன்னல் உண்டு. இவை ஒவ்வொன்றும் முப்பிரிவாக

காட்டீப்பட்டிருக்கின்றது. பின் சுவற்றில் ஒரு சிறு வாசல் படி உண்டு. அதுவழியாய்ப் போனால் உள்ளே ஒரு சுரங்க அறை இருக்கிறது. இந்த 8 பட்டை கட்டிடத்திற்குமேல் கூரையாக முதலில் 8 பட்டை கூரையும், அதற்குமேல் ஒரு 4 பட்டை கூரையும், அதற்குமேல் ஒரு 6 பட்டை கூரையும், அதற்குமேல் ஒரு முனையில் முடியும் வட்டமான கூரையும் இருக்கின்றன.

இவைகளின் உட்பொருளை நோக்குவோம்:— நமது உடல் 5 பெரும் விஸ்துக்களால் ஆனது என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் நமது ஞானநூல்களில் மண்ணை சதுர உருவகமாகவும், நீரை ஒரு நீண்ட சதுரத்தின்மேல் அரைவட்ட உருவமாகவும், தீயை முக்கோண உருவமாகவும், காற்றை அறுகோண உருவமாகவும், ஆகாயத்தை வட்ட உருவமாகவும் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் கட்டிடத்தில் (பக்கத்தில் இருக்கும் படத்தைப் பார்க்கவும். அந்த 8 பட்டை கூரைக்கு மேலிருக்கும் மண் என்று குறிப்பிட்ட சதுர கூரை மண்ணையும், கீழ்நீண்ட சதுரத்தின்மேல் அரைவட்டமாக போடப்பட்ட சங்கிலியும் (நீர் என்று குறிக்கப்பட்டது.) நீரைக் குறிக்கின்றன. நீர் தனக்காக ஒரு உருவமுமின்றி, எந்த பாண்டத்தில் வைக்கிறோமோ அதன் உருவத்தை ஏற்றுக்கொள்வதுபோல், எந்த உருவமாக வேண்டுமானாலும் அமைத்துக்கொள்ளக்கூடிய சங்கிலியை போடப்பட்டிருக்கிறது. முக்கோண ஓட்டுக்கூரை தீயைக் குறிக்கிறது. 4 பட்டைக் கூரைக்கு மேலிருக்கும் 6 பட்டைக் கூரை காற்றைக் குறிக்கிறது. அதற்கு மேலிருக்கும் முனையில் முடியும் வட்டக்கூரை ஆகாயத்தைக் குறிப்பதுடன் எல்லாம் கடைசியில் ஒன்றுமில்லாமல் போவதைக் குறிக்க கடைசியில் ஒரு முனையில் போய் முடிகிறது. தாழ்வாரத்தின் கைப்பிடி சுவற்றில் இருக்கும் 63 துவாரங்களும் 64 கிளை நாடிகளைக் குறிக்கின்றன. தாழ்வாரங்களில் இருக்கும் 28 தூண்களும் 28 நாடிகள்கொண்ட தொப்பூழண்டையிருக்கும் குண்டலி சக்தியைக் குறிக்கின்றன. இது தொப்பூழுக்கு மேல் 4 அங்குலமாகவும், கீழ் 4 அங்குலமாகவும் உள்ளது. 28 நாடிகள் கொண்டது. இவை மேல் 10ம் கீழ் 10ம் பக்கத்திற்கு 4 ஆக இருப்க்கங்களுக்கும் 8ம் உள்ளன. 14ஜன்னல்கள் ஞான இந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, அந்தக்கரணங்கள் 4 என்பவைகளைக் குறிக்கின்றன. அந்த 7 வாசல் படிகளும் நமது எழுவகைத் தோற்றங்களைக் குறிக்கின்றன. கீழ் 8 பட்டை கட்டிடம் நமது உடல் ஆயிருக்கும் 8 வித

வஸ்துக்களைக் குறிக்கின்றன. கூரையில் முதல் 8 பட்டை பாகம் நமது உடலிலிருக்கும் 8 அங்கங்களைக் குறிக்கின்றன. முப்பிரிவாக காட்டியிருக்கும் 6 நீண்ட சதுர ஜன்னல்கள் (1) சத்துவம், ரஜம், தமம் என்கிற முக்குணங்கள் (2) காமம் குரோதம், உலோபம், என்பன முக்குணங்கள், (3) ஆணவம் கன்மம், மாயை என்னும் மும்மலங்கள், (4) பிராரப்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்பன மூவினைகள், (5) மாமிசம் காரணம், அறிவு என்பன மூன்று உடல்கள் (6) ஞாதுரு ஞேயம், ஞானம் அன்பன் திரிபுடிகள் என்பவைகளைக் குறிக்கின்றன. பின் சுவற்றிலிருக்கும் வாசல்படி இடகலை, பிங்கலை என்னும் நாடிகளையும், உள்ளிருக்கும் சுரங்க அறை சுழிமுனை நாடியையும் குறிக்கின்றன. முதல் கீழ் 8 பட்டை கட்டிடம் 1, அதற்குமேல் 8 பட்டை அறையும் தாழ்வாரங்களும் 2, அதற்குமேல் 8 பட்டை கூரை 3, அதற்குமேல் 4 பட்டை கூரை 4, அதற்குமேல் 6 பட்டை கூரை 5, அதற்குமேல் முனையில் முடியும் வட்டமான கூரை 6, இவை 6 கூறுகளும் நமக்கு இருக்கவேண்டிய ஆறு நிலைகளாகிய சமம், தமம், விடல், சகித்தல், தியானம், தாரணை என்பவைகளைக் குறிக்கின்றன.

நீக்கப்படும் முதல் ஆறு திரைகள், மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன ஆறு ஆதாரங்களையும், ஏழாவது திரை சகஸ்ராதார நாடியையும் குறிக்கின்றன.

குறிப்பு :—இந்த கட்டிட மேற்பார்வையாளர்கள், அந்தக் கட்டிடத்தின் உள் மர்மங்களை யாரும் தெரிந்துகொள்ளாவண்ணம் யாரையும் உள்விடாமல் வைத்திருக்கிறார்கள். ஆகையால் எனக்கு தெரிந்த சில விஷயங்களைக்கொண்டு இது எழுதப்பட்டது.

---

## காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம் என்றால் எல்லாம் காய்ந்த, அற்ற இடம். காஞ்சிபுரத்தில் விசேஷமென்னவென்றால், அந்த ஊர் மத்தியில் இருப்பது காமாக்ஷி என்னும் சக்தி கோயில். அந்தக் கோயிலிலும் அந்த அம்மன் என்ற உருவத்திற்கு யாதொன்றும் கட்டப்படவில்லை. ஆனால் அந்த உருவத்தின் முன் போடப்பட்டிருக்கும் சக்கரத்திற்குத்தான் அர்ச்சனை முதலிய பூசைகள் நடைபெறுகின்றன.

அந்த ஊரில் எல்லாவிதமான சில்லரை கோயில்கள் அநேகம் இருக்கின்றன. முக்கியமாக தெற்கு பக்கத்தில் வரதராஜர் என்ற விஷ்ணு கோயிலும், வடக்கு பக்கத்தில் ஏகாம்பரீஸ்வரர் என்ற சிவன் கோயிலும் இருக்கின்றன. இந்த ஊரில் இருக்கும் எல்லா வைஷ்ணவ, ஈஸ்வர கோயில்களிலிருக்கும் உருவங்களும், உத்ஸவத்தின்போது புறப்பட்டால், இந்த காமாக்ஷியம்மன் கோயிலை சுற்றித்தான் போகிறது.

சக்தி என்பதற்கு உருவம் கிடையாது. அதை உண்டாக்குவது அந்தச் சக்கரம் என்பது பொருள். அந்தச் சக்கரமும் 45 எழுத்துக்கள் உடையது. ஒவ்வொரு எழுத்தும் நமக்கு இருக்கும் நாடிகளில் ஒவ்வொரு நாடியைக் குறிக்கின்றன. நமது முக்கியமான 45 நாடிகளை அடக்கினால் நமக்கு சக்தி உண்டாகிறது என்று குறிக்கிறது. நமக்கு முதலில் அந்த சக்தி வேண்டுமென்பது அந்த ஊரில் அக்கோயில் முக்கியமாக மத்தியில் இருப்பது குறிக்கிறது. அந்த சக்தியினால் தான் எல்லாம் கிட்டும் என்று அநேக சில்லரைக் கோயில்கள் அவ்வூரிலிருப்பதும், அந்தக் கோயில்களிலிருக்கும் உருவங்கள் அந்த சக்தி கோயிலைச் சுற்றி செல்வதும் குறிக்கின்றன. ஒவ்வொரு கோயிலும் ஒவ்வொருவித சக்தியைக் குறிக்கிறது. தெற்கேயிருக்கும் வரதராஜர் கோயில்—பெயரிலிருந்தே அது எல்லாவித வரத்திற்கும் அரசர் என்று தெரிகிறது.—அந்த சாதா சக்தியைக்கொண்டு முக்கிய சக்தி கிடைக்கும். இது தான் விஷ்ணு பால்கடல் கடைந்ததில் 8 தலை குதிரை தோன்றிற்று எனப்படுவது. அதுதான் அஷ்ட (8) மாசித்திகள் என்று சொல்லப்பட்ட முக்கியமான 8 வித சக்திகள். ஆகவேதான், அந்தக் கோயிலில் விஷ்ணு உருவம் படுத்திருக்காமல் நிற்கிற உருவமாக இருக்கிறது. அந்த உருவமும் சாதாரண தரைமட்டத்தில் இல்லாமல் மலையென்று சொல்லப்பட்ட உயர்ந்த கட்டிடத்தில் இருக்கிறது. அதாவது உலக மட்டத்திற்கு, உலக அறிவிற்குமேலே போகவேண்டுமென்று உணர்த்துகிறது. அந்த மலைக்கும் 18 படிகளிருக்கின்றன. அதாவது அதற்கு நாம் 18 தத்துவங்களைத் தாண்டவேண்டுமென்பது. இந்த சக்தி நமது முடிவுக்குப் பயன் தாராது எனத்தான்,

அதை தெற்கு பக்கம் வைத்திருக்கிறது. அதற்குமேல் செல்ல வேண்டுமெனத்தான் வடக்கு பக்கம் ஏகாம்பரீஸ்வரர் கோயில் என்ற கோயில் இருக்கிறது.

பாற்கடல் கடையும்போது மற்றெல்லா வஸ்துக்கள் வந்தும், கடைசியில், அமிர்த கலசம் நமக்கு இறப்பில்லா திருத்தலைக் கொடுப்பது. அப்படி இறப்பில்லாமையைக் கொடுப்பதையே ஏகாம்பரீஸ்வரர் என்று சொல்லப்பட்டது. அதாவது ஏகம் + அம்பரத்தைக் கொடுப்பது. அதாவது முதலில் எல்லாம் ஒன்றே என்று தோன்றி கடைசியில் எல்லாம் ஒன்றுமில்லாத வெளியாய்விடும் என்று உணர்த்துகிறது.

---

## தஞ்சைபெரியகோயில்.

கோயிலென்பதும், ஆலயமென்பதும் ஒன்றே. கோயிலென்பது கோ + இல். அதாவது கோ-பசு—சிவன்-சிவாத்மா இருக்கும்—இல்—வீடு—இடம். அதேபோல் ஆலயம் என்பது ஆ + லயம். அதாவது ஆ—பசு—சிவன்—சிவாத்மா, லயம்—லயிக்குமிடம். சிவனும் சிவாத்மாவும் சிவனுடன் பரமாத்மாவுடன் லயிக்குமிடம், இரண்டாகக் கலக்குமிடம், இரண்டும் ஒன்றாகுமிடம், ஒன்றுவதைக் குறிக்குமிடம்.

முக்கியமாகவே கோயில்களென்பது, நமது தென்னாட்டில் தமிழ் நாட்டில்தான், இங்கிருக்கும் கட்டிடங்கள் மிக வேலைப்பாடுடையது. அநேக பொருள்களை உள்ளடக்கி யிருக்கிறது. இந்தக்கோயில்கள் நம் தமிழ் மன்னர்களால் கட்டப்பட்டவை. அவர்கள், தங்களிராச்சியத்திலிருந்த சில வித்வான்களைக் கொண்டு அமைக்கச்செய்தார்கள். அவர்களும் நம் மதத்திலுள்ள நாடிகள், தத்துவங்கள், முதலிய விஷயங்களை அந்தக் கட்டிடங்களில் அமைக்கச் செய்தார்கள். வெவ்வேறு நாட்டில். வெவ்வேறு வித்வான்களால் அமைக்கப்பட்டதினால், அவரவர்களறிவும் வித்தியாசப்பட்டிருக்குமாகையால் அந்தக் கட்டிடங்களமைப்பும் இடத்திற்கிடம் மாறுபட்டே யிருக்கின்

றன. முக்கியமாக தென்னாட்டில், சைவ, வைணவ ஆலயங்களில் சிறந்தவையென்று சொல்லப்படும் சிதம்பரம், திருவரங்கம் ஆலயங்கள் ஒருவித அமைப்பு. இவைகளில் தத்துவங்களும், நாடிகளும், கீழ் கட்டிடத்தி லமைக்கப்பட்டுள்ளன. இவைகளின் கர்ப்பக்கிரகமேலிருக்கும் விமானங்களும் ஒருவித அமைப்பாயுள்ளன. அடுத்தாற்போல் இன்னும் தெற்கே சென்றால் மதுரை, திருநெல்வேலி முதலிய இடங்களிலிருக்கும் கோயில்கள் ஒருவித அமைப்பு. ஒரே வளைவுக்குள், சிவனுக்கென்றும், அம்மனுக்கென்றும் தனித்தனியே கோயில்களிருக்கின்றன. இந்நாட்டி லின்னம் சில கோயில்களில் 'பராசக்தி' யென்று ஒன்று வைத்து, அதற்குத் தனி ஆலயமும், அந்த ஆலயமும் சிவன், அம்மன் ஆலயங்கள் மத்தியிலும் அமைக்கப்பட்டுள்ளன. முக்கியமாக நம் சோழநாட்டில் சில முக்கிய கோயில்களில், சிவன்கோயில்களில், கர்ப்பக்கிரகம் சுவற்றில், சுவாமிக்கு பின்னால், பின்பக்கம் பராசக்தியினுருவம் மாத்திரம் அந்த சுவற்றிலேயே இருக்கும். சில இடங்களில் தத்துவங்களை வெளிமதில் வாசல்படிமே லிருக்கும் கோபுரத்திலமைத்து பெரிய கோபுரமாகக் கட்டப் பட்டிருக்கிறது. தஞ்சாவூர் பெரியகோயில் முதலிய சிலயிடங்களில் கர்ப்பக்கிரகம் மேலிருக்கும் விமானத்தைப் பெரிதாகக் கட்டி அதில் அத்தத்துவங்களை யமைக்கச் செய்திருக்கிறார்கள். ஒரு சில இடங்களில் அந்தக் கர்ப்பக்கிரகம் மேலிருக்கும் விமானம் ஒரு தனியமைப்பாயுள்ளது. அதில் மத்தியில் சில தத்துவங்களை வைத்து, ஒரு சிறு விமானமமைத்து, அதைச் சுற்றி ஒரு பிரகாரமு மமைத்து, அந்த மதில் சுவற்றில் அநேக யிடங்களில், சிறுசிறு கோட்டைமாதிரியும் கட்டியிருக்கிறார்கள். இவைகளில் அவ்வளவிலும் தத்துவங்களமைக்கப் பட்டிருக்கின்றன. சென்னைக்குச் சமீபமாயுள்ள சில ஆலயங்களிலந்தக் கர்ப்பக்கிரகத்தின் மேலிருக்கும் விமானம் ஒருவித அமைப்பாயுள்ளது. அடி சதுரமாயிருந்து முடியுமிடத்தில் ஒருவித முக்கோணமாக, மூன்று முகங்களையுடையதாக விருக்கின்றது. அதாவது அமைக்கச் செய்த வித்வான்கள், தங்களறிவிற்கேற்ப அந்தத் தத்துவங்களையும், நாடிகளையும், அந்தந்த உருவமாக அமைக்கச் செய்திருக்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லா சங்கரன்கோயி லென்னுமூரில், சிவன் கோயிலில், சங்கரநாராயணனென்ற பெயருடன் சிவனும், விஷ்ணுவும் கலந்த ஒரு உருவம், சிவனும் விஷ்ணுவுமொன்றே யென்று குறிப்பிட, ஒரு ஆலயத்திலமைத்து, அந்த ஆலயமும் சிவன் ஆலயத்திற்குப் பக்கத்திலமைக்கப்பட்டிருக்கிறது.

இப்போது நாமெடுத்துக் கொண்ட தஞ்சை பெரிய கோயிலைப்பற்றி சற்று ஆராய்வோம். அதிலிருக்கும் மூர்த் திக்கு 'பிரகத் + ஈஸ்வரர்' என்ற பெயர். 'பிரகத்' என்றால் மூலமாயுள்ளது, ஆதியாயுள்ளது என்று பொருள், அதாவது, ஆகாயம். ஆகாயத்திலிருந்து உலகமே தோன்றி, உலகம் மறுபடியும் ஆகாயத்திலேயே முடிகிறது. நம் உடலையே எடுத்துக் கொள்வோம்; உடலின் உற்பத்தியை கவனிப்போம்: முதலில் ஆகாயத்தி லிருந்து உண்டாகும் மனதின் சேட்டையால் உடலிலிருக்கும் வாயுக்க ளியக்கப்பட்டு, ஆணுக்கும் பெண்ணுக்கும் காமத்தை யுண்டாக்கி, இருவர் காமத்திலிருந்து கொதிப்பை, தீயை யுண்டாக்குகிறது. ஆகவே ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தீயுமுண்டாகிறது. அந்தத் தீயினிமித்தம் இருவரும் சேர, சுக்கிலம், சுரோணிதமென்னும் நீர் உண்டாகிறது. இவைகளிரண்டும் சேர்ந்து மண்ணாகிய பிண்ட உருவமுண்டாகிறது. பிறகு பிண்டம் குழந்தையுருவமாகிறது. பிறகு குழந்தைக்கு கருவி, கரணங்களுண்டாகி 96 தத்துவங்களும் அந்த மனித உடலிலுண்டாகிறது. உள்ளிருக்கும் மூர்த்தி ஆகாயம், நம் நாடிகளும் தத்துவங்களும்தான் அந்தக் கர்ப்பக்கிரகத்தின்மீதிருக்கும் பெரிதாகக் கட்டப்பட்ட விமானம் குறிக்கிறது. பிறகு இந்த உடலும் கடைசியில் அந்த ஆகாயமென்கிற ஒன்றுமில்லாத நிலைக்குப் போகப்போகிறது. அந்த ஒன்றுமில்லாத வெளித்தான் நிலைத்திருப்பது. அதுதான் நம்மிலுள்ளது. மகா + ஆகாசமும், கட + ஆகாசமும் ஒன்றே. கடம்தான் பிரித்துக் காட்டுகிறது. கடமுடைந்தால் ஒன்றாகிவிடுகிறது. அதே போல, வெளியாகாசம், சிவன், பரமாத்மா, பதி, பிதா என்பதும், நம்முள்ளிருக்கும் ஆகாசம், சீவன், சீவாத்மா, பசு, திருக்குமாரன் என்பதும் ஒன்றே. நம் அஞ்ஞானமே, மாயையே, பொய்த்தோற்றமே பிரித்துக் காட்டுகிறது. நம் முடல் மறைந்தால் இரண்டுமொன்றே. இதை உணர்த்தத்தான் நம் உடலாகிய அந்தக் கர்ப்பக்கிரகத்தில், நாமாகிய, வெளியாகிய, மூலமாகிய, அந்த மூர்த்தி இருக்கிறது. அதைக் காணத்தான் கர்ப்பக்கிரகத்திற்கு வெளியில் இரஷபமென்னும் பசுவாகிய நம்மைக் குறிக்கும் நந்தி, அந்த மூர்த்தி உருவத்தை சதா நோக்கியே யிருக்கிறது. ஆகவே நாம், நம் அறிவை பகிர்முகப்படுத்தாமல், வெளி விஷயங்களில் செலவிடாமலேப் போதும், நிலைத்த அந்தர்முகத்தோடு, உள்நோக்கியேயிருந்தால், சிவனாகிய நாம், சிவமாகிய அந்த வெளியைக் காணலா

மென்று உணர்த்துகிறது. அந்தக் கர்ப்பக்கிரகத்தைச் சுற்றியிருக்கும் அகண்ட பிரகாரம் நமக்கு உரைபோலுள்ள கோசங்களைக் குறிக்கிறது.

இந்தத் தஞ்சை கோயிலால் நாம் தெரிந்துகொள்வதென்னவென்ருல், மகாகாசத்தின் ஒரு பகுதி, சுத்த வெளியின் ஒரு பகுதி, ஒரு தாய், பெண்ணின் வயிற்றிலிருந்து, நாமாய், மனிதனுய், உலகத்தில் தோன்றுகிறது. இதையேதான் கிறிஸ்துவ மதத்தில் மேரி என்னும் விவாகமாகாத பெண் வயிற்றில், பிதாவின் பரிசுத்த ஆவி, மகாகாசத்தின் ஒரு பகுதி, சுத்த வெளியின் ஒரு பகுதி, புகுந்து இயேசு கிறிஸ்து உருவமாத வெளிவந்தாரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தக் கோயிலின் உள் மிகப்பெரிய பிரகாரத்தில் சிறிய கர்ப்பக்கிரகம் அமைத்து, அந்தக் கர்ப்பக்கிரகத்திலும் அறையை அடைத்து ஒரு இலிங்க உருவமும் அமைத்திருக்கிறது. ஆகாயம் மிகப்பரந்தது. அதைக் குறிக்க, மகா ஆகாசத்தைக் குறிக்க, அந்த மிகப்பெரிய பிரகாரம். மகா ஆகாசத்தில், கட ஆகாசத்தைக் குறிக்க, அந்தப் பெரிய பிரகாரத்தில் சிறிய கோயில். கடத்தில் ஆகாசம் நிறைந்திருப்பதைக் குறிக்க, கர்ப்பக்கிரகமடங்கவிருக்கும் இலிங்க உருவம் குறிக்கிறது.

தஞ்சாவூர் பெரிகோயில் சுமார் 1000 வருஷங்களுக்கு முன் இராசராசசோழன் காலத்தில் கட்டப்பட்டது. அந்தக் கோயில் கட்டிட அமைப்புக்கு கர்த்தாவாகயிருந்தவர் அக்காலமிருந்த 'கருரார்' என்னும் பெரியவரென்று தெரிகிறது. அவர் ஒரு சித்தர், மகா ஞானி. தத்துவங்கள், நாடிகளெல்லாமுணர்ந்தவர். ஆகவே அவர் நம்மதத்திலுள்ள தத்துவங்களையும் நம் நாடிகளையும் மிகத் திறமையாக அந்தக் கோயில் கட்டிடத்தில் அமைக்கச் செய்திருக்கிருர். ஆகவேதான் அந்தக் கோயில் பெரிய பிரகாரத்தில் மேற்குப்பக்கம் அவருக்கு ஒரு இடமேற்படுத்தப்பட்டிருக்கிறது.

தஞ்சாவூரில் பழய கோட்டையில் தென்மேற்கு மூலையில் அதை ஒட்டி ஒரு பக்கத்தில் இந்த சிறிய கோயிலிருக்கிறது. இது சிறிய அளவில் அதாவது சுமார் 790 அடி நீளம் 400 அடி அகலமுள்ளதாயிருந்தாலும் இதற்கு பெரியகோயிலென்று சொல்லப்படுகிறது. இது அளவில் சிறியதாயிருந்தாலும் பொருளில் மிக மிகப் பெரியது. தஞ்சாவூரென்ருல்

தன்னையறிந்தயிட மென்று பொருள். அதாவது ஆன்மாவை அல்லது சீவனை உணர்ந்தயிடம். ஆன்மா சீவனும், பரம் சிவனு மொன்றே. சைவர்கள், தமிழர்கள், முதலில் ஆன்மாவை யுணரவேண்டியிருக்கிறது. ஆகவேதான் 'தற்பரம் கண்டு ளோர் சைவ சித்தாந்தரே' என்று திருமூலர் சொல்லியிருக் கிறார். ஆதலால்தான் எல்லா சிவன் கோயில்களிலும் முதல் பிரகாரத்தில் (கிழக்குப்பார்த்த கோயில்களில்) தென்மேற்கு மூலையில் விநாயகர் கோயிலிருக்கிறது.

தென்னாட்டிலுள்ள மற்றெல்லா கோயில்களைவிட இது தனி சிறப்பான மாதிரி யமைக்கப்பட்டிருக்கிறது. மற்ற கோயில்களில் 4 மதில் சுவர்களும், அவைகளுக்கு வெளியே ஐந்து பிரகாரங்களுமாகயிருக்கும். இதில் ஒரு மதில் சுவரும் அதற்குள் ஒரே பெரிய பிரகாரமுமாயிருக்கிறது. மற்ற கோயில்களில் மதில்கள் வாசல்படிகள்மேல் பெரிய கோபுரங் கள் கட்டப்பட்டிருக்கும். இதில் அந்த ஒரு மதில் வாசல் படியின்மேல் ஒரு சிறு கோபுரமும், அதற்குமுன் ஒரு வாசல் படியும், அதன்மேலொரு கோபுரமுமாகயிருக்கிறது. மற்ற கோயில்களில் முதலில் பலிபீடமும், அதற்கப்புரம் உயர்ந்த துஜஸ்தம்பம் என்கிற கொடிமரமும், அதற்கப்புரம் நந்தியு மிருக்கும். இதில் பலிபீடமும், அப்புரம் பெரிய நந்தியும், அப்புரம் சிறிய கொடிமரமும் இருக்கின்றன. மற்ற கோயில் களில் சபா மண்டபம், பிறகு அர்த்த மண்டபம், பிறகு கர்ப் பக்கிரகமும், சபா மண்டபத்திலிருந்து உள் பிரகாரத்திற்கு தனியே இருவழிகளும், படிகளுமுண்டு. இதில் அர்த்த மண் டபத்திற்கும் கர்ப்பக்கிரகத்திற்கும் மத்தியில் ஒரு சிறு மண் டபமும், அந்த மண்டபத்திலிருந்து பிரகாரத்திற்கு தனி இருவழிகளும், படிகளுமிருக்கின்றன. மற்றக் கோயில்களில் இலிங்கமிருக்கு மிடமாத்திரம் கர்ப்பக்கிரகமா யிருக்கும். இதில் இலிங்கமிருக்கும் அறையும் அதைச்சுற்றி ஒரு சிறு சுற்றுவழியும் சேர்த்துக் கர்ப்பக்கிரகமாயிருக்கிறது. மற்ற கோயில்களில் கர்ப்பக்கிரகத்தின்மேலொரு சிறு விமானம், கூர்க்கோபுரமுமிருக்கும். இதில் அந்தக் கர்ப்பக்கிரகமே மூன்றடுக்குகளாகவும், அவைகளின்மேல் 12 சிக்கலான அடுக் குகளுள்ள உயர்ந்த விமானம், கூர்க் கோபுரமும், அந்த விமான உச்சியில் வேறு 8 நந்திகளுமிருக்கின்றன. மற்றக் கோயில்களில் உள் பிரகாரத்தில் முன்பக்கம்போக இருவிலாப் பக்கங்களிலும், பின்புரமுமாக மூன்று பக்கங்களில் நீண்ட மண்டபங்களும், வலது விலாப்பக்கம் 63 மூவரென்ற உருவங் களும், பின்மண்டபத்தில் இலிங்கங்களும், இடதுபக்கம் மண்

டபம் காலியாகவுமிருக்கும். இதில் வலதுபுரம் மண்டபமில்லாமலும், பின்பக்கம், இடதுபக்கம் மாத்திரம் மண்டபங்களும் இவைகளிலடுக்கடுக்காக இலிங்கங்களும், ஆங்காங்கு தனித்தனியறைகளும், இவைகளில் வருணன், ஈசானியன் முதலிய சிறு கோயில்களு மிருக்கின்றன. மற்றக் கோயில்களில் இருக்கும் மூன்று பக்கமிருக்கும் மண்டபங்களில் தென்மேற்கு மூலையில் விநாயகர் கோயிலும், வடமேற்கு மூலையில் முருகன் (ஒரு தலையுடன்) கோயிலும், வடகிழக்கு மூலையில் ஆறுமுகன் கோயிலுமிருக்கின்றன. இந்தக் கோயிலில் பரந்த பிரகாரத்தில் தென்மேற்கு பக்கம் விநாயகர் கோயிலும், வடமேற்குப்பக்கம் ஆறுமுகனென்கிற சுப்பிரமணியன் கோயிலும், வடகிழக்குப்பக்கம் நடராசர் கோயிலு மிருக்கின்றன. மற்ற கோயில்களிலிருக்கும் ஐந்து பிரகாரங்களும் நமது ஐந்து கோசங்களையும் குறிக்கின்றன. இந்தக் கோயிலுக்கு முதலில் வண்டிகள் போகும் பாட்டை, பிறகு நீருள்ள அகழ், பிறகு ஒரு வாசற்படி பிறகு மதில்வாசல்படி, பிறகு பரந்த விசாலமான பிரகாரம், அதில் கர்ப்பக்கிரகம் இருக்கின்றன. பாட்டை நம்முடலாயிருக்கும் பிரிதிவியென்கிற மண்ணையும், அகழ்நீர்—நீரையும், முதல் வாசல்படி—தீயையும், அடுத்த மதில்வாசல்படி—வாயுவென்கிற காற்றையும், உள்வெளி—ஆகாசமென்கிற வெளியையும் குறிக்கின்றன.

நம் உடலில் 72,000 நாடிகளிருக்கின்றன. இவைகளில் முக்கியமானவை 6 எடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு 6 ஆதாரங்களென்று பெயர். இவைகளைத்தான் நாம் முதலில் அடக்கவேண்டியிருக்கிறது. முதலாயிருப்பது மூலாதாரமெனப்படுவது. பெயரிலிருந்தே அதுதான் மூலமாயிருப்பது என்று விளங்கும். இது நமக்கு சாதாரணமாக யிருக்க வேண்டிய உடலை 96 அங்குலமாக வகுத்து, மேல் 47½யும், கீழ் 47½யும் நீக்கி மத்தியிலிருக்கும் 1 அங்குல பாகத்திலிருக்கிறது. அதாவது, நமது முதுகெலும்பு வால் மூலை நுனியிலிருந்து, முதுகெலும்பு வால் அடிப்பாகத்தில், பக்கத்தில் 4 இடங்களிலிருக்கும் துவாரங்களின் வழியாய் வெளிவந்து, எல்லாமாக முன்பக்கம் ஒன்றாக சேருமிடம். ஆங்கிலத்தில் இதை Sacral plexus என்றழைப்பது. இரண்டாவது சுவாதிஷ்டானம் Prostate இது மூத்திரப்பைக்கு கீழிருப்பது, மூன்றாவது மணிபூரகம் (Epigastric) இது நமது இருதயத்திற்குச் சற்று கீழிருப்பது, நான்காவது அனாகதம் இருதயம் (Heart, cardiac). ஐந்தாவது விசுத்தியெனப்படுவது. இது இரண்டு பாகமாகயுள்ளது. ஃ மாதிரியுள்ளது. மேற்புள்ளி

வாக்குக்குக் காரணமாக யிருக்கும் அடிநாக்கிலுள்ளது (Laryngial), அதன் கீழ் இரு பக்கங்களிலும் மூச்சுக் குழாய் களிலிருப்பது, அடியிரண்டு புள்ளிபோலிருப்பது (Pharangial). கடைசியாக ஆருவதாகயிருப்பது ஆஞ்ஞை என்று சொல்லப்படுவது (cavernous plexus—Pituitory gland). இறுவ முன்னும் பின்னுமாகத் தலைமூளை யடிபாகத்திலிருப்பது. முதலாவது அறிவைக் கொடுக்கும். இரண்டாவது உடலில் அமிர்தத்தை, நீரைக் கொடுக்கிறது.

இந்தக் கோயிலில் முன்கோபுரம் மூலாதாரம், இரண்டாவது கோபுரம் சுவாதிஷ்டானம், நந்தியிருக்கும் 16 கால் மண்டபம் மூன்ருவது மணிபூரகம், இலிங்கமிருக்கும் கர்ப்பக்கிரகம் நான்காவது அஞகதம், கோயிலின் மேற்கு பிரகாரத்திலிருக்கும் வருணன் கோயில் ஐந்தாவது விசுத்தியில் அடிநாக்கைக் குறிக்கும் பாகம், பக்கமிருக்கும் உலகநாதர், தெய்வநாயகி கோயில்கள் மூச்சுக் குழாய்களிலிருப்பது. சிவகெங்கை யென்னும் கிணறு ஆஞ்ஞையைக் குறிக்கிறது. இந்தக்கோயில் பெரும்பொருளுள்ள கோயிலாகையால், ஆறு ஆதாரங்கள் தாண்டி நாம் ஞானம் பெற்று வெளியைக் காண வேண்டியிருப்பதால், மற்றக் கோயில்களி லிதற்கப்புரம் 1000 கால் மண்டபமிருப்பதுபோல் இதிலில்லாமல், இதில் வெறும் வெளியாகவே யிருக்கிறது.

அடுத்து அந்தக் கோயிலைக் கவனித்தால் உள், அகண்ட பிரகாரத்தின் மத்தியில் ஒரு சிறு மேடைமீது ஒரு சிறிய கோயிலிருக்கிறது. அந்தப் பிரகாரத்தின் மதில்சுவரோரமாக கீழ்கோபுரத்திற்கு தெற்கு நாகராஜனென்று ஒரு சிறு கோயிலிருக்கிறது. நாம் சாதாரணமாக கடவுளைக் காண கோயிலின் பிரகாரத்தைச் சுற்றி பிறகுதான் கோயிலுக்குள் போகவேண்டி யிருக்கிறது. அப்படிப் போகும் போது முதலிலிருப்பது நாகராஜன் கோயில். நாகராஜனென்ருல் தேவவுலகுக்கரசனென்று பொருள். அதாவது முதலில் மனிதத்தன்மை, அதாவது கீழ்நிலையை விட்டு, தெய்வத்தன்மை, அல்லது மேல் நிலையாகிய மேல் குணமுடையவனுக வேண்டும். பிறகு போகும்போது பிரகாரத்தின் தெற்கு பக்கம் இயமனென்கிற கோயிலுள்ளது. இயமனென்பதிற்கு அடக்கமென்பது பொருள். இது மாறியமைத்தலைக் குறிக்கிறது. அதாவது பிறவியைக் குறைத்து காரண உடலென்ற கர்மத்தை யழிக்கவேண்டும். பிறகு தாண்டவிருப்பது வட மேற்கு மூலையிலிருக்கும் குபேரனென்னும் கோயில். குபேர

என்றால் சந்திரனென்று பொருள். நமக்கு ஞான அறிவு பெருகவேண்டுமென்பது. இதற்குமேல் நாம் தாண்டவிருப்பது நிருதி யென்னும் கோயில். நிருதி யென்றால் முதலேழு வள்ளலிலொருவன். அதாவது ஓர் நிலையையடைய யிருக்கும் படிகளைத் தாண்டுவதைக் குறிக்கிறது. அடுத்திருப்பது வடகிழக்கு மூலையிலிருக்கும் ஈசானியன் கோயில். இதற்கு சிவனென்று பொருள். அதாவது ஞான படிகளெல்லாம் தாண்டி ஞானமடைவதென்று பொருள். பிறகிருப்பது நாகக்கன்னிகை கோயில். இதில் நாம் ஞானத்தினுலுண்டாகும் சக்தியைக் குறிக்கிறது. பிறகு நாம் தாண்டுவது இந்திரன் கோயில். இது கடவுள் தன்மையைக் குறிக்கிறது.

மற்றொரு வழியாகப் பார்த்தால் கோயிலின் தென்மேற்கு மூலையில் ஒரு இடத்தில் முதலில், இலிங்கங்களின் மேலுள்ள குழவிகள் மட்டும் 9 இருக்கின்றன. இவைகளுக்கடுத்தாப்போல் இலிங்கங்கள் குழவிகள் மட்டும் 108 இருக்கின்றன. இவைகளுக்கப்புறம் 8 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம் முதலில் நம் 9 துவாரங்களையும் கட்டி, பிறகு 108 முக்கிய நாடிகளையும் தாண்டி பிறகு 8 வித சக்திகளையும் கடந்தால்தான் ஒன்றைக் காணலாமென்றும் குறிக்கிறது.

இதற்கப்புறம் கவனித்தால், மேற்குப்பக்கம், வடக்குப் பக்கமிருக்கும் மதில் சுவர் ஓரமிருக்கும் மண்டபத்தில், ஒரு சிறு அறையில் ஒரு இலிங்கம் வைத்து பதினொரு சிறு கோயில்களிருக்கின்றன. இவை நாம் தாண்டயிருக்கும் 11 அத்துவாக்களைக் குறிக்கின்றன. அவையாவன:— (1) சீவாத்துவா—நான் சிவன், நான் மனிதனென்று நினைப்பது, (2) சாமானிய ஜாதித்துவா —சாமானிய மனித வித்தியாசம் (3) விகாரத்துவா—பிறந்தேன், இருக்கிறேன், வளர்ந்தேன், படுத்தேன், இளைத்தேன், நசித்துப்போகிறேனென்று நினைப்பது (4) அங்கத்துவா — நான் ஆண், பெண், அலியென்று நினைப்பது (5) வர்ணத்துவா—நான் பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், என்றெண்ணுவது. (6) விசேஷஜாதித்துவா — தெலுங்கன், தமிழன், கணக்கன், போதாயனன் வகையரா போன்று நினைப்பது. (7) ஆசிரமத்துவா—பிரமச்சாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி யென்று வித்தியாசிப்பது (8) நாமத்துவா—கிருஷ்ணன்—இராமன், கருப்பன், பொன்னன் என்பன போன்று வித்தியாசித்தறிவது (9) சமஸ்காரத்துவா—தீக்ஷிதன் சோமயாஜி, மகாவிரதயாகி வகையராபோல் நினைப்பது (10) வேஷத்துவா—மாயாவாதி, தத்துவ வாதி, பாகவதன்,

சைவன், வீரசைவன் முதலியபடி நினைப்பது (11) கிரியை யாதித்துவா—உபாத்தியாயன், சீடன், பக்தன், ஞானி, தச்சன் கருமானென்பனபோன் றறிவது.

மேற்கொண்டு கவனித்தால் வடமேற்கு பக்கம் மண்டபத்தில் 1 இலிங்கம், பிறகு 4 இலிங்கங்கள், பிறகு 5 இலிங்கங்கள் பிறகு 5 இலிங்கங்களுமாக யிருக்கின்றன. அவை நாம் முறையே யடக்கவேண்டியதைக் குறிக்கின்றன. 1 என்பது மனதை ஒரு நிலைப்படுத்துவது. 4 என்பது இரண்டு கண்களையும், இரண்டு காதுகளையும் பொத்தவேண்டியது. பிறகு 5+5 என்பது ஐந்து ஞானேந்திரியங்கள், 5 கன்மேந்திரியங்கள் சேட்டைகளொடுங்கவேண்டும். பிறகு 13 இலிங்கங்களொன்றுமிருக்கின்றன. இவை நாம் அடக்கவேண்டிய 13 இராகத் துவேஷங்களைக் குறிக்கின்றன. அவையாவன:— இராகம், துவேஷம், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், ஈரிசை, டம்பம், அசுசை, அகங்காரம், தர்ப்பம். இவைகளுக் கப்புரமொரு ஒத்தை இலிங்கமிருக்கிறது. இது நாம் முதலில் குண்டலிசக்தியைக் கிளப்பவேண்டுமென்றும் குறிக்கிறது. அதற்கப்புரம் 7 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம் மேலேழு குணத்தையும் தாண்டவேண்டுமென்று குறிக்கின்றன. அதற்கப்புரம் 2 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம் பாபபுண்ணியமற் றிருக்கவேண்டுமென்பது, அதாவது சகல கர்மமுமற் றிருக்கவேண்டுமென்று உணர்த்துகிறது. பிறகு 9 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம், நமது நவதுவாரங்களையு மடக்கவேண்டுமென்று குறிக்கிறது. அதற்கப்புரம் 9 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம் நமது 9 சக்திகளையு மடையவேண்டுமென்று குறிக்கின்றன. அப்புரம் 3 இலிங்கங்களிருக்கின்றன. இவை நாம் காமம், வெகுளி, மயக்கத்தை யடக்கவேண்டுமென்று குறிக்கின்றன. அப்புரமிருக்கும் 3 இலிங்கங்கள் ஆணவம், கன்மம் மாயையை விட்டு நீங்கவேண்டுமென் றுணர்த்துகின்றன. அதற்கப்புறமிருக்கும் 5 இலிங்கங்களும் நாமடையவேண்டிய தூய நினைவு, தலைமை, அருள்நிலை, அன்னை, அத்தனென்கிற 5 நிலைகளைக் குறிக்கின்றன. அதற்கப்புரமிருக்கும் 5 இலிங்கங்களும் நாம் தாண்டயிருக்கும் சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்கிற நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கமாகிய 5 நிலைகளைக் குறிக்கின்றன. அப்புரமிருக்கும் 9 இலிங்கங்களும் நமது 9 குணங்களையும் கடக்கவேண்டுமென்றும், அப்புரமிருக்கும் 13 இலிங்கங்களும், நம் ஆறுதாரங்களையும், எழுவகைத் தோற்றத்தை

யும் கூடக்கவேண்டுமென்று குறிக்கின்றன. அப்புரமிருக்கு மிரண்டு இலிங்கங்களும், நாம் ஞானமுண்டாய், சகஸ்ராதார நாடியைக் கிளப்புவதைக் குறிக்கிறது. கடைசியாயிருக்கும் 7 இலிங்கங்களும் நாம் தாண்டயிருக்கும் ஞானப்படிகளேழை யும் குறிக்கின்றன.

தவிர பிரகாரத்தைச் சுற்றிவரும்போது, அந்த அகண்ட பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் மத்தியில் பிள்ளையாரென்ற விநாயகர் கோயிலிருக்கிறது. பிள்ளையாரென்பது எல்லா உயி ருள்ள வஸ்துக்களையும் குறிக்கிறதென்று தெரிந்த விஷயம். ஆகவே நாம் மூதலில், எல்லாவுயிருள்ள வஸ்துக்களிலும் கடவுளென்ற ஒன்று இருக்கிறதென்று உணரவேண்டியிருக் கிறது. இந்தப் பிள்ளையார் கோயிலுக் கடுத்திருக்கும் சுப்பிர மணியர் கோயிலும், அப்புரமிருக்கும் நடராசர் கோயிலும் பிரகாச மட்டத்துக்குமேல் ஒரு மேடையில் கட்டப்பட்டிருக் கின்றன. அதாவது சாதாரண உலகறிவை விட்டு மேல் போனால்தான் அதிலுள்ள உருவங்களுணர்த்தும் விஷயங்களை தெரிந்துகொள்ள முடியுமென் றுணர்த்துகிறது. அப்புரம் போகும்போது வடமேற்கு மூலையிலிருப்பது சுப்பிரமணியர் கோயில். இத்தஞ்சை கோயிலில் இந்தச் சின்னகோயில் ஒரு தனிச் சிறப்பாயுள்ளது. முதலாவது மற்றெல்லா கோயில்களை விட மூலாதாரக் கோயில்களையும்விட, இந்தச் சிறு கோயில் கண்ணைக் கவரக்கூடிய அரிய சித்திர வேலைப்பாடுடையது. சுப்பிரமணியனுக்கிருப்பது மயில்வாகனம். மயிலின் தோகை சாதாரண மனிதர்கள் மனதையெல்லாம் கவருகிறது. அது நம்மெல்லாரையும் மயக்கியிருக்கும் மாயையைக் குறிக்கிறது. அதேபோல் அந்த சுப்பிரமணியன் கோயிலுக்கிருக்கும் சித்திர வேலையுடைய கட்டிடம் மாயையைக் குறிக்கிறது. தவிர அந்தக் கோயில் ஒரு மனித உடலையும்போலுள்ளது. சுப்பிரமணியர் உருவமிருக்கும் கர்ப்பக்கிரகம் தலை, அதற்கு முன்னிருக்கும் சிறு மண்டபம் கழுத்து. அதற்குமுன் சற்று பெரிதாக 48 தூண்களுள்ள மண்டபம், நமது உடல். சுப்பிர மணியரென்பது ஞானம். ஞானம் நம் சிரசில்தானிருக்கிறது. ஆகவே அந்த உருவம் அந்த சிரசைக்குறிக்கும் பாகத்திலிருக்

கிறது. அந்தக் கழுத்தைக் குறிக்கும் மண்டபத்திலிருந்து இருபுறமும் வெளியே படிகளுண்டு. அவைகள் ஒவ்வொன்றும் 5+6 படிகளுள்ளவை. அதாவது ஞானமுண்டாக நாம் 5 இந்திரியங்களையுமடக்கி, ஆறு ஆதாரங்களையும் தாண்டினுல் ஞானத்தை யடையலாமென்றுணர்த்துகிறது. தவிர அந்தக் கோயிலின் முன் 48 தூண்களுடைய மண்டபமிருக்கிறது. இது நாம் சுமார் 48 நாடிகளையடக்கி யோகம் செய்வதைக் குறிக்கிறது. இந்த 48 தூண்களுள்ள மண்டபத்திற்கு மூன்று பக்கங்களில் படிகளிருக்கின்றன. இவை நாம் யோகம் செய்ய முன் இடகலே, பிங்கலே, சுழிமுனையென்னும் நாடிகளை யடக்குவதைக் குறிக்கின்றன. இதற்கப்புரம் வடகிழக்குமூலேயில் நடராசர் கோயிலிருக்கிறது. இது நாமிருக்குமொன்றை யுணர்வதைக் குறிக்கிறது.

அடுத்து நாம் கோயிலில் நுழையப்போனல் முதலில் மேடை யேறவேண்டியிருக்கிறது. அதாவது நாம் உலகறிவிற்குமேல் தாண்டவேண்டுமென்றுணர்த்துகிறது. அப்புரம் பலிபீடத்தைத் தாண்டவேண்டியிருக்கிறது. அது நாம், நம் ஆணவத்தையறவே யொழிக்கவேண்டுமென் றுணர்த்துகிறது. அப்புரம் நந்தியை தாண்டயிருக்கிறது. நந்தி எப்போதும் கடவுளையே நோக்கியிருப்பதுபோல் நாம் எப்போதும் அந்த மேலான நினைவிலிருக்கவேண்டுமென்றும், பிறகு சபாமண்டபம் போவது அந்த நிலேயை இன்னுமதிகரிக்கச் செய்யவேண்டுமென்றும், அப்புரம் அர்த்தமண்டபம் போவது அந்த நிலேயை மிகமிக விருத்தி செய்யவேண்டுமென்பது. அப்புரம் கர்ப்பக்கிரகம் போவது அந்த வொன்றுட னிரண்டறக் கலப்பதைக் குறிக்கிறது.

அடுத்தபடியாக நாம் கோயில் போக ஒரு பெரிய மேடைமீது எறவேண்டியிருக்கிறது. அந்த மேடைமீது ஒருபுரம் ஈஸ்வரன் கோயிலும், ஒரு புரம் அம்மனென்கிற சக்தி கோயிலுமிருக்கின்றன. இவைகளைக் காண நாம் மேடையேறுவதுபோல் நாம் உலக மட்டத்திலிருந்து, உலகறிவிலிருந்து மேலேறவேண்டுமென்று குறிக்கிறது. அந்த மேடை சுமார்

நீளம் 490 அடி, அகலம் 215 அடி. அந்த மேடை 24 பக்கங்கள் கொண்டதாக யிருக்கிறது. இந்த 24 பக்கங்களும் நம் உடலிலிருக்கும் 24 வஸ்துக்களைக் குறிக்கின்றன. அவையாவன:—எலும்பு, மாமிசம், தோல், நரம்பு, உரோமம், உமிழ் நீர், மூத்திரம், வியர்வை, உதிரம், சுக்கிலம், தாகம், நித்திரை, பசி, சோம்பல், கூடுகை, நடத்தல், இருத்தல், தத்தல், ஓடல், கிடத்தல், ஆசை, துவேஷம், பயம், வெட்கம் என்பன. இந்த மேடை யேறுவதற்கு ஐந்து பக்கங்களில் 5 படிகளாகவும், ஒரு பக்கம் 3 படிகளாகவுமிருக்கின்றன. ஐந்து படிகளாவன:—நாம் அடக்கயிருக்கும் ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, வாயுக்கள் 10, அப்புரம் தலையிலிருக்கும் இரண்டு கண்கள் நாடிகள், இரண்டு செவிகள் நாடிகள், அடி நாக்கு நாடி. 3 படிகளாவன:—இடகலை, பிங்கலை, சுழிமுனை நாடிகள். இந்தக்கோயில் கர்ப்பக்கிரகத்தின் தென்புரமிருக்கும் தக்ஷிணமூர்த்தியென்னும் கோயிலைத் தாண்டுவது நாம் நம் மும்மலங்களையும் விட்டகலவேண்டுமென்பது. பிறகு வட பக்கமிருக்கும் சண்டிகேஸ்வரர் கோயிலைத் தாண்டுவது நாமெல்லாமடக்கி, நம்மை மறந்து யோகநிஷ்டையிலிருப்பதைக் குறிக்கிறது.

பிறகு ஈஸ்வரன் கோயிலந்த மேடையில் மேற்குப்பக்கம் மூலையிலிருக்கிறது. இதுவும் சுப்பிரமணியர் கோயில் மாதிரி மனித உருவமாகவே யிருக்கிறது. இலிங்கமிருக்கு மறை தலைப்பாகம். அதற்கப்புரம் முன்னிருக்கும் சிறிய மண்டபம் கழுத்து. அர்த்த மண்டபமும், சபா மண்டபமும் உடல். சுப்பிரமணியர் கோயில்போல் உடலுக்கடிப்பக்கம் 3 வழியாய் மேலேறுவதற்கு படிகள். கழுத்திலிருந் திருபுறமும் படிகள். அடிப்பக்கம் 3 வழிப்படிகள் நம் இடகலை, பிங்கலை, சுழிமுனை வழிகளைக் குறிக்கின்றன. கழுத்துப்பக்கம் 22 படிகளிருக்கின்றன. இவை நாம் ஈஸ்வரனாகிய, ஒன்றை, ஆன்மாவைக் காணயிருக்கும் மற்றொரு விதமாகச் சொல்லப்படும் வழியைக் குறிக்கின்றன. அதாவது முதலில் இடகலை, பிங்கலை, சுழிமுனை யென்கிற மூன்று நாடிகளையும் அடக்கி யோகம் செய்து ஒன்பது சக்திகளையு மடைந்து தாண்டி பிறகு ஆறு ஆதாரங்களையும் தாண்டி, கடைசியாக முதுகெலும்பு வால்மூலையில், இடுப்பு, நடுமுதுகு, கழுத்து, பிடரென்னும் நான்கு நாடிகளையும் தாண்டினால் ஞானத்தை அடைந்து சகஸ்ராதார நாடி நிமிரச்செய்து, ஒன்றாகிய, ஒளியாகிய, வெளியைக் காணலாம். சகஸ்ராதாரநாடி யிருக்கு

மிடம் தலை உச்சி. ஆகவேதான் தலையாகிய அந்தக் கர்ப்பக் கிரகத்தின் உச்சிபாகமாகிய மேற்குப் பாகத்தில் ஒளியை, ஜோதியைக் குறிக்கும் சமயோஜதமூர்த்தி உருவமிருக்கிறது.

மேடையிலிருந்து கோயிலுக்குப் போகும்போது முதலில் 15 படிகள் தாண்டவேண்டியிருக்கிறது. அவை நாம் தாண்டவேண்டிய ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, வாயுக்கள் 5-யும் குறிக்கின்றன. அதற்குமேல் முன்னால் ஒரு சிறு மண்டபம், அதற்கு 20 தூண்களிருக்கின்றன. இவ்விடத்தில்தான், துர்க்கை என்ற உருவமிருக்கிறது. இது நாம் அடுத்து தாண்டவேண்டிய 28 நாடிகளைக்கொண்ட குண்டலிசக்தியைக் குறிக்கிறது. அடுத்தாப்போல் உள்ளே சபா மண்டப மிருக்கிறது. இதில் 66 தூண்களிருக்கின்றன. இவை நம் குடலிலிருக்கும் 64 நாடிகளைக்கொண்ட (Vesical plexus) நாடிக் கொத்தைக் குறிக்கிறது. இதைத் தாண்டினுலுள்ளே 36 தூண்கள் கொண்ட அர்த்தமண்டப மென்பதுள்ளது. இது நாமடுத்து தாண்டவேண்டிய குதிரை லாடம்போல் இருதயத்திற்குப் பக்கத்திலிருக்கும் நாடிக் கொத்தைக் குறிக்கிறது. அப்புரமொரு சின்ன மண்டப மிருக்கிறது. அதில் முதல் 6 தூண்களும் அப்புரம் 4 தூண்களு மிருக்கின்றன. இவை நாம் தாண்டவேண்டிய ஆறுதாரங்களையும், பிறகிருக்கும் முதுகெலும்பு மூளையிலிருக்கும் 4 நாடிகளையும் குறிக்கின்றன. இவைகளுக்கப்புரம்தான் கர்ப்பக்கிரகம், அதாவது இலிங்க மிருக்குமிட மிருக்கிறது. மற்றக் கோயில்களிலிது ஒரே அறையாய், அதில் ஒரு சிறு இலிங்கமிருக்கும். இந்தக் கோயிலில் முதலில் ஒரு சிறு பிரகார மாதிரியும், அதுவும் 16 கட்டங்களாக பிரிக்கப்பட்டும், அப்புரம் ஒரு சிறு அறையும், அந்த அறையை யடைத்து ஒரு மிகப்பெரிய இலிங்கமு மிருக்கிறது. இந்தச் சிறு பிரகாரத்திலிருக்கும் 16 கட்டங்களும் நம் ஆன்மாவைக் காணவொட்டாது மறைத்துநிற்கும் 16 இராகத் துவேஷங்களைக் குறிக்கின்றன. அவையாவன :- இராகம், துவேஷம், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், ஈரிசை, டம்பம், அசுசை, தர்ப்பம், அகங்காரம், இச்சை, பக்தி, சிரத்தை. இவைகளை மூன்றென்பாருமுண்டு, ஆறென்பாருமுண்டு, எட்டென்பாருமுண்டு, பத்தென்பாருமுண்டு, பதின்மூன்றென்பாருமுண்டு. தவிர இந்தச் சின்ன பிரகாரத்தில் மூன்று பக்கம் சுவற்றில் மூன்றுருவங்க ளிருக்கின்றன. இவை நம்மிலிருக்கும் மனச் சாட்சி, ஜோதி, சக்தி யென்பவைகளைக் குறிக்கின்றன. அந்தக் கர்ப்பக்

கிரகமும், அதற்குள்ளிருக்கும் அறையை யடைத்திருக்கு மிலிங்கமும் நமதுடல், தலை, அதிலடங்கியிருக்கும் சூடாகாச மென்கிற அறிவு, ஜோதி, ஒன்று யென்பதைக் குறிக்கிறது.

வெளி

காற்று

தீ

நீர்

மண்



அடுத்தாற்போல், கர்ப்பக் கிரகத்தின் அமைப்பும் அதற்கு மேலிருக்கும் விமானத்தையும் கவனிப்போம். இது ஒரு தனி யமைப்பாயுள்ளது. இது கீழ் சுமார் 100 அடி சதுரமாயும், சுமார் 200 அடி உயரமாயுள்ளது. இது 15 அடுக்குகள் கொண்டதாயிருக்கிறது. கீழ் மூன்றும், ஒன்றன் மேலொன்றாய் ஒன்றுபோலு மிருக்கும். அதற்குமேல் 12 அடுக்குகள் கொண்டது. இவை மேல் போகப் போக ஒன்றைவிட ஒன்று சிறிதாக யிருக்கிறது. இவை 12க்கு மேல் 4 மூலைகளிலும், மூலைக்கிரண்டிரண்டாக 8 இலிங்கங்களும், அதற்குமேல் கழுத்துப்போல் ஒரு பாகமும், அதற்கு மேலொரு கவிழ்ந்த கிண்ணம்போலொரு சிகரமும், அந்த சிகரம் 8 பட்டையாயுள்ளதாகவும், அதில் 4 பக்கங்களில் முகம்கொண்ட மாதிரியும், இந்தக்கிண்ணத்தில் டைமன்மாதிரி நீண்ட கோண சதுரமாதிரியும், அந்தக்கிண்ணத் தின்மேல் ஒரு முனையில் முடியும் கலசமுமிருக்கின்றது. இதில்

அடி 3 அடுக்குகளும் நாம் உண்டாயிருக்கும் ஐந்து பெரும் பூதங்களில் மண்ணைக் குறிக்கிறது. அதற்கு சதுர உருவம் கொடுத்திருக்கிறது. இந்தக்கட்டிடமு மதே போலிருக்கிறது. அதற்கு மேலிருக்கும் 12 அடுக்குகளும் நீரைக் குறிக்கிறது. நீருக்கு ஒரு நீண்ட சதுரத்தின்மேல் ஒரு அரைவட்ட உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற்சொன்ன 12 அடுக்குகளையும் பார்த்தால் இந்த உருவம் வருகிறது. அதற்குமேல் உள்ள கழுத்துப்போலுள்ள பாகம் தீயைக் குறிக்கிறது. தீயிக்கு முக்கோண உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைக் குறிக்கவே அந்த பாகத்தில் 4 பக்கங்களில் மூன்று பட்டையுள்ளதாக கட்டப்பட்டிருக்கிறது. அதற்குமேலுள்ள கவிழ்ந்த கிண்ணம் காற்றைக் குறிக்கிறது. காற்றுக்கு 8 பட்டை உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவேதான் இந்தக் கிண்ணம் 8 பட்டையாக விருக்கிறது. அதற்குமேல் முனையில் மூடியும் கலசமும் இதனடிப்பாகம் வட்டமாயும், பிறகு மேல் போகப்போகச் சிறுத்து முனையில் முடிகிறது. இந்தக் கலசம் ஆகாச மென்கிற வெளியைக் குறிக்கிறது. வெளிக்கு வட்டவுருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவேதானிதனடி வட்டமாக யிருக்கிறது. அது வெளியாகையால் அது ஒன்றுமில்லாத முனையில் போய் முடிகிறது.

அடி மூன்றடுக்குகளும் முன்பக்கம் போக மற்ற மூன்று பக்கங்களிலும் மத்தியில் ஒவ்வொன்றிலும், ஒரு வாசல்படியும், அதற்குப் பக்கத்தில் இரண்டு வாசல்படிமாதிரி கட்டைகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆக இவைகளில் 9 வாசல் படிகளும் நாம் தாண்டவேண்டிய முப்பாழைக் குறிக்கின்றன. அதாவது, மூன்று கர்ம வினைகள், மூன்றுடல்கள், ஞாதுரு, ஞேயம், ஞானமெனப்படுபவை. 36 கட்டைகளும் நாம் முதலில் கட்டவேண்டிய இருதயத்திற்கு பக்கத்தில் குதிரை லாடம் போன்ற ⋂ காடிக்கொத்து



இதற்கப்புர மிருப்பது 12 அடுக்குகளுள்ள கோபுரம். இது நாம் தாண்டவேண்டிய 5+7 தத்துவங்களைக் குறிக்கிறது. ஐந்தென்பது நம் ஐந்தென்று சொல்லப்பட்ட யிந்திரியங்கள், வாயுக்கள், ஏழென்பது நாம் தாண்டவேண்டிய ஏழு ஞானப்படிகளைக் குறிக்கின்றன. தவிர இக் கோபுரத்தில் I, II, III, IV, V, VI, a, b, c, d, e, f, என்று குறிப்பிட்ட மாதிரி 12 வித கட்டிடங்களால் கட்டப்பட்டிருக்கிறது. இதில் I என்னும் வகையில் 11ம், II என்பதில் 7ம், III என்பதில் 3ம், IV என்பதில் 7ம், V என்பதில் 8ம், VI என்பதில் 8ம் இந்தக் கோபுரத்தின் அடுக்குகள் மத்திகளிலிருக்கின்றன. f என்பதுமாதிரி கட்டைகள் கோபுரத்தில் 12 அடுக்குகளின் 4 மூலைகளிலும் 48 இருக்கின்றன. அந்த மத்திய கட்டைக்கும் மத்தியில் a, b, c, d, e, என்னும்மாதிரி கட்டைகளிருக்கின்றன. அவைகளில் a என்பது மாதிரி 90ம், b என்பது மாதிரி 20ம், c என்பதுமாதிரி 68ம், d என்பதுமாதிரி 46ம், e என்பதுமாதிரி 6ம் இருக்கின்றன. இதில் மூலை 48 பட்டைகளும் நாம் யோகம் செய்வதற்கு அடக்கும் நாடிகளைக் குறிக்கின்றன. ஆக இந்தக் கட்டைகளெல்லாம் மொத்தத்தில் 316 ஆகின்றன. நமக்கிருக்கும் 72,000 நாடிகளில் முக்கியமாக எடுக்கப்பட்டவை 1008. இவைகளில் முக்கியமானவை 316 என்று இதைக் கட்டுவித்த பெரியார் எடுத்திருக்கிறார்கள். இந்த 316 நாடிகளைத்தான் இஸ்லாமிய மதத்தில் 313 'முர்சலீன்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளைத் தன் பேறறிவைக்கொண்டு 12 வகையாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவிலும் இவ்வளவிவ்வளவென்று எடுத்து அந்தப்பிரகாரம் கட்டைகளை கட்டுவித்த பெரியாரினறிவே யறிவு. தவிர பிரகாரத்து மண்டபங்களிலும் இலிங்கங்களில் சிலவற்றில் அடிப்பாகம் சதுரமாயும், மற்றவற்றில் வட்டமாயும் ஒரு சில சிறிய வுருவமுள்ளதாகவும் வகுத்துக் கட்டியிருக்கிறார்கள்.

இதற்குமேல் 8 நந்திகளிருக்கின்றன. இவை நமதுடல் ஆயிருக்கும் எட்டுவித வஸ்துக்களையும், நாம்முதலிலடையுமெட்டுவித சக்திகளையும் குறிக்கின்றன. இவைகளுக்கு மேல் கழுத்துமாதிரி யிருக்கும் கட்டையில் நான்கு பக்கங்களிலும் மும்மூன்றாக யிருக்கின்றன. இவை நாம் கடக்கவேண்டிய நான்கு, மூன்றுகளைக் குறிக்கின்றன. அவை நாம் கடக்க வேண்டிய தமம், இராசதம், சத்துவமென்கிற முக்குணங்களையும், ஆணவம், கன்மம், மாயை யென்கிற மும்மலங்களையும், இடகலை, பிங்கலை, சுழிமுனை யென்கிற மூன்று நாடிகளையும், அப்புரம் சாக்கிர மென்கிற நனவு, சொப்பன மென்கிற கனவு,

சுழூத்தி என்கிற உறக்க நிலையையும் தாண்டவேண்டுமென்பது. அதற்கு மேலிருக்கும் கவிழ்ந்த கிண்ணம் காற்றைக் குறிக்கிறது. இது நாம் தினம் விடும் 21,600 மூச்சுகளைக் குறிக்கிறது. அதைக் குறிக்கவே அதிலநேக, ஒருவித முக்கோண மாதிரி யெனப்படுகிற, சாய்ந்த நீண்ட சதுர டைமன் மாதிரி அதில் குறிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கிண்ணம் 8 பக்கங்கள் கொண்டதாயிருக்கிறது. இது நாம் விடும் மூச்சாகிய காற்று நம் 8 திக்குகளிலும் பறந்திருக்கின்றதுவென்று குறிக்கின்றன. அந்தக் கிண்ணத்தில் நான்கு பக்கங்களில் நான்கு முகம் மாதிரி யிருக்கின்றன. இவை நாம் மூச்சை யடக்கி யோகம் செய்து கடைசியில் நிமிர்த்தவேண்டிய நமது முதுகெலும்பில் வால்மூளையில், இடுப்பு, நடுமுதுகு, கழுத்து, பிடறென்னும் நான்கிடங்களில் சுருண்டு கிடக்கும் நாடிகளை நிமிர்த்துவதைக் குறிக்கிறது. இப்படி யவைகளை நிமிர்த்தினுல்தான் சகஸ்ராதார நாடி நிமிர்ந்து ஞானமுண்டாய், உண்மையாகிய வெளித் தோன்றும். இதைத்தான் அந்த கலசம் குறிக்கிறது. கலசம் முனையில் முடிவதானது நாம் அந்த வெளியில் கடைசியில் கலந்துவிடுவதைக் குறிக்கிறது.

இந்தக் கோயிலில் ஒரு தனிச் சிறப் பென்னவென்றல் அந்தக் கலசத்தின் நிழலை யாரும் கண்டதில்லை யென்பார்கள். இது அதைக் கட்டின சிற்பியின் திறமை யென்று சாத்தாரண மனிதர் சொல்லுகிறுர்கள். ஆனல் அந்தச் சிறப்பு அதை ஆக்குவித்த பெரியாருக்கே யுரியது. காரண மென்னவென்றுல், அது வெளியாகிய ஆகாயத்தைக் குறிக்கிறது. வெளியாகிய ஆகாசத்தை, ஒன்றை, உண்மையை சாதாரண மனிதர், சகலர் அறியமாட்டார்கள். அதன் நிழலையும், அதன் தன்மையு முணரமாட்டார்கள். அதேபோல் கீழ் நோக்கிப் பார்க்கும் மனிதருக்கு அதன் நிழல் தெரியாது. மேல் நோக்கி ஞான் முண்டானவர்க்கே, வெளி, ஆகாசம், ஒன்று, உண்மை புலப்படும். அதேபோல் கீழ் நோக்கை விட்டு தலை நிமிர்ந்து மேல் நோக்குபவர்க்கு வெறும் நிழலல்ல, அந்தக் கலசமே தோன்றும்.

இந்தக் கோயில் விமானத்தின் முன்பக்கம் ஒரு தனிச் சிறப்பா யமைக்கப்பட்டிருக்கிறது. கோயிலில் கழுத்து மாதிரி யிருக்கும் மண்டபத்தின்மேல் ஓரறையும் அதற்குமே லொரு அறையும், அதற்குமேலொரு மொட்டைமாடியு மிருக்கின்றன. அந்த இருண்ட அறைக்கும் முன்பக்கம் ஒவ்வொரு வாசல்படியும், மொட்டைமாடி முன்னுலொரு வாசல்படியு மிருக்கின்றன.

தவிர கீழறை வழியாய், கீழ் கர்ப்பக்கிரகம் சுற்றி ஒரு சிறு சுற்றுப்பிரகார மிருக்கிறமாதிரி, அந்த விமானக் கட்டிடத்தி லொரு சிறு சுற்றுவழியு மிருக்கிறது. இரண் டறைகளின் வாசலபடிகள் நாம் மூச்சு விடு மிடகலே, பிங்கலே நாடிகளைக் குறிக்கின்றன. அந்த மேலிருக்கும் சின்ன சுற்றுவழி நம் மூச்சுக்கு காரணமான நுரையீரலைக் குறிக்கிறது. இதில் தான் நாம் மூச்சை நிறுத்தி கும்பகம் செய்து சுழிமுனை நாடிக் கேற்றி யோகம் செய்யவேண்டும். மொட்டைமாடி வாசல்படி சுழிமுனை நாடி. இந்த மொட்டை மாடியிலிருந்து கோபுரத்தின் முன்புரம் பார்த்தால் அதிலறைவட்டம்போல் ஒரு சிறு குன்று மாதிரியும், குன்றுக்கு இரண்டு புரங்களிலு மாக 15 உருவங்களும் மேல் 4 உருவங்களு மிருக்கின்றன. இந்தக் குன்று நாம் யோகம் செய்வதைக் குறிக்கிறது. அப் படிச் செய்தால் நாமடையும் சக்திகளை அதற்கு பக்கத்திலிருக் கும் உருவங்கள் குறிக்கின்றன. உருவங்கள் பக்கத்திலேயே யிருப்பதால் அப்படி யோகம் செய்து பெரும் சக்தியைப் பெற் ருல் நமது முடிபுக்கு யாதொரு பலனுமில்லை, கீழேயே நின்று விடுவதுதானென்று குறிக்கிறது. இவைகளையும் தாண்டி மேலேறினல்தான் மேலுள்ள 4 உருவங்கள் குறிக்கும் விஷ யங்களைக் காணலாம். தவிர 4 உருவங்களும் நம் நடு முதுகில் வால்முனையில் 4 இடங்களிலிருக்கும் நாடிகளை நிமிரச் செய்ய வேண்டுமென்றும், அப்படிச் செய்தால்தான் நாம் ஒன்றை யுணரலாமென்று முணர்த்துகிறது.

தவிர கீழ் மூன்றடுக்குகளில் மேலடுக்கில் வடபக்கம் நடுகட்டையினி லிருபக்கங்களிலிருக்கும் கட்டைகளின்மேலிரு மனித உருவங்களிருக்கின்றன. இவைகளில் மேற்குப் பக்க மிருப்பதி லக்தமனிதன் முழங்கால்களை மடக்கியும் தலை குனிந்து மிருக்கிறுன். இவனிரு முழங்கால்களுக்கும் இடுப் புக்குமாக சேர்த்து ஒரு பட்டையால் கட்டப்பட்டிருக்கிறது. இது நாம் யோகம் செய்வதைக் குறிக்கிறது. பட்டையென்பது யோகாசனங்களில் ஒருவிதத்தில் இம்மாதிரி யோகப்பட்டை யால் கட்டிக்கொள்வதைக் குறிக்கிறது. இப்படி யோகம் செய்தால்தான் ஞானமுண்டாகுமெனக் குறிக்கிறது., அதற்கு முன்னவன் தலைகுனிந்திருப்பதுபோல் நாம் ஆணவம் நீங்கி வணக்கமா யிருக்கவேண்டுமென்பதைக் குறிக்கிறது. பிறகு கிழக்குபக்கமிருக்கும் மனித உருவம், சட்டைபோட்டவுருவம், தலை நிமிர்ந்தவுருவம், தலையிலொருவிதப் பாகையிருக்கிறது. இதை ஒரு சிலர் வெள்ளையருருவமென்றும், கட்டும்போதே, பின்னல் வெள்ளையராளுகை வருமென்றுணர்ந்து கட்டினர்க

ளென்று, தங்களுக்கிருக்கும் சிறிய அறிவைக்கொண்டு சொல்லுவார்கள். தலைப்பாகை இப்போதிருக்கும் வெள்ளையர்களுக்கிருக்கும் பாகைகளில் ஒருவிதமாய் மேற்பார்வைக்கு இருப்பதாக தோற்றுவதால் அப்படிச் சொல்லுகிறார்கள். சற்றறிவோடு கவனித்தால் அந்தக்காலத்தில் வெள்ளையருக்கு அவ்வித பாகையில்லை. தவிர அக்காலத்தில் அவர்களுக்கு மீசை தாடிகளுண்டு. இந்த வுருவத்திற்கில்லை. பாகையை சற்று கவனித்து நோக்கினால் இப்போதிருக்கும் வெள்ளையருடைய பாகையு மிம்மாதிரியில்லை. தவிர இயற்கைப்படி யெதுவும் நிலைத்திருப்பதில்லை. மேல்கீழாகவே மாரிமாரி வருகிறது. அதைக் கட்டின சர்க்கார் காலமுதல் நாளதுவரை யெத்தனையோ அரசாங்கம் மாறிவிட்டது. இன்னும் மாற யிருக்கிறது. அப்படிக்கிருக்க மற்றவைகளை யெல்லாம்விட்டு இந்த அரசாங்கத்தை மட்டும் சொல்லுவது அவ்வளவு அறிவுடையதாகத் தோன்றாது. பார்க்குமிடத்து அது ஒரு அரசன் உருவம். அதாவது யோகம் செய்தால் ஞானசாரனாகலாமென்று ஞான அரசனாகலாமென்று குறிக்கிறது. பாகை யரசனுடைய பாகை. மேல் கவிழ்ந்த கிண்ண மாதிரி யிருப்பதைக்கவனித்தால் மேல்பாகம் முன்வந்து கீழ்ப் பாகம் உள்ளடங்கி யிருக்கிறது. தவிர கீழிருக்கும் பாகம் சரியான கோணவட்ட மாதிரி யில்லை. கண் புருவம் மாதிரி முன் குறுகி பின் சற்று அகண்டும், உயர்ந்து மிருக்கிறது. இவை அக்காலத்து அத்தேசத் தரசர்கள் பாகையி னுருவம்.

தென்குமரி நாடிருந்தபோது அதில், இப்போது நம் மிந்தியாவில் மேற்குத்தொடர்ச்சி மலை தொடர்பாக ஒரு மலை யிருந்தது. அதிலிருந்து கிழக்குப் பக்கமாக ஓடு மொரு நதியு மிருந்தது. அம்மலைக்கு மேலைக்குமரி மலையென்றும், அந்நதிக்கு குமரியாறென்றும், பெயர்களிருந்ததாகத் தெரிகிறது. அந்த ஆற்றங்கரை யோரமாக தென்மதுரை யென்ற வொரு நகர மிருந்திருக்கிறது. அந்நகரம்தான் குமரி நாட்டாருக்குத் தலை நகரம். இதில்தான் சங்கங்களு மிருந்திருக்கின்றன. தென்குமரி நாடு கடல்கொண்டு போனபோது இவைகளும் சமுத்திரத்தி லமிழ்ந்து போயின. இவைகளைப்பற்றி யாராய வந்த மேல்காட்டாரும் சமுத்திரத்தின் கீழ் 1500 அடி ஆழத்திலவை, மலை, ஆறு, நகரம் இருப்பதாக எழுதியிருக்கிறார்கள். நகரத்தில், வீதியொழுங்கு, கட்டிடம் முதலியவை மனித் திருப்பதற்காக செய்துகொள்வதே நாகரீகம். அப்போதங்கிருந்தவர்கள், நாகரீகம், இசை, மொழி, கலை, விஞ்ஞானம் முதலியவற்றில் தலைசிறந்து விளங்கினார்களென்பது

தெரிந்த விஷயம். அப்படி யந்த பூமி கடல்கொண்டு போன போது ஒரு சிலர், அப்போது சமுத்திரத்திலிருந்து மேல் கிளம்பிய வட இந்தியா பக்கம் குடியேறினார்கள்.

அவர்களப்போது இந்த நதிக்கரை யோரமாயிருக்கும் மகேஞ்சோடேரோ, ஆரப்பா முதலிய நகரங்களை யுண்டாக்கி குடியேறியிருக்கவேண்டும். இப்போது அவ்விடத்தில் சுரங்கம் வெட்டி கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து தெரியவருகிறது. அங்கே நகரம் உண்டுபண்ணியிருப்பதிலிருந்தும் அவ்விடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட சில உருவங்களுள்ள சாதனங்களாலும் தெரியவருகிறது. சாதனங்களில் முக்கியமாக, ஒரு பசு, காளைமாடு மாதிரியும், இவைகள் தலைகளின் கீழ் ஒரு கட்டம் கட்டமாகக் குறிக்கப்பட்ட சதுரமும், அதற்குக் கீழ் முக்கோண மாதிரி, பறவையின் விரித்த யிரு சிறகுகளும், அதன்கீழொரு தூண் மாதிரியு மிருக்கின்றன. இந்த பசுவின் மேல்பாகத்தில் கிண்ணம், மீன் முதலிய உருவங்க ளமைக்கப்பட்டிருக்கின்றன. தவிர சில சாதனங்கள் எருமை மாடு, சிங்கம் முதலியவைக ளுள்ளனவாகவும், அவைகளை ஒரு மனிதன் சண்டையிட்டு கொல்லுவதுபோலு மிருக்கின்றன. இவை நம் மதத்திலுள்ளவை. நம் கலையிலுள்ளவை. இவைகளைப் பற்றிப் பேச, நம் கலையே தெரியாத வெளிநாட்டாருக்கு தெரியாது. நம் மதத்தில் பதி, பசு, பாச மென்று சொல்லப்பட்டிருக்கிறது. நாமென்கிற ஆன்மாவைப் பசுவென்று சொல்லப்பட்டிருக்கிறது. பசு, பதியை யடைய அநேக தடைகளிருக்கின்றன. இவைகளைத் தாண்டத்தான் தத்துவங்களை தாண்டவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. பசுவை, காளையாகவு முருவகப்படுத்தியிருக்கிறது. இந்தப் பசு, காளைகளைத்தான் கோயில்களில் நந்தியென்று முன்னும் பிறகு பதியைக் குறிக்கு மிலிங்கத்தை கோயிலுக்குள் ளமைக்கப்பட்டிருக்கிறது. அந்த உருவங்களில் மாட்டிற்கு கீழிருக்கும், சதுரம், முக்கோணம் தூண்களெல்லாம் நம் மும்மலங்களைக் குறிக்கின்றன. மேலிருக்கும் மீன், கிண்ணம் முதலியவை நாம் தாண்டவேண்டிய தத்துவங்களைக் குறிக்கின்றன. எருமை, சிங்கம் முதலியவை நாம் ஜெயிக்கவேண்டிய துர்க்குணங்களைக் குறிக்கின்றன. இவைகள் காணப்பட்ட சாதனங்க ளொருவித ஜாடியின் துண்டுகள். ஆதிகாலத்தில் நம்மவர்க ளிறந்தால் சவங்களை யெரிப்பதோ, சும்மா புதைப்பதோ கிடையாது. மதமதக்கா தாளி யென்கிற முதுமக்கள் தாளி யென்னும் ஜாடியில் சவத்தை குந்தின மாதிரி வைத்து மண்ணில் புதைத்துவிடுகிறது. இம்மாதிரி புதைப்பட்டயிட

யின்னமும் புதுக்கோட்டையைச் சேர்ந்த அன்னவாசலென்னு மிடத்திலும், திருநெல்வேலி ஜில்லா, கருங்குள மென்னு மிடத்திலு மிருக்கின்றன. தவிர திருச்சி, தென்னூர் தாசில் தார் சந்து யென்னுமிடத்தி லொரு பிள்ளையார் கோயில் கட்ட அஸ்திபாரம் தோண்டியபோது அம்மாதிரி யொன்றகப்பட் டது. சாதாரணமானவர்கள் சும்மா தாளியில் புதைத்தால் கொஞ்சம் செயலுள்ளவர்கள் இம்மாதிரி சித்திர வேலை செய் யப்பட்ட தாளிகளில் வைத்துப் புதைத்தார்கள். அந்தச் சித் திரங்களின் பொருளென்னவென்றால் மலங்கள் நீங்கிய ஆன்மா, தத்துவங்களையும் கடந்து ஒன்றுடன் கலந்துவிட்ட தென்பதைக் குறிப்பதற்காக செய்தார்கள்.

இதேபோல் குமரிநாடு கடல்கொண்டு போனபோது ஒரு சிலர் எகிப்து தேசம் போய் குடியேறி அப்போது அங்கு காட்டுமிராண்டிகளாய், அநாகரீகர்களாய், நாகரீகம், மதம், கலை முதலியவை யாதொன்று மில்லாதவர்களா யிருந்தவர் களுக்கு, மேல்நாட்டாருக்கு தங்களுக்கு தெரிந்தவற்றை பரப் பினூர்கள். நல்ல நகரங்க ளேற்படுத்திக்கொண்டார்கள். தங் களது கலைகளா லிப்போதும் உலக அதிசயங்களி லொன்றாய் கருதப்படும்படி கருங்கல்லே கிடைக்காத அந்த யிடத்தில், ஒரு சுண்ணும்பு பாறையை சுவிங்சு என்று சொல்லப்படும் மனித தலையுடன், மிருக உடலுடனொரு மிருகம் படுத்திருப் பதுபோல் செதுக்கி, அதற்குப் பக்கத்தில் வெளி வெகுதூரத் திலிருந்து கருங்கல்கள் கொண்டுவந்து பெரிய பிரமிட்டென் றழைக்கப்படும் கூர்க் கோபுரங்க ளமைத்து, தத்துவங்களை சிறு சிறு அறைகளா யதற்குள்ளமைத்து கட்டி, அதில் அந் நாட்டிற்கு பாரோ யென்றழைக்கப்படும், பரமெனப்படும் நம் திராவிட மன்னன் சவத்தை, என்று மழிவில்லாதபடி, திராக வத்தால் செய்து, அந்தக் கூர் கோபுரத்தின் மத்தியில் வைத்து மூடிவிட்டார்கள். இதில் கூர்கோபுரம் நமதுடல். அதற்குள் பரமென்னும் சவத்தை வைப்பது பின்னல் பரமா கும் நமதான்மா நமதுடலில்தா னிருக்கிறதென் றுணர்த்துவ தற்கு. அந்த சவத்தை யழியாதபடி செய்தால் நம் மான்மா யென்று மழிவில்லாத தென்பதைக் குறிப்பதற்கு. அந்தக் கூர்க் கோபுரம் சித்திரவேலை யில்லாமல் மொட்டையாயும் கொஞ்சம் தத்துவங்க ளடங்கினதா யிருந்தாலும் உலக அதி சயங்களி லொன்றென பெயர்கொண்டது. இந்த தஞ்சை கோபுரம் அதேபோலிருந்தாலும், அதைவிட மிக வேலைப்பா டுடையது. அநேக தத்துவங்களை யுள்ளடக்கி கட்டப்பட் டது. அங்கு மனிதத் தலையுடன் படுத்திருக்கும் சுவிங்சு

இங்கு மாட்டுத் தலையுடன் படுத்திருக்கும் நந்தி. அங்கு சுவிங்சு ஒரே பாறையில் செதுக்கப்பட்டதுபோல் இங்கு மைசூரில் சாமுண்டீஸ்வரி கோயில் முன்னாலே கருங்கல் பாறையில் செதுக்கப்பட்ட நந்தி. அங்கு குடியேறின குமரி நாட்டார்களின் சந்ததியார்கள் பிறகு பேப்பிலோனியே, அசிரியா, சோமாலி நாடு, மெசபடோமியா, கிரீஸ், ரோமாபுரி முதலிய விடங்களுக்கு பரவி தங்கள் நாகரீகம், கலை, மதம் முதலியவற்றை பரப்பினார்கள். அவர்களால் கட்டப்பட்ட மற்ற அதிசயங்களாவன, தொங்குத்தோட்டம், விளக்குக்கூண்டு, அப்பல்லோ முதலிய பெரிய சிலைக ளிப்போ தழிந்துபோயின. இவைகள் நம் திராவிடர்கள் தங்கள் கலைகளால் கட்டப்பட்டவை. அந்த குமரி நாட்டாரிர்கள் பிறகு சுமரி நாட்டார், சுமேரியர்களென் றழைக்கப்பட்டு மெசபடோமியா முதலிய விடங்களிலிருந்தவர்கள். இப்போ தங்கு காணப்படும் சின்னங்கள் அப்போ தங்கிருந்த நம் திராவிடர்களால் ஏற்படுத்தப்பட்டவை. அச் சின்னங்களும் இப்போது மகேஞ்டேரோ, ஆரப்பா முதலிய விடங்களி லகப்பட்டவைகளில் சிலவற்றைப்போலிருக்கின்றன.

அக்காலத்திலேயே, அதாவது சுமார் 5000 வருஷங்களுக்கு முன்னாலேயே எகிப்து தேசத்தில் பாரோவின் சவத்தை யழியாதபடி திராவகத்தால் பக்குவப்படுத்தியிருக்கிறார்கள். இப்போது நாகரீகம், விஞ்ஞானம் முதலியவற்றில் மிக்வும் முன்னணியி லிருப்பதாகச் சொல்லிக்கொள்ளும் மேல் நாட்டாரால் இன்னமு மந்த வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அப்போதே, நம் பெரியார்கள் நம் உடலினுள் அநேக நாடிக ளிருக்கின்றன வென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இன்னு மந்த நாடிகளி லநேகம் மேல் நாட்டாரால் கண்டு பிடிக்க முடியவில்லை. அவர்களால் நம்முடல் கூறுகளைப்பற்றி யெழுதப்பட்டிருக்கும் (Anatomy) என்னும் நூலில் நமக்கு தெரிந்த அநேகம் காணப்படவில்லை. அதைப் படித்துத் தேர்ச்சி பெற்ற டாக்டர்களாலும் சொல்ல முடியவில்லை. தவிர வட விந்தியா பக்கம் போனவர்க ளப்போது அங்கு அநாகரீகத்துடன், காட்டுமிராண்டிகளாய், மாடு மேய்த்து பிழைக்க வந்தவர்களுக்கு, நமது மதத்தி னுட்பொருட்களை தங்கள் கலை மூலியமாக தெரிவிக்க, நமது மதத்தின் தத்துவங்களை கதா பாத்திரர்களாக பாவித்து, கதா ரூபமாக, யோகத்தைப்பற்றி சொல்வதை வேதமென்றும், ஞானத்தைப்பற்றி சொல்வதை இராமாயணமாகவும், மனித வாழ்க்கை மகாபாரதமாகவும், பகவத்கீதையாகவும், உலக வுற்பத்தியை பாகவதமாகவும்

எழுதிக் கொடுத்தார்கள். இவ்வளவு நாகரீகம், கலை முதலிய வற்றில் முன்னணியிலிருந்து உலகத்திற்கே நாகரீகம், கலை, மதம், முதலியவைகளைக் கற்றுக்கொடுத்த நம் தமிழர்கள், திராவிடர்க ளிப்போது பழக்க குற்றத்தால் அநாகரீகர்க ளென்றும், அறிவில் குறைந்தவர்களென்றும், சொல்லப்படும் நிலைக்கு வந்துவிட்டோ மென்பதை, ஆரியத்திற்கு அறிவைப் பரிகொடுத்த அடிமைத் தமிழ னினியாவது யிவைகளையெல் லாம் பார்த்து, சிந்தித்து, உண்மைத் தமிழர்க ளாவார்க ளென நினைக்கிறேன்.

எகிப்து தேசத்தில் கூர்க் கோபுரத்தின்முன் னொரு பெரிய மனிதத் தலையுடன் படுத்திருக்கு மிருகமுருவமொரு பாறையில் செதுக்கப்பட்டிருக்கிறது. தஞ்சையில் கூர்க்கோபுர மாதிரியுள்ள கோபுரத்தின்முன், மாட்டுத் தலையுடன் ஒரு மாடு படுத்திருப்பதுபோன்ற வொருவுருவம் ஒரே கருங்கல் லால் செதுக்கப்பட்டிருக்கிறது. அங்கு கூர்க்கோபுரம் மொட்டை. இங்கு கூர்க் கோபுரத்திலநேக சித்திர வேலைகள் செய்யப்பட்டிருக்கிறது. அங்கு அந்தக் கோபுரத்திற்குள் சிறுசிறு அறைகளாக மூன்றடுக்குகளிருக்கின்றன. இங்கு அநேக கட்டைகளும் அறைகளும் கொண்ட 15 அடுக்குக ளுள்ள கோபுரம். கருங்கல்லே கிடைக்காத அங்கு சுமார் 20 அடி நீளமுள்ள கற்களை தூரத்திலிருந்து கொண்டுவந்து சில வற்றை உலகத்தா ரதிசயக்கும்படி மேலேற்றி யிருக்கிறார்கள். இங்கு கருங்கல்லே கிடைக்காத யிடத்தில் தூரத்திலிருந்து பெரும் கருங்கற்களைக் கொண்டுவந்து கோபுரம் கட்டி, சுமார் 33 அடி நீளமுள்ள கல்லை கோபுரத்தின்மேல் ளைராதிசயக் கும்படியேற்றி கட்டியிருக்கிறார்கள். அங்கு யிந்தக் கூர்க் கோபுரத்தையும் பக்கமிருக்கும் படுத்திருக்கும் மிருகம் போன்ற சிலையையும் உலகயதிசயங்களி லொன்றெனக் கருது கிறார்கள். இங்கு கதைகளையும் அவையொட்டி நடக்கும் விழாக்களென்கிற வெறும் களியாட்டங்களுமே மதமெனக் கொள்ளும், ஆரியத்திற்கறிவைப் பறிகொடுத்த மக்களுக்கு, முக்கியமாக உடன்பிறந்தார்களாகிய இந்தத் தஞ்சை வாசிக ளுக்கே யிவ்வளவுசிறப்பான கோயி லவர்கள்மத்தியிலிருந்தும் இதன்பெருமையைச் சற்றும் சிந்தியாதிருக்கிறார்கள். அங் கிருக்கும் கட்டிடங்கள் பழந் தமிழரின், குமரி நாட்டாரின் கலையைக் காட்டுகிறது. இங்கு அதைவிடச் சிறப்பான கோயில் கட்டிடங்கள் அந்தத் தமிழரின் கலைச் சிறப்பைக் காட்டுகின்றன. தமிழர்களின் சிறப்பையும், நம் மதத்திலுள்ள

தத்துவங்களையு முணர்ந்த பெரியவர்களே யிக்கோயிலின் சிறப்பை யுணர்வார்கள், கண்டு வியப்பார்கள்.

---

## வேதங்கள்.

வேதங்களென்பது, ரிக், யஜுர், சாமம், அதர்வனம், என்னும் நான்கு வேதங்களைக் குறிக்கின்றன. இவைகள்தான் ஆரியர்கள் மதத்திற்கு ஆதாரம். அவையே முக்கியமானவை. அவைகளிலும் மேலானவை யில்லையென்பது ஆரியர்களுடைய கொள்கை. இதில் விசேஷ மென்னவென்றால் இப்படிச் சொல்லும் ஆரியர்களுக்கே அவைகளிலுள்ள பொருள்களென்ன வென்று தெரியாது. சமீபகாலத்தில் பம்பாய் பிரதேசத்தைச் சேர்ந்த டாக்டர் வீ. ஜீ. ரேலே என்பவரால் பிரசுரிக்கப்பட்ட 'வேதக்கடவுள்கள்' என்று பிரசுரிக்கப்பட்ட புஸ்தகத்தில், அவரும் ஒரு ஆரியராகையால், அவருக்கும் அவைகளின் உண்மைப் பொருள் தெரியாது, அவர் வைத்தியராகையால், ஆங்கில முறைப்படி உடலின் கூறுகளைப்புற்றி படித்தவராகை யால், அந்தக்கடவுள்களும் நம் உடலில் உள்ளனவாகயிருக்கக் கூடுமென்றும், அந்த வேதம் என்பதில் சொல்லப்பட்டதும், நம் உடலில் நடப்பதையே குறிக்கின்றதோ என்று சந்தேகத்துடன் கூறுகிறார். ஆனால் உண்மை நோக்குமிடத்து அவர் சந்தேகப்பட்டபடி அந்தக் கடவுள்களென்பனவும், அந்த வேதங்களில் சொல்லியிருப்பனவும் நம் உடலிலிருக்கும் நாடி தத்துவங்களே.

முதலில் வேதங்கள் உண்டானதைப் புற்றி நோக்கும் போது அவைகளுக்கு ஆசிரியர்கள், ஆரியர்களல்ல. ஆகவே தான் அவர்களுக்கு அவைகளின் பொருள் தெரியாது. அவைகளை எழுதினவர்கள் நம் தமிழர்களாகிய திராவிடர்களே. இவர்கள்தான் அநேக ஆயிரம் வருஷங்களுக்குமுன்பிருந்தே, நாகரீகம், மதம், முதலியவற்றில் மிகவும் சிறந்து விளங்கினர்கள். தென்குமரிகடல் கொண்டுபோனபோது, வடஇந்தியா என்னும் பாகம் சமுத்திரத்திலிருந்து வெளித்தோன்றி நாடா யினபோது, சுற்றுப்பக்கங்களிலிருந்த மனிதர்கள் அந்த நாட்டில் குடியேறினர்கள். மேற்கிலிருந்து பாரசிகரும், வடமேற்கிலிருந்து ஆரியர்களும், தெற்கிலிருந்து திராவிடர்களும் அங்குபோய் குடியேறினர்கள். ஆரியர்களப்போது நாகரீகமில்லாதவர்களாய், காட்டுமிராண்டிகளாய், ஆடுமாடு மேய்த்துப் பிழைப்பவர்களாய் வந்தார்களென்று தெரிந்த

விஷயமே. எல்லாவற்றிலுமுன்னணியிலிருந்த நம் திராவிடர்களாகிய தமிழர்கள் முதலில் அவர்கள் வடமொழியை சுலபத்தில் கற்றுக்கொண்டு, நம்மதத்திலுள்ள சில உண்மைகளை அவர்கள் மொழியில், அவர்களுக்கு உணர்த்தும்பொருட்டு வடமொழியில் வேதமொன்று முதலில் எழுதினார்கள். பிறகு அதை அவர்கள் கைப்பற்றிக்கொண்டு தங்களுடையதென்று உரிமை கொண்டாட வந்தார்கள். அவர்களுக்காக அந் நூல்கள் எழுதப்பட்டவையே யாகையால், அதிலும் மேலான கொள்கையுடையது நம் தமிழ் நூல்களிலிருப்பதால், நம் தமிழர் அதைப்பற்றி சிந்திக்கவேயில்லை.

வேதமென்பது நம் மதத்திலுள்ள யோகமார்க்கத்தையே குறிக்கிறது. அந்த யோகத்திலடையும் சக்திகளையும் குறிக்கிறது. அந் நூலில் 27 இருஷிகளென்று சொல்லப்படுகிறவர்கள், தேவர்களாகிய இந்திரன், வருணன், அக்கினி, வாயு என்பவைகளுக்கு, துரோண கலசத்தில் சோம இரசத்தை வைத்து, தங்களுக்கு சில சக்திகளைக் கொடுக்கும்படி பாடிய பாடல்கள். இவைகளில் 27 இருஷிகளென்பது 27 நட்சத்திரங்களென்னப்படுவன. அந்த 27 நட்சத்திரங்களும், நம் ஞானயிந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, அந்தக் கரணங்கள் 4, வாயுக்கள் 10, மனம், வாக்கு, காயம் என்பன மூன்றையும் குறிக்கின்றன. யோகத்திற்கு இவைகளை முதலில் அடக்கவேண்டியிருக்கிறது. தேவதைகளாகிய இந்திரன், வருணன், அக்கினி, வாயு என்பன பெரும் பூதங்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்கிற மண், நீர், தீ, காற்று என்பனவைகளைக் குறிக்கின்றன. இவைகள் கடைசியில் ஒன்றன்பின் ஒன்றாய் மறைய வேண்டும். அந்தப் பூதங்களில் ஐந்தாவதாகிய ஆகாயம் என்பது அவர்களுக்குத் தெரியாது. அது அறிவினால் அறியக்கூடியதே தவிர நமது உடல் இந்திரியங்களாகிய உருப்புகள் யாதொன்றாலும் அறிய முடியாதவை.

அந்தப்பாட்டுக்களில் சொல்லப்படுவதென்னவென்றால்-சோமக்கொடியைக் கொண்டுவந்து, இரண்டு கற்களில்வைத்து நசுக்கி, பத்துவிரல்களால் பிழிந்து, கம்பிளியில் வடிகட்டி, துரோண கலசத்தில் வைக்கிறதாக சொல்லப்பட்டிருக்கின்றன. சோமக்கொடி என்றால் மனம், இருகற்களில் வைத்து நசுக்குவதென்பது மனம் வேறெதிலும் நாடாமல் ஒரே நிலையாயிருப்பதைக் குறிக்கிறது. பத்து விரல்களால் பிழிவதென்பது நமது பத்து நாடிகளாகிய இடகலை, பிங்கலை, சுழிமுனை, இருகண்கள், இருசெவிகள், உள்நாக்கு, கருவாய், எருவாய்

என்புவைகளைக் குறிக்கின்றன. இரசம் பாய்வதென்பது இல்வுகளை அடக்குவது. துரோண கலசமென்பது குண்டலி சக்தி நாடி. மீத்தியிலிருக்கும் கம்பிளி என்பது அந்தபத்து நாடிகளுக்கும், குண்டலி நாடிக்கும் மத்தியிலிருக்கும் வெண் சிவப்பாயிருக்கும் நுரையீரலென்னு மவயவம் (Lungs) இது தான் நாம் விடும் மூச்சுக்குக் காரணம். நாம் மூச்சை நிறுத்தி அதில் கும்பகம் செய்தால் தான் குண்டலீசக்தி கிளம்பும். அந்தச்சக்தியைக் கிளப்பித் தான் யோகம் செய்ய வேண்டும், செய்யமுடியும்.

இந்த வேதங்களில் பிரபஞ்சமென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்தப்பிரபஞ்சமென்பது நமது உடல். அதில் சொல்லியிருக்கும் சூரியன், சந்திரன், எனப்படுபவைகளில் சூரியனெனப்படுவது நமது பேரறிவு என்கிற சக்ஸ்ராதார நாடி (Pinial body)யைக் குறிக்கிறது. சந்திரனென்பது நமது அறிவாகிய ஆஞ்ஞை (cavernous plexis)யைக்குறிக்கிறது. பிரபஞ்சமிருபிளவாக வகுக்கப்பட்டு ஒவ்வொரு பிளவும் வேலைசெய்வதென்பது நமது வலப்பக்கம், இடப்பக்கமென்று வகுக்கப்பட்டு, ஒருபுரம் சுத்த இரத்தம் பாய்ந்து உடலையியக்கி, மறுபுரம் உடலிலுள்ள அசுத்தத்தை அசுத்த இரத்தம் கொண்டுவந்து மறுபடியும் அந்த ஆரம்ப இடத்திற்குச் சென்று சுத்தமாய் மருபடியும் இரத்தம் பாய்வதைக் குறிக்கிறது.

கிறிஸ்துவமதத்தில் சாலமனென்பவர் கர்த்தருக்கு ஒரு ஆலயம் கட்டுவித்தாரென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆலயம் 60 முழ நீளம், 4 வகை பலகைகளால் ஆக்கப்பட்டது. அதில் 40 முழம் வைத்து தடுத்திருக்கிறது. இரண்டு கெருபின்களால் மறைக்கப்பட்டிருக்கிறது. கெருபின் ஒவ்வொன்று மிரண்டு சேடைகளையுடையது. இதற்குப் பக்கத்தில், 5, 6, 7 முழங்களுள்ள அறைகளிருக்கின்றன. 6 முழ, 7 முழ அறைகளுக்கு மத்தியில் சுற்றிப்போகும்பாதையிருக்கின்றது. இவைகளுக்கு முன்னால் ஒரு மண்டப மிருக்கிறது. அங்கு 80 முழ உயரமுள்ள இரு தூண்களும், தூண்களின் மேலிரு விமானங்களும், அவைகளின் மேலிரு மாதுளங்காய்களிருக்கின்றனவென்றும், அவ்விடத்தில் 100 குடம் தண்ணீர் பிடிக்கக்கூடிய தொட்டியொன்றிருப்பதாகவும், அதை 12 காளைமாடுகள் தாங்கிநிற்பதாகவும், பக்கத்தில் 10 குடம் தண்ணீர் பிடிக்கக் கூடிய பத்து சிறு தொட்டிகளிருப்பதாகவும், சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ஆலயத்தைச் சுற்றி பிரகாரமும் அமைக்கப்பட்டிருப்பதாகவும்

சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆலயம் நமது உடலேயும், அதன் விவரமும் அமைப்பு சாமான்களும் நமதுடலமைப்பையும், அதனமைப்புக்கிருக்கும் வஸ்துக்களேயும் குறிக்கின்றன.

இதேபோல், இதிலிருந்து, இதற்கப்புறம் வந்த இஸ்லாமிய மதத்திலும், அந்த மண்டபம், தூண்கள், சிறு தொட்டிகள்கொண்டு பள்ளிவாசலென்று அமைத்து, அதில் இஸ்லாமியர் தொழுகிருர்கள். இந்தப்பள்ளிவாசலேச்சுற்றியும் பிரகாரமமைத்திருக்கிருர்கள்.

யோகம் செய்தால் முதலில் நம் ஆத்மாவைக்காணலாம். அப்படி ஆத்மாவைக் காண்பதுவே உபநிஷதங்களில் சொல்லியிருப்பவை. ஆகவேதான் வேதமென்பது கர்மகாண்டம், தொழில் செய்வதைச் சொல்லும் பாகம், உபநிஷதம், அவைகளிலு முக்கியமானது நான்கும், ஞானகாண்டம், அறிவுண்டாகி, ஆன்மாவைக்காண்பதைச் சொல்லும் பாகமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. 'தத்துவமசி', 'அகம் பிரம்மாஸ்மி' என்று சொல்வது. நம்முடைய மதமோ அதற்கு மேற்கொண்டு செல்லச் சொல்லுகிறது.

வேதங்களில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கும் சில பதங்களுக்குப் பொருள்கள் :—

துவஸ்திரி—மாயா, ரிபுஸ்—ஜீவாத்மா, சாவித்திரி—ஜோதி, அஸ்வின்ஸ்—இடகலே, பிங்கலே, நபி—சுழிமுனே, மாருத்ஸ்—இருதயத்திற்குப் பக்கத்திலிருக்கும் குதிரைலாடம்போன்ற நாடிக்கொத்து (Solar plexis), பார்ஜனியா—நுரையீரல்கள் (Lungs), பிரகஸ்பதி—வாக்கு (உள்நாக்கு நாடி), அதித்யாஸ்—மலங்கள், உஸஸ்—சித்தம், விஷ்ணு—யோகநிலே, புசான்—மனச்சாட்சி, அதித்தியா—(12) ஞானேந்திரியம் 5+கன்மேந்திரியம் 5+சித்தம், புத்தி, தஸ்யூஸ்—இராகத்துவேஷங்கள், மிதரால்—இரத்தம், அபா—96 தத்துவங்கள்.

---

## மதங்களின் தாரதம்மியம்

1. இந்து மதம் என்பது அர்த்தமில்லாமல் கண்டவைகளே வணங்குவதும், அர்த்தமற்ற சடங்குகளேச் செய்வதும் தான். இது எதற்குச் சமானம் என்ருல் படிப்பில் 5-வது வகுப்புக்குச் சமானம்.

2. கிறிஸ்துவ மதம் அல்லது இஸ்லாமிய மதம் என்பன துவைத மதம் என்பது. அதாவது கடவுள் என்று ஒருவர் இருக்கிறார். அவர்தான் எல்லாவற்றிற்கும் காரணம். அவர்வேறு, நாம்வேறு என்பது. கடவுள் எங்குமிருக்கிறார். சகலத்திலுமிருக்கிறார் என்பது. இது படிப்பில் 8-வது வகுப்பு அல்லது III-வது பாரத்திற்குச் சமானம்.

3. விசிஷ்டாத்வைதம் அல்லது வைணவ மதம். இது தான் துவைதாத்வைதம் என்பது. இது துவைதத்திற்கும், அத்துவைதத்திற்கும் மத்திய நிலை. இதில் கடவுள் என்பவர் நம்மில் இருக்கிறார் என்பது. விஷ்ணு ஆலிலைமேல் பள்ளி கொண்டிருக்கிறார் என்பதும், அரங்கநாதன்என்பதின் பொருளும், திருவரங்கம் கோயிலின் அமைப்பும் இதைக்குறிக்கின்றன. இது படிப்பில் 11-வதுவகுப்பு அல்லது S.S.L.C. படிப்பிற்குச் சமானம்.

4. அத்துவைதம் என்பது அதற்கு அடுத்தநிலை. இதில் நீ அதுவாய் இருக்கிறாய்என்பது அல்லது நான் பிரம்மம் என்ற கொள்கை யுடையது. சர்வமும் பிரமம் என்பது. இதில் கடவுள் என்கிற பெயரே போய்விட்டது. இது படிப்பில் பீ. ஏ. (B.A.) படிப்பைக் குறிக்கிறது.

5. இதற்கடுத்த நிலை புத்த மதம், சைவ மதம், தமிழர் மதம், ஞான மதம் என்பவை. இவை ஞானத்தைக் குறிக்கின்றன. அதாவது இருக்கும் ஒன்றை உணர்வது என்பது. பிரம்மம் என்பது போய் உண்மை வந்து விடுகிறது. இதில் எல்லாம் நிர்வாணம் அல்லது ஒன்றுமில்லை என்பது. சிதம்பர இரகசியம் என்பது. எல்லாம் வெளி என்பது. உண்மைத் தோற்றம் என்பது. இது படிப்பில் எம். ஏ. (M.A.) நிபுணத்துவப் படிப்பைக் குறிக்கிறது.

ஆகவே, எப்படி படிப்பில் மிகவும் கீழ்வகுப்பில் இருப்பவர்க்கு மிகவும் மேல்வகுப்பில் படிக்கும் பாடத்தை அறிய முடியாதோ, அதேபோல் மிகவும் கீழ் நிலையான மதத்தில் இருப்பவர்க்கு மிகவும் மேல் நிலையான மதத்தில் உள்ள விஷயங்கள் விளங்காது.

இவைகளில் துவைதம் என்பது பக்தி மார்க்கத்தைக் குறிக்கிறது. துவைதாத்வைதம் என்பது யோகமார்க்கத்தின் முதல் படியைக் குறிக்கிறது. அத்வைதம் என்பது யோக மார்க்கத்தின் இரண்டாம் படியாகிய மேல் படியைக் குறிக்கிறது. சைவ மதம் என்கிற தமிழர் மதம் எல்லாவற்றிற்கும் மேலான ஞான மார்க்கத்தைக் குறிக்கிறது.

---

## மதங்களின் ஒற்றுமை III

தமிழர் மதத்தில் உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் ஏழுவகையாகத் தோற்றப்படுகின்றன என்றுசொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:—தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம், ஆக ஏழும். இவைகளில் தாவரம் உயிரில்லாதது. மற்றவை உயிருள்ளவை. இவைகளில் தேவர் என்பது ஞானம் உடையவர்கள். அவர்களும் தங்கள் தன்மைக்கு ஏற்ப 10 வகையர்கப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். மக்கள் என்பது சாதாரண மனிதர். இவர்களும் அவர்கள் தங்கள் தன்மைக்குஏற்றபடி 10வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆக பாக்கி உயிருள்ள வஸ்துக்கள் நான்கு. இவைகளும் தங்களுக்குள், ஓரறிவுள்ளவை, ஈரறிவுள்ளவை, மூவறிவுள்ளவை, நான்கறிவுள்ளவை, ஐந்தறிவுள்ளவை என ஐந்து பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆக இந்த நான்கு வகை தோற்றமுடையவைகள் 20 வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆக மனித வகைகளையும் சேர்த்தால், உயிருள்ளவை 40) வகையாகின்றன.

கிறிஸ்துவ மதத்தில் உயிருள்ளவைகளில் முதலில், ஆதாமும், ஏவாளும் உண்டானார்கள் என்றும், இஸ்லாமிய மதத்தில் அதுபோல முதலில் ஆதம், எவ்வாளும் உண்டானார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதாம் என்பதும் ஆதம் என்பதும், தமிழில் ஆத்மா என்பது ஏவாள் என்பதும் எவ்வாள் என்பதும் தமிழில் சிவன், ஜீவன் என்பது. இந்த ஆதாம், ஏவாள், ஆதம், எவ்வாள் என்பவர்களின் பிள்ளைகள் 40 பேர் உண்டானார்கள் என்றும், இவர்களும், இவர்கள் சந்ததியார்களும்தான் உலகமுழுவதும் பரவினார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. தமிழர்களில் உயிருள்ள வஸ்துக்கள் 40 வகையாகப் பிரிக்கப்பட்டு, உலக முழுவதும் பரவி இருப்பதையே இவர்கள் இப்படி சொல்லுகிறார்கள்.

தமிழர்களில் நமக்குமொத்தம் 72000நாடிகள் உள்ளனவென்றும், இவைகளில் 1008ஐமுக்கியப்படுத்தியும், இவைகளிலும் 108ஐ முக்கியப்படுத்தியும், முக்கியமாகச் சகஸ்ராதார நாடியை நிமிரச்செய்தால் ஞானம் வரும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவ மதத்தில் ஆதாம், ஏவாள் சந்ததியில் 56வாக வந்தவர் இயேசு என்றும், இஸ்லாமியரில் ஆதம், எவ்வாள் சந்ததியில் 56வாக வந்தவர் முகம்மதுநபி என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது 1008ல் முக்கியமாக ஒன்றன்பின் ஒன்றாய் 56 நாடிகளை தாண்டினால், ஞானம் என்பதை உணரும் சக்தி உண்டாகிறது என்று குறிக்கிறது.

கிறிஸ்துவ மதத்தில் இயேசு மலைமேல் போய் ஜபம் செய்துதான் ஞானியானரென்றும், நபி முகம்மதுவும் அது போல் ஒரு மலைமேல் போய்தான் ஜபம் செய்து ஞானம் பெற்ருர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மலை என்பது உலக மட்டத்திற்கு மேலுள்ளது, அதாவது உலக அறிவைக் கடந்து மேலே போகவேண்டும் என்று தமிழர் மதத்தில் சொல்லியிருப்பது. அப்படி உலக அறிவைக் கடந்து மேலே போனல் தான் ஞானம் உண்டாகும் என்று தமிழர்களுக்கு சொல்லி இருப்பதைக் குறிக்கிறது.

தமிழர் மதத்தில் முதல் 56 நாடிகளை அடக்கி தாண்டினல் சக்தி உண்டாகிறது. பிறகு அந்த சத்தியைக்கொண்டு ஞானத்தை அடையவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவர் மதத்தில் மேரி என்பதும் இஸ்லாமிய மதத்தில் மரியம்பீ என்பதும் அந்த சக்தியைக் குறிக்கிறது. சக்தியினல் ஞானம் அடைவ்தைத் தான் மேரியின் பிள்ளை இயேசு என்றும், மரியம்பீபீயின் பிள்ளை முகம்மதுநபி என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

---

## கிரிஸ்துவைப்பற்றி ஒரு வார்த்தை

சுவாமி விவேகானந்தர் இங்கிலாந்து தேசத்திற்கு போயிருந்தபோது அங்கு ஒரு கிறிஸ்துவ நண்பர் ஒரு கேள்வி கேட்டார். விவேகானந்தர் அதற்கு கிறிஸ்து என்ருல் என்னவென்று உமக்குத் தெரியுமா என்று பதில் கேள்வி போட்டார். கிறிஸ்துவ நண்பர் பதில் சொல்ல முடியவில்லை. அதே நிலையில் தான் இப்போதும் இருக்கிருர்கள். இந்த நாட்டில் அநேகர் இராமர் என்ருலும் இலக்குமணன் என்ருலும் அநுமான் என்ருலும் இராவணன் என்ருலும் இன்னதென்று தெரியாதவர்கள் இராமாயணத்தைப் பற்றி பிரசங்கம் செய்வது போலவும், கிருஷ்ணன் என்ருலும் அர்ச்சுனன் என்ருலும் இன்னதென்று தெரியாதவர்கள் பகவத்கீதையைப்பற்றி பிரசங்கம் செய்வது போலவும், அநேக கிறிஸ்துவர்கள் கிறிஸ்து என்ருல் இன்னதென்று தெரியாமல் கிறிஸ்துவைப் பற்றி பிரசங்கங்கள் செய்கிருர்கள். கிறிஸ்து மதம் என்பது 2000 வருஷங்களுக்குக் கொஞ்சம் குறைந்த காலத்திற்கு முன் தான் தோன்றிற்று என்றும், அதுவும் எகிப்து நாட்டிற்கு சமீபத்திலுள்ள நாட்டிலும், அந்த எகிப்து நாட்டின் தொடர்பாலும் தான் தோன்றிற்று என்றும் யாராலும் மறுக்க முடி

யாது. ஆனல் அதற்கு பல ஆயிர வருஷங்களுக்கு முன் பிருந்தே இந்த நாட்டில் ஒரு உன்னதமான மதம் இருந்து வந்தது. சில ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குமுன் திரு வனந்தபுரத்தை ஒட்டி, அதற்குத் தெற்கே தென்குமரி நாடு என்ற பெயருடன் சுமார் அதற்குத் தெற்கே 700 மைல் தூரம் வரை வியாபித்திருந்ததென்றும், நம் நாட்டிற்கு அப்போது வடகுமரி நாடு என்று பெயர் என்றும், ஆங்கிலத்தில் அந்த நாட்டிற்கு லெமூரியா என்று சொல்வது என்றும், இந்நாடு களில் உள்ளவர்கள் நாகரீகத்திலும், மதத்திலும் மிகச்சிறந்த வர்களாய் இருந்தார்களென்றும் எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயம். அந்த தென்குமரி நாடு இருந்த போது இமயமலை உள்பட, வட இந்திய நாடு சமுத்திரத்தில் மூழ்கி இருந்தது. இந்த தென்குமரிநாடு என்பதை கடல் கொண்டுபோனபோது, வட இந்தியா சமுத்திரத்திற்கு மேல் நாடாகக் கிளம்பிற்று. அக்காலத்தில் தென்குமரி நாட்டில் இருந்தவர்கள் சிலர் எகிப்து தேசத்திற்குப்போய் குடியேறி னார்கள். அக்காலத்தில் மேல்நாட்டில் இருந்தவர்கள் நாகரீக மில்லாதவர்களாயும், காட்டுமிராண்டிகளாயும் இருந்தார்கள். இந்த குமரி நாட்டார் அங்கு குடியேறின பிறகுதான் அவர் களுக்குத் தங்கள் நாகரீகத்தையும் மதத்தையும் கற்றுக்கொடுத் தார்கள். அப்போதுதான் நம் மதத்தைச் சார்ந்ததாகிய கிறிஸ்துவமதம் அங்கே தோன்றிற்று. நாம் இங்கு மாரி என்று சொல்வதை அவர்கள் மேரீ என்கிறார்கள். இங்கு கிருஷ்ண என்பதை அவர்கள் கிறிஸ்து என்கிறார்கள். இங்கு சீவன் (ஜீவன்) என்பதை அவர்கள் ஜீஸஸ் (இயேசு) என்றும் ஏவாள் என்றும் சொல்கிறார்கள். இங்கு ஆத்மா என்பதை அவர்கள் ஆதாம் என்கிறார்கள். இங்கு பரமாத்மா சீவாத்மா, மாயை என்பவைகளை அவர்கள் கடவுள், திருக்குமாரன், பரிசுத்த ஆவி என்று அழைக்கிறார்கள். கிருஷ்ணன் இங்கு மாடுகள் மேய்த்தான்என்றால், அவர்கள் கிறிஸ்துஅங்கு ஆடுகளைமேய்த் தார் என்கிறார்கள். கிருஷ்ணன் இங்கு மனிதர்களை நல்வழியில் நடத்துகிறார் என்றால் அங்கே கிறிஸ்து மனிதரை நல்வழியில் நடத்துகிறார் என்கிறார்கள். கிருஷ்ணன் இங்கு அர்ச்சுன னுக்கு உபதேசம் செய்தார் என்றால் அங்கு கிறிஸ்து தன் சிடர்களுக்கு உபதேசம் செய்தார் என்கிறார்கள் இங்கு ⅠⅠⅠ என்னும் சூலாயுதத்தை சிவன் கையிலும் காளி கையிலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அங்கு ✝ என்னும் சிலுவை

யின் மேல் கிறிஸ்து அறையப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ||| என்னும் சூலாயுதத்தில் பக்கத்து இரண்டு கைகளையும் நீட்டினால் —|— என்னும் சிலுவை உண்டாகிறது, இதிலிருந்து இரண்டு மதங்களுக்கும் பொதுவான அநேக முக்கியமான மூன்று விஷயங்கள் இருக்கின்றன என்று தெரிகிறது. முக்கியமானது இங்கே மூன்று மலங்களையும் நீக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் முக்கியமானவைகளை 10 நிபந்தனைகளாக்கி கிறிஸ்து அங்கே அவைகளை நீக்கவேண்டுமென்றிருக்கிறார்கள். அந்த மூன்று மலங்களை அங்கு அந்த சிலுவையின் மூன்று கால்களாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன. அந்த மலங்களில் யார் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்கள் கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட மாதிரி அறையப்பட்டு அழிவார்கள். கிறிஸ்து என்றாலும் கிருஷ்ணன் என்றாலும் மனச்சாட்சியைத்தான் குறிக்கின்றது. யார் மனச்சாட்சி பிரகாரம் நடக்கிறார்களோ அவர்கள் யாதொருபாப செயலையும் செய்யமாட்டார்கள். யார் மனச்சாட்சியோடு இருக்கிறார்களோ அவர்கள் கிறிஸ்து என்பதின் உண்மையான அர்த்தப்படி கிறிஸ்தவர் ஆவார்கள். எல்லா ஆத்மாவிலும் கிறிஸ்து இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது.

---

## தமிழர் மதம் தான் கிறிஸ்துவ மதம், கிறிஸ்துவ மதத்திலிருந்து அதற்கு அப்புரம் வந்தது இஸ்லாமிய மதம்.

---

1. தமிழர் மதம்:—பரமாத்மா, ஜீவாத்மா, அல்லது சிவன் சீவன் என்று முதலில் இரண்டாகப் பிரிக்கப்பட்டு பிறகு இரண்டும் ஒன்றுதான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

கிறிஸ்து மதம்:—கடவுள் திருக்குமாரன் என்று பிரிக்கப்பட்டு கடைசியில் கிறிஸ்துவாகிய திருக்குமாரன் தானும் பிதாவாகிய கடவுளும் ஒன்றுதான் என்று சொல்லி இருக்கிறார்.

2. த. ம.—நமது உடல்தான் அழிகிறது. ஆத்மா அழிவில்லை.

கி. ம.—கிறிஸ்து சிலுவையில் அறைப்பட்டு, இறந்து புதைக்கப்பட்டபிறகு, உயிர்ப்பித்து எழுந்துமேலே போய்விட்டார்.

3. த. ம.—நமது உடல் மண், நீர், தீ, வாயு, ஆகாயம் என்பவைகளால் ஆனது.

கி. ம.—கடவுள் மனிதனை உண்டாக்ினபோது களிமண் எடுத்து தண்ணீர் சேர்த்து செய்து வெயிலில் காய வைத்து ஊதி நம்மை உண்டாக்ினர்.

4. த. ம.—நாம் முன்ஜென்மத்தில் செய்த வினையின் பயனாய் இந்த ஜன்மம் எடுத்திருக்கிறோம்.

கி. ம.—நாம் பாபிகளாய் பிறந்திருக்கிறோம். கடவுள் பாரபக்ஷமற்றவர் என்றால் அந்த பாபம் எங்கிருந்து வந்தது. அதாவது நாம் முன்செய்த அதாவது முன் ஜென்மத்தில் செய்தவினை.

5. த. ம.—கிருஷ்ணன் என்பது மனச்சாட்சி.

கி. ம.—கிறிஸ்து என்பது மனச்சாட்சி.

6. த. ம.—மனச்சாட்சியாகிய கிருஷ்ணன் நம்மை நல்வழியில் செலுத்துகிறார்.

கி. ம.—மனச்சாட்சியாகிய கிறிஸ்து நம்மை நல்வழியில் செலுத்துகிறார்.

7. த. ம.—கிருஷ்ணன் பசுவாகிய நம்மை சரிவர கவனித்து மேய்க்கிறார்.

கி. ம.—கிறிஸ்து ஆடாகிய நம்மை சரிவர மேய்க்கிறார்.

8. த. ம.—நாம் இந்த ஜன்மத்தில் செய்யும் வினைப்பிரகாரம் பாபபுண்ய செயல்கள் பிரகாரம் மறுஜன்மம் எடுக்கிறோம்.

கி. ம.—நாம் இந்த ஜன்மத்தில் செய்த வினைக்கெல்லாம், செயல்களுக்கெல்லாம் கடைசி தீர்ப்புநாளில் அதாவது இறந்தபோது கடவுளிடம் பதில் சொல்லவேண்டும். அவர் அதற்குத் தக்கபடி தீர்ப்பு கொடுப்பார்.

9. த. ம.—இதற்காக நாம் எப்போதும் கடவுளை தியானம் செய்யவேண்டும். எழுந்திருக்கும்போதுமுதல் நித்திரை போகும்வரை அவரை நினைக்க வேண்டும். இதற்காக அக்காலத்தில் ஒருநாளை ஆறுகாலமாகப் பிரித்து தியானம் செய்ச் சொல்லி இருக்கிறது. இதை இப்போது விட்டுவி

கோவிலுக்கு ஆறுகால பூசை என்று வைத்துவிட்டார்கள். எந்தக்காரியம் செய்யத் துவங்கும்போதும் கடவுளுக்கு வணக்கம் செலுத்துகிறார்கள்.

கி. ம.—எழுந்திருக்கும்போதும், படுக்கும்போதும் மற்ற எந்தக்காரியம் செய்யும்போதும் கடவுளை தியானம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

10. த. ம.—தொழுகை, அல்லது சந்தியாவந்தனம், அல்லது அநுட்டானம் என்பதை மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதலில் ஆசமனீயம் செய்து பிறகு பிராணாயாமம் செய்து பிறகு ஜெபம் செய்கிறோம்.

கி. ம.—மாதா கோவிலில் போனவுடன் முதல்முதலில் கடவுள்பேரால் பிரார்த்தனைப் பாட்டு பாடி பிறகு குருவால் கடவுளைப்பற்றி பிரசங்கம் செய்யப்பட்டு, பிறகு அவரவர்கள் முட்டிக்கால்போட்டு தானாக தியானம் செய்கிறார்கள்.

11. த. ம.—நமக்கு உயிர்போகும் காலத்தில் மனம் எதில் நாடுகிறதோ அதேபோல மறுஜன்மம் கிடைக்கும். அதற்காக உயிர்போகும் காலத்திலாவது நாம் கடவுளைப்பற்றி நினைக்க வேண்டும். அந்தப்படி அச்சமயத்தில் சிலர் பஜனை செய்கிறார்கள்.

கி. ம.—உயிர்போகும் காலத்தில் ஒரு பாதிரி பக்கத்தில் நின்று ஜெபம் செய்கிறார். சவம் அடக்கம் ஆகும் முன்னும் ஜெபம் செய்கிறாகள்.

12. த. ம.—நாம் இறந்தால் இந்த மாமிச உடல் விழுந்து காரண உடலும், சூக்கும உடலாகிய அறிவுடலும், மறு ஜன்மத்திற்கு வருகின்றன.

கி. ம.—பைபிலில் ஒரு கதை:—கடவுள் ஒருவனிடம் ஒரு பொருளைக் கொடுத்து, ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ளச் சொன்னார். அதேபோல் அதுபோன்ற இரண்டு பொருள்களை இன்னும் இரண்டுபேர்களிடம் தனித்தனியாகக் கொடுத்தார். சிலகாலங் கழித்துவந்து அவர்களிடம் அப்பொருள்களைக் கேட்டார். முதலாமவன் அப்படியே வைத்திருந்தவனிடம் நீ வைத்திருப்பதற்கு லாயக்கில்லை என்று சொல்லி வாங்கி, இன்னொருவனிடம் கொடுத்தார். இரண்டாமவன் அந்தப் பொருளைக் கொஞ்சம் விருத்தி செய்திருப்பதையும் வாங்கி இன்னொருவனிடம் கொடுத்தார். மூன்றாமவன் மிகவும் விருத்தி செய்திருந்ததால், அவனைத் தன்னுடன் அழைத்துக்

கொண்டுவிட்டார். இதில் அந்தப்பொருள்தான் அறிவு அவை விருத்தி செய்தபடி பலன் கிடைத்தது.

13. த. ம.—காமம், குரோதம், உலோபம், இவைகளை நீக்கி பரிசுத்த மனத்துடன் அன்பாயிருக்கவேண்டும்.

கி. ம.—கிறிஸ்து சொன்னபடி 10 கட்டளைப்படி நடந்து அன்பாயிருக்கவேண்டும்.

14. த. ம.—துறவிகள் தன் புறப்பற்று அகப்பற்று அதாவது வெளியாசை உள்ளாசைகளை நீக்க வேண்டும். அப்படி செய்ததற்காக அவைகளை எரித்துவிட்டு, பரிசுத்தமாயிருப்பதற்காக தீ நிறமுடைய காஷாய ஆடையைத் தரித்துக்கொள்வார்கள். இன்னும் அதிகப்படியாய்க் கௌபீன ஆடையுடனிருந்து திருநீரை உடலெங்கும் பூசிக்கொள்வார்கள்.

கி. ம.—அதேபோல் கிறிஸ்துவ துறவிகளாகிய பாதிரிமார்கள் முழுவெள்ளை அங்கி தரித்து அரையில் கருப்பு அல்லது சிகப்பு நாடா தரித்துக்கொள்கிறார்கள். சிலர் தீய்த்துவிட்டதாக நினைத்து மார்பின்மேல் ஒரு கருப்புச் சட்டையைப் போட்டுக்கொள்கிறார்கள். சிலர் கருப்பு அங்கி தரித்துக்கொள்கிறார்கள். சிலர் நெருப்பு உருவம் மாதிரி சிவந்தஒருவிதமான முக்கோணபாகையைத்தலையில் அணிந்து கொள்கிறார்கள்.

15. த. ம.—மூலாதார நாடியை சகஸ்ராதார நாடிக்கு ஏற்றினவர்கள் ஞானிகள். அப்படி ஏற்றினால் அந்த நாடியின் உருவம் ஸ்ரீ போலிருக்கும்.

கி. ம.—ஞானம் வந்தவர்களாகக் கருதப்படும் பாதிரிமார்கள் போகும்போது பாதிரி தடி என்று ஸ்ரீ உருவமுள்ள ஒருதடியைக் கூட பிடித்துச்செல்கிறார்கள்.

16. த. ம.—விநாயகர்கையில் நம் மதத்தை, ஆணவத்தை அடக்கும் ஆயுதமாகிய மழுவைக் கொடுத்திருக்கிறது.

கி. ம.—நம்மதத்தை, ஆணவத்தை அடக்கும் ஆயுதமாகிய மழுபோன்ற ஆடுமேய்க்கும், மேல் வளைந்த கம்பை கிறிஸ்து கையில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

17. த. ம.—நமக்கு அறிவு அதிகமாக விருத்தியானால் ஞானம் உண்டாகும். அப்போது கடவுள் உலகத்தை அடை கிறோம். கடவுளோடு கலந்து விடுகிறோம். இறப்பு இல்

கி. ம.—நம்மிடம் வைத்திருக்க, கடவுளால் கொடுக்கப்பட்ட வஸ்துவாகிய அறிவை, மிக அதிகமாக விருத்தி செய்தால் கடவுள் தன்னுலகம் அழைத்துக்கொள்கிறார்.

18. த. ம.—தமிழர்களுக்கு சூலம்.

கி. ம.—கிறிஸ்துவர்களுக்கு சிலுவை.

19. த. ம.—இறந்தவர்கள்ஞாபகார்த்தமாக செய்யப்படும் விழா மாளய பக்ஷம்.

கி. ம.—இறந்த ஆத்மாக்களுக்கு கொண்டாடப்படும் விழா இறந்த ஆத்மாக்களின் திருநாள். (All souls day).

20. த. ம.—கிருஷ்ணன் பிறந்தநாள் விழாக் கொண்டாடப்படுகிறது.

கி. ம.—கிறிஸ்து பிறந்த நாள் விழாக் கொண்டாடப்படுகிறது.

21. த.ம.—ஜபம் செய்து இச்சா சக்தி கிரியா சக்திகளை ஜெயித்து ஞானசக்தியை அடைவதை சரஸ்வதி அல்லது ஞான பூசை அல்லது நவராத்திரி கொலு என்று ஏற்ப்படுத்தப்பட்டிருக்கிறது.

கி. ம.—ஜபம் செய்து அதுபோல் செய்வதை மைக்கல் மஸ் விலக்கு (Retreat) என்று செய்து மைக்கல்மஸ் பண்டிகை கொண்டாடப்படுகிறது.

22. த. ம.—சித்திரைமாதம் பவுர்ணமைதினம் தென்னை, மா விசேஷமாக இருக்கும் காலத்தில் தேங்காய்க் குலையும் மாங்காய் குலையும் வைத்து கடவுளை வணங்குகிறார்கள்.

கி. ம.—இதே சமயத்தில தென்னை ஞாயிறு (Palm Sunday) என்று சொல்லி தென்னங்குருத்தால் கோயிலை அலங்கரித்து ஆளுக்கு ஒரு ஓலையை எடுத்துச்சென்று கோயிலில் தொழுகிறார்கள்.

சூலமும் சிலுவையும் மூன்றைக் குறிக்கின்றன. அவ்வாறு இவ்விரண்டு மதங்களுக்கும் பொதுவான மூன்று விஷயங்கள் அநேகம் உண்டு. அவையாவன (1) சிவன், ஜீவன், பாசம்அல்லது அஞ்ஞானம், அதாவது நாம், கடவுள், உலகம். (2) இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். (3) காண்பான், காணப்படும் பொருள், காணும் காட்சி. (4) மனிதனுக்கு முக்குணம் அதாவது (a) உத்தமகுணம், (b) மத்திமகுணம், (c) அதமகுணம். அதாவது அசத்திய மிருகக்குணம்.

(5) மூன்றுவகை மாணுக்கர் (a) உத்தம மாணுக்கன் படித்து, பிறகு அதைப்பற்றி சிந்தித்து கெட்டவைகளை விட்டு நல்லவைகளைப் பிடித்துக்கொள்வது, (b) மத்திமமாணுக்கன் கிளிப்பிள்ளைமாதிரி அறிவோடு உணராமல் படித்தவைகளை அப்படியே ஒப்பித்தல், (c) அதம மாணுக்கன் படித்தவைகளில் நல்லவைகளை விட்டு கெட்டவைகளைப் பற்றிக்கொள்ளல். (6) பிறப்பு, இருப்பு, இறப்பு. (7) மூவாசை, மண்ணுசை, பொன்னுசை, பெண் ஆசை. (8) கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களைச் செய்கிருர். (9) நல்வினை, தீவினை, ஒன்றிலும் படாதவினை என்ற மூவகை வினைகளுண்டு. (10) ஆண், பெண், அலி என்ற முப்பால்களுண்டு. (11) பேதம், அபேதம், பேதாபேதம் (12) தன்மை, முன்னிலை படர்க்கை (13) காலம் தேசம் வஸ்து. (14) செய்தல், செய்வித்தல், உடன்படல் (15) மனம், வாக்கு, காயம், (16) உடல், உயிர், கடவுள் (17) சித்தம், மனம், புத்தி (18) இடசுத்தம், சரீரசுத்தம், மனசுத்தம் (19) இச்சை, கிரியை, ஞானம்.

கிறிஸ்துவ வேதபுஸ்தகத்தில் சாலமன் என்பவர் கர்த்தருக்கு ஒரு ஆலயம் கட்டினதாக சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கட்டிடம் நம் உடலையே குறிக்கிறது. அக்கட்டிட அமைப்பும், கட்டிட சாமான்களும் நம் உடலிலுள்ள தத்துவங்களையும் வஸ்துக்களையிம் குறிக்கின்றன.

---

## தமிழர் மதமும் இஸ்லாமிய மதமும்

தமிழர் மதம் தான் இஸ்லாமிய மதம். தமிழர் மதம் வரையருக்கப்படாத காலம்முதல்கொண்டு நம்தமிழ்நாடாகிய, திராவிட நாடாகிய குமரிநாட்டில் இருந்தது. இப்போதும் இருக்கிறது. குமரிநாட்டின் தென்பகுதியாகிய தென்குமரியை கடல்கொண்டுபோனபோது அதிலிருந்தவர்களில்சிலர் வெளிக்கிளம்பி வெளிநாடாகிய இஸ்ரேல்துதேசம்போய் தங்கள்மதத்தை அப்போது அங்குள்ளவர்களுக்கு, அவர்கள் அறிவிற்கும், பழக்க வழக்கங்களுக்கும் ஏற்றபடி அறிவித்தார்கள். அது தான் தமிழர் மதத்தை அடிப்படையாகக்கொண்ட கிறிஸ்துவ மதம். இந்த இருமதங்களில் உள்ள உட்பொருள்களை கூர்ந்து நோக்கினல் தமிழர் மதத்தின் முதல்படிதான் கிறிஸ்துவமதம் என்று நன்கு புலப்படும். அதற்கப்புரம் அந்தக் கிறிஸ்துவ மதக்கொள்கைகளைக்கொண்டே அதற்குப்பக்கத்து தேசத்தில் தோன்றினது இஸ்லாமிய மதம். கிறிஸ்துவ மதத்தின்

பழைய ஏற்பாட்டின் பொருள்களையும், இஸ்லாமிய மதத்தின் குரானின் பொருள்களையும் கவனித்தால் தெரியவரும். இந்த இஸ்லாமியமதம் சரித்திரம்ஏற்பட்ட இப்போதைய பிற்காலத்தில் தோன்றின மதம். அதை ஏற்படுத்திய பெரியாரின் காலமும் வரையறுக்கப்பட்டிருக்கிறது. தமிழர்களுக்கு முதற்படியாகக் கடவுள் வணக்கமும், அந்தக்கடவுளும் எல்லாம் கடந்த, உருவ குணம் முதலியது அற்றவராக ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இப்படியேதான் இஸ்லாமியமதத்திலும் இருக்கிறது. இருமதத்திலும் கடவுள் நல்லவரென்றும், பாரபக்ஷ மற்றவரென்றும், மிகவும் அன்புடையவரென்றும், நாம் செய்வது யாதொன்றும், நாம் நினைப்பது யாதொன்றும் அறிந்து கொள்கிறார் என்றும், அவர் எங்கும் உள்ளார் என்பன எல்லாம் இருக்கின்றன.

தமிழர்மதத்தில் கடவுளை எப்போதும் நினைக்க வேண்டும். அதற்காக ஒரு நாளைக் குறிப்பிட்ட ஆறுகாலங்களிலாவது, அவருக்காககுறிப்பிட்ட ஒருஇடத்தில்போய் வணங்க வேண்டும் என்று உள்ளது. இதைத்தான் இப்போது கோயிலில் ஆறுகால பூசை என்று செய்துவிட்டார்கள். வீட்டிலாவது பூசையறை என்று ஏற்படுத்தி, அதில்வணங்குகிறார்கள். அதுவும் இல்லாத காலத்தில் மற்றவர்களால் இடஞ்சல் இல்லாதபடி தனித்து இருந்து செபம் அல்லது பூசை அல்லது வணக்கம் செலுத்துகிறார்கள். இதேமாதிரிதான் இஸ்லாமியரும் தினமும் ஐந்துவேளைமசூதியிலோஅல்லதுதனித்த இடத்திலோ வணக்கம்செலுத்துகிறார்கள். செபம் செய்தல் அல்லது வணக்கத்தின் முன் தமிழர்கள் தங்கள் கை, கால், கண், முகம் முதலியது சுத்தம் செய்து, மனதை கடவுளின்மேல் நிறுத்தி செய்வார்கள். அதுபோலவே இஸ்லாமியரும் மசூதியில் வணக்கம்செலுத்தப்போகுமுன் தங்கள் கை, கால், கண், முகம் முதலியது சுத்தம் செய்து தங்கள்கவனத்தை வேறெதிலும் செலுத்தாது வணக்கம் செலுத்துகிறார்கள். இதைத்தான் இட சுத்தம், உடல் சுத்தம், மன சுத்தம் என்று சொல்வது. முதலில் இடத்தை சுத்தம் செய்துகொண்டு அந்த இடத்தில் உடலை சுத்தம் செய்துகொண்டு பிறகு மனத்தை சுத்தம் செய்துகொண்டு இருக்க வேண்டுமென்பது.

தமிழர்களுக்கு மனதை ஒன்றில் நிறுத்தி யோகம் செய்ய ஏற்படுத்தியதில் முதலில் இருக்கும் விதங்களில் அநேக விதங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதில் ஒன்று இடது காலை மடக்கி, இடது குதிங்கால் ஆசனத்திற்கும் மர்ம இடத்

திற்கும் மத்தியில்இருக்கும்படி, அந்தக் கால்மேல்உட்கார்ந்து, வலது காலையும் அப்புறம் மடக்கி உட்கார்ந்து செபம் செய்யச் சொல்லியிருக்கிறது. அதுபோலவே இஸ்லாமியரும் கடவுளுக்கு வணக்கம் செலுத்தும்போது இடதுகாலை மடக்கி, அந்த குதிங்காலின்மேல் உட்கார்ந்து, அதன்மேல் வலதுகாலை மடக்கி வணக்கம் செலுத்துகிறார்கள்.

தமிழர்களும்இஸ்லாமியரும் அன்புடன்இருக்க முயலுகிறார்கள். தமிழர்கள் இம்சை கூடாதென்று பிராணிகளைக் கொல்வது அன்பிற்குவிரோதம் என்று மாமிச உணவைநீக்கி, பிராணிகளின் கொலையை நிறுத்துகிறார்கள். இஸ்லாமியர் மாமிசமே தங்களுக்கு உணவாக இருந்தும், தாங்களே கொலை செய்வது கூடாதுஎன்று ஆகாரத்திற்காககொல்லும் பிராணிகளைத் தாங்கள் கொல்லாமல், அதற்காக மசூதிகளில் முல்லாக் கூவும், அதாவது கடவுள் பெயரை அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கும் ஆட்களைவிட்டு கொல்லச் சொல்லுகிறார்கள். அவர்கள் கடவுள் பெயரை அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பதால், கொலை செய்வதின் தோஷம் நீங்கிவிடும் என்று கருத்து. தவிர அப்படி கொல்லும் நபர் என்ன செய்கிறார் என்றால், கொல்லும்முன் மந்திரம்சொல்லுகிறார். மந்திரத்தின் பொருள் என்னவென்றால் முதலில் அந்தப்பிராணியின் வாயில் தண்ணீரைவிட்டு, அந்தப்பிராணிக்குக் கொஞ்சம் சுகம் தந்து, அந்தப் பிராணியிடம் தான் அதைத் தான் சீவனார்த்தமாக கொலை செய்யப் போவதாகவும், அதற்காக அது தன்பேரில் வருத்தம் கொள்ளக்கூடாது என்றும், கடவுளிடம் கேட்டுக் கொள்ளும்படியாயும் சொல்லிவிட்டு, தான் கடவுளை நோக்கி "கடவுளே எனக்கு பிழைப்பதற்கு இந்த வழி கொடுத்த கடவுளே பிழைப்பதற்காக இந்த கொலையை செய்கிறேன். அதனால் உண்டாகும்தோஷம் உன்னுடையது" என்று கொலை செய்கிறார். ஆகையால் அவர்கள் மதத்தில், இப்போது இவர்கள் நடத்தையில் இல்லாவிட்டாலும், எவ்வளவு அன்பும் கடவுளினிடம்அன்பும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று கவனிக்கவும்.

தமிழர் மதத்தில் நாம் இப்பிறவியில் செய்த செயலின் வினையின் பயனிற்குஏற்றவாறு பிரதிபலன் பின்னால்வருகிறது. அதன் பிரகாரம் நாம் செய்த வினையை முதலில் இரண்டாகப் பிரிக்கப்பட்டு, செய்தவினை அதிகமாக இருப்பதால், அவ்வளவிற்கும் அனுபவிக்க ஒரேகாலத்தில் முடியாதுஎன்றுசொல்லி அனுபவிக்க இருப்பதை பிராரப்தம் என்றும், பாக்கி இருப்பதை சஞ்சிதம் என்றும், முற்பிறவியில் நாம்செய்த வினை

பிராரப்தத்திற்கு ஏற்றவாறு, இந்த பிறவியில் நாம் சுகதுக்கம் அனுபவிக்கிறோம் என்றும், மறுபடியும் இந்தப்பிறவியில் நாம் செய்யும் வினையை ஆகாமிய வினை என்று சொல்லி, இந்தப் பிறவிக்கு முன்பே பாக்கி இருக்கும் சஞ்சித வினையும், இந்தப் பிறவியில் செய்த ஆகாமிய வினையும் சேர்ந்து முன்போல மறு பிறவிக்கு வருகிறதென்று தமிழர் மதத்தில் கூறப்பட்டிருக்கிறது. இதுபோல் ஆனால் இவ்வளவு விரிவாய் இல்லாமல் இஸ்லாமிய மதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் இந்த பிறவியில் செய்த செயலுக்கெல்லாம் கடைசி தீர்ப்பு நாளில் கடவுளிடம் பதில் சொல்லவேண்டியிருக்கும். கடவுள் அன்புடையராகவும், பாரபக்ஷமற்றவராகவும் இருப்பதால் நம் தப்பிற்கு ஏற்ற தண்டனை விதிக்கிறார் என்றும், தப்பு அதிகமாக இருந்தால் அவ்வளவிற்கும் தாங்கமுடியாது என்பதற்காக, அன்பின் காரணமாக நாம் அனுபவிக்கக்கூடிய அளவு நமக்கு தண்டனை கொடுக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் நாம் செய்த வினைதான் ஆகாமிய வினை என்று சொல்லப்படுவது. அவர் நமக்கு கொடுக்கும் தண்டனைதான் பிராரப்த வினை என்று சொல்லப்படுவது. தண்டனைதான் அந்த வினையுடன் மறு பிறப்பு. ஆகவே இரண்டிற்கும் வித்தியாசம் இல்லையென்றும், தமிழர் மதத்தில் சொல்லிவருவதைவிட கொஞ்சம் குறைவாக முன் சொன்னதுபோல், அந்தக் காலத்தில் அந்த நாட்டார்களின் பழக்க வழக்கங்களுக்கும், அறிவிற்கும் ஏற்றவாறு இஸ்லாமிய மதத்தில் சொல்லியிருப்பது விளங்கும்.

எல்லாம் ஒரே குலம் எல்லாம் ஒரே சமயம் என்று தமிழர்கள் நூலில் திருமூலரென்பவரால் சொல்லப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள எல்லா மனிதர்களுமே, தேசம், மதம் முதலிய வித்தியாசமில்லாமல் எல்லாருமே "ஒரே குலம்", ஒரே குடும்பம், எல்லாரும் அண்ணன் தம்பிகள், அக்காள் தங்கைகள் மாதிரி. ஆகவேதான் சுவாமி விவேகாநந்தர் அமெரிக்கா நாட்டிற்குப் போய் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தபோது 'அமெரிக்கா நாட்டு சகோதர சகோதரிகளே' என்று சொல்லி அழைத்து ஆரம்பித்தார். ஆனால் இஸ்லாமியர்கள் தங்கள் இஸ்லாமியர்களை மட்டும் சகோதரர்களாகப் பாவிக்கிறார்கள். சமயத்திலும் ஒரே சமயம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாயுமானவரும் 'கோடி சமயக்காரர்களும் தந்தெய்வம், எந்தெய்வம் என்று எதிர்வழக்கிடவும் நின்றது எது? கருத்திற்கு இசைந்தது அதுவே!' என்று சொல்லியிருக்கிறார். சுவாமி விவேகானந்தரும் தனது அமெ

ரிக்கா பிரசங்கத்தில் 'தற்காலம் உலகத்திலுள்ள எல்லா மதங்களும், இனி உண்டாகப்போகிறதும்தான் வேதாந்தம்' என்று சொல்லியிருக்கிறார். அதாவது வேதம் + அந்தம். வேதம் என்றால் ஞானம் அறிவு. அதாவது அறிவின் முடிவு. இதையேதான் தமிழர்கள் சித்தாந்தம் என்கிறார்கள். அதாவது சித்தம் + அந்தம். அதுவும் அறிவின் முடிவு என்றுதான் பொருள். அதனால்தான் உலகத்திலுள்ள எல்லா மதங்களையும் உட்கொண்டது தமிழர் மதம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிற மதத்தை வெறுக்கிறவன் உண்மை சைவன் அல்லன் என்று சில பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே இஸ்லாமிய மதமும் தமிழர் மதத்தில் அடக்கம்தான். அதனால்தான் 'எல்லாம் ஒரே சமயம்' என்று தமிழ் நூலில் சொல்லப்பட்டிருக்கிறது.

அன்பே சிவம் என்று தமிழராகிய திருமூலர் சொல்லியிருக்கிறார் அதாவது தமிழர்கள் எல்லா சீவராசிகளும் ஒன்றே என்றும், எல்லா சீவராசிகளிடத்திலுமே அன்பாயிருக்கவேண்டும் என்றும், பிற உயிரை தன் உயிர்போல் பார்க்கவேண்டும் என்றும், அன்பாய் நடத்தவேண்டுமென்றும் சொல்லியிருக்கிறது. இஸ்லாமிய மதத்தில் மனிதர்களிடத்தில் (மட்டும்) அன்பாயிருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

தமிழர் மதத்தில் தன்னடக்கம் வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. உலகத்தில் தான் ஒரு சிறு அணு போன்ற பகுதி என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைத்தான் தமிழர்கள் நெற்றியிலிடும் மதக்குறிகள் குறிக்கின்றன. இதைப்போலத்தான் இஸ்லாமிய மதத்திலும் தன்னடக்கம் வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்காகத்தான் அந்த மதத்தில் நகைகள், வெள்ளியில் செய்து போட்டுக் கொள்ளவேண்டுமென்றும், மற்ற ஆடம்பர நகைகள் கூடாதென்றும், சரிகை முதலிய ஆடம்பரங்கள் கூடாது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது

தமிழர் மதத்தில் சிவன் கையிலும் காளி கையிலும் சூலம் என்று சொல்லப்பட்ட ⋔ என்னும் ஆயுதம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இஸ்லாமிய மதத்திலும் ☪ என்பது மதக்குறி. இதில் ஒரு இளம் பிறையின்மேல் ஓர் ஐந்து புள்ளி உள்ள நட்சத்திரம் இருப்பது. இந்த மதக் குறி சூல

## தமிழர் (திராவிடர்) மதச் சுருக்கம்

... திலிருந்து வந்தது என்று முன்னமேயே மதங்களின் ஒற்றுமை என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது. தமிழர் மதத்தில் சொல்லப்பட்டிருக்கும் சில கொள்கைகளே இந்த இளம் பிறையும் ஐந்து புள்ளி நட்சத்திரத்தின் உள் பொருள்கள். இளம் பிறையானது சிவன் தலையிலும் குறிக்கப்பட்டிருக்கிறது. இளம் பிறையின் சுபாவம் என்னவென்றால் அது நிலைத்திருப்பது இல்லை. அது பதினைந்து நாளைக்கு பெருகுவதும் பிறகு குறைவதுமே. அதுபோலவே இந்த உலகமும் அதில் உள்ள பொருள்களும் என்றுமே நிலைத்திராதவை. அதுகளினால் உண்டாகும் சுகமும் நிலைத்திராதவை. ஆனால் அதைவிட்டு அதற்கு மேலாக இருக்கும் ஐந்து புள்ளி உள்ள நட்சத்திரமும் தமிழர் மதத்தில் இருக்கும் அநேக ஐந்து தத்துவங்களை குறிக்கின்றது. முக்கியமாக அது ஐந்து எழுத்து என்று சொல்லப்பட்ட பஞ்சாட்சரம் என்பதை குறிக்கின்றது. இதுதான் கடவுளிடத்தில் போகும் வழியை காட்டுகின்றது. அங்கு போனால் எப்போதும் நிலைத்திருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் என்று உணர்த்துகிறது. அதாவது இந்த உலகமும் இங்கு உள்ள பொருள்களும் நமக்கு ஆனந்தத்தை கொடுப்பனவல்ல. கடவுள் ஒருவரே நமக்கு நித்திய ஆனந்தத்தை கொடுப்பவரென்று குறிக்கிறது.

தமிழர் கொண்டாடும் தசரா என்னும் நவராத்திரி கொலுவே இஸ்லாமியர் ரம்சான் என்று கொண்டாடும் பண்டிகை. நாம் நம் தசராவின் பொருள் தெரியாமலே வெறும் களியாட்டமாக கொண்டாடுகிறோம். இஸ்லாமியரோ கொஞ்சம் உண்மையாக கொண்டாடுகிறார்கள். தசரா என்று நாம் பத்து நாள் கொண்டாடினால் அவர்கள் முப்பது நாள் கொண்டாடுகிறார்கள். நமக்கு முதல் ஒன்பது நாள் நவராத்திரி கொலு என்றதின் பின் தசரா பத்தாவது நாள் என்பது. அதாவது ஒன்பது நாள் தபஸ் இருந்து முதலில் இச்சையை, ஆசையை அடக்கி, பிறகு கிரியை என்னும் செய்கையை அடக்கி, பிறகு நமக்கு ஞானம் என்னும் கடவுள் அறிவை அடைந்து பத்தாவது நாளாகிய தசரா அன்று ஞானம் பெற்று பதினோராம் நாள் அஞ்ஞானத்தை அழித்து இன்பம் பெறுவதைக் குறிக்கிறது. இதையே இஸ்லாமியர் செய்கையில் காட்டுகிறார்கள். முப்பது நாள் நோன்பு இருந்து, பகலில் ஆகாரம், தண்ணீர் முதலிய எதுவும் உட்கொள்ளாமல் முப்பது நாளும் கொரான் என்னும் வேத புஸ்தகத்தையே படித்துக்கொண்டிருந்து, அதாவது முப்பது நாளும் மனதை கடவுளின்பேரிலேயே செலுத்திக்கொண்டிருந்தால் அதன் பய

ளுய் *முப்பத்தியோராம் நாள் கடவுள் அருள் கிடைத்து ஆனந்தம் அடைகிறார்கள். இன்பம் அடைகிறார்கள். இதைக் குறிக்கவே இன்பத்தைக் கொடுக்கும் இனிப்பான ஆகாரத்தை அன்று முதலில் சாப்பிடுகிறார்கள். பிறகு கடவுளுக்கு வணக்கம் செலுத்தி மறுபடி மற்ற ஆகாரம் எடுத்துக்கொண்டு அன்று ஆனந்தமான வாழ்க்கை செய்கிறார்கள். அதாவது புது ஆடை உடுத்தல், ஊரில் ஆனந்தமாய் உலவல் முதலியன செய்கிறார்கள். இதன் பொருளை இவர்களும் அவர்களும் உணராமல் அந்த நல்ல காலத்தை வீண் கலகத்தில் இறங்கி விடுகிறார்கள்.

---

## சேர்க்கை I.

உற்பத்தி விவரம் :—

பிருதிவின் அம்சத்தில் மண் :—1. அஸ்தி. 2. மாமிசம். 3. சர்மம். 4. நரம்பு. 5. உரோமம்.

அப்புவின் அம்சத்தில் நீர் :—1. வாய்நீர். 2. சிறுநீர். 3. வியர்வை. 4. இரத்தம். 5. சுக்கிலம்.

தேயுவின் அம்சத்தில் தீ :—1. பசி. 2. தாகம். 3. நித்திரை. 4. ஆலசியம். 5. சங்கமம்.

வாயுவின் அம்சத்தில் வாயுவு :—1. கிடத்தல். 2. நடத்தல். 3. இருத்தல். 4. ஓடல். 5. நத்தல்.

ஆகாயத்தின் அம்சத்தில் ஆகாயம்:—1. ஆசை. 2. துவேஷம். 3. பயம். 4. வெட்கம். 5. மோகம்.

## சேர்க்கை II.

பஞ்சபூதங்கள்-ஐந்து பருப்பொருள்கள் :—பிருதிவி-மண், அப்பு-நீர், தேயு-தீ, வாயுவு-வாயுவு, ஆகாயம்-ஆகாயம் (விசும்பு).

ஞானேந்திரியங்கள்-ஐம்பொறிகள் :— தொக்கு-மெய், சிங்குவை-வாய், சட்சு-கண், ஆக்கிராணம்-மூக்கு, சோத்திரம்-செவி.

தன்மாத்திரைகள்-நுண்ணிய பொருள்கள் :—இரசம்-சுவை, ரூபம்-ஒளி, ஸ்பரிசம்-ஊறு, சத்தம்-ஓசை, கந்தம்-நாற்றம்.

கன்மேந்திரியங்கள்-தொழில் உறுப்புகள்:—பாணி-கை, பாதம்-கால், வாக்கு-வாய், பாயிரு-எருவாய், உபத்தம்-கருவாய்.

அந்தக்கரணங்கள்-அகக் கருவிகள்:—மனம்-மனம், புத்தி-அறிவு. சித்தம்-நினைவு, அகங்காரம்-முனைப்பு.

சுத்தவித்யாதத்துவங்கள்-உணர்வு நிகழ்ச்சிபொருள்கள்: காலம்-காலம், நியதி-பிறழா நிகழ்ச்சி, கலை-கலை, வித்தை-நினைப்பு, அராகம்-விருப்பு, புருடன்-மகன், மாயை-மாயை.

சிவதத்துவங்கள்-சிவநிலையப் பொருள்கள்:— சுத்த வித்தை-தூயநினைவு, ஈசரம்-தலைமை, சாதாக்கியம்-அருள் நிலை, சக்தி-அன்னை, சிவம்-சிவம்.

தச நாடிகள்-பத்து நாடிகள்:—இடகலை-இட மூச்சு, பிங்கலை-வல மூச்சு, சுழுமுனை-நடு மூச்சு, சிகுவை-உள்நாக்கு நரம்பு, புருடன்-வலக்கண், காந்தாரி-இடக்கண், அத்தி-வலச் செவி, அலம்புடை-இடச்செவி, சங்கினி-கருவாய், குரு-எருவாய்.

தசவாயுக்கள்-பத்து காற்று:—பிராணன்-உயிர்க்காற்று, அபானன்-மலக் காற்று, வியானன்-தொழில் காற்று, உதானன்-ஒலிக் காற்று, சமானன்-நிரவு காற்று, நாகன்-தும்மல் காற்று, கூர்மன்-விழிக் காற்று, கிருகரன்-கொட்டாவி காற்று, தேவதத்தன்-இமைக் காற்று, தனஞ்செயன்-வீங்கற் காற்று.

பஞ்சாசயங்கள்-ஐந்து குடல்கள்:—அமர்வாசயம்-இரைக் குடல், பகிர்வாசயம்-செரி குடல், சலவாசயம்-நீர்க் குடல், மலவாசயம்-மலக் குடல், சுக்கிலவாசயம்-வெண்ணீர்க் குடல்.

பஞ்ச கோசங்கள்-ஐந்து உடம்புகள்:—அன்னமய கோசம்-உண வுடம்பு, பிராணமய கோசம்-காற் றுடம்பு, மனோன்மய கோசம்-மன வுடம்பு, விஞ்ஞானமய கோசம்-அறி வுடம்பு, ஆனந்தமய கோசம்-இன்ப உடம்பு.

ஆறு ஆதாரங்கள்-ஆறு நிலைகள்:—மூலாதாரம்-மூலம், சுவாதிஷ்டானம்-கொப்பூழ், மணிபூரகம்-மேல் வயிறு, அநாகதம்-நெஞ்சம், விசுத்தி மிடறு, ஆஞ்ஞை-புருவ நடு.

திரி மண்டலம்-மும் மண்டலம்:—அக்கினி மண்டலம்-தீ மண்டிலம், ஆதித்த மண்டலம்-ஞாயிற்று மண்டிலம், சந்திர மண்டலம்-திங்கள் மண்டிலம்.

திரி மலம்-மும் மலம்:—ஆணவம்-ஆணவம், மாயை-மாயை, கன்மம்-வினை.

## சேர்க்கை

திரி தோஷங்கள்-முக் குற்றங்கள் :—வாதம்-வாதம், பித்தம்-பித்தம், சிலேஷ்மம்-கவம்.

மூவேடணை-முப்பற்றுகள் :—அர்த்த வேடணை-பொருட்பற்று, புத்திர வேடணை-புதல்வர் பற்று, லோக வேடணை-உலகப் பற்று.

திரிகுணம்-முக்குணங்கள் :— சாத்விகம்-உத்தமகுணம், இராசதம்-மத்திமம், தாமதம்-அதமம்.

மாயாசக்திகள்-உட்பகைகள் :—காமம்-அவா, குரோதம், உலோபம்-பற்றுள்ளம், மோகம்-மயக்கம், மதம்-செருக்கு, மாச்சரியம்-பொறாமை.

இரு கன்மங்கள்-இரு வினைகள் :—புண்ணியம்-நல்வினை, பாவம்-தீவினை.

பஞ்சாவஸ்தைகள்-ஐவகை நிலைகள் :— சாக்கிரம்-நனவு, சொப்பனம்-கனவு, சுழுத்தி-உறக்கம், துரியம்-பேருறக்கம், துரியாதீதம்-உயிர்ப்படக்கம்.

தாதுக்கள் :—இர்சம்-சாரம், இரத்தம்-செந்நீர், மாமிசம்-ஊன், மேதஸ்-கொழுப்பு, அஸ்தி-எலும்பு, மச்சை-மூளை, சுக்கிலம்-வெண்ணீர்.

கன்மேந்திரிய விஷயங்கள்-தொழில் உறுப்புகள் செயல்கள் :—வசனம்-சொல்லல், கமனம்-நடத்தல், தானம்-கொடுத்தல், விசர்ச்சனம்-விடுதல், ஆனந்தம்-மகிழ்தல்.

அட்டமா சித்திகள்-எண் பெறு பேருகள் :— அணிமா-அணுத்தன்மை, மகிமா-பருமை, கரிமா-விண்டன்மை, இலகிமா-மென்மை, பிராப்தி-விரும்பிய செய்தல், பிரகாமியம்-நிறை உண்மை, ஈசத்துவம்-ஆட்சியதனல், வசித்துவம்-கவர்ச்சி.

## சேர்க்கை III.

சைவ மதத்தில் சொல்லியிருக்கும் 96 தத்துவங்களாவன :—

ஆன்ம தத்துவம் 24 :—ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, தன்மாத்திரை 5, பூதங்கள் 5, அந்தக்கரணங்கள் 4.

நாடிகள் 10 :—இடகலை, பிங்கலை, சுழிமுனை, உள்நாக்கு, வலக்கண், இடக்கண், வலச்செவி, இடச்செவி, கருவாய், எருவாய்.

அவத்தைகள் 5 :—ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

## தமிழர் (திராவிடர்) மதச் சுருக்கம்

மலங்கள் 3 :—ஆணவம், கன்மம், மாயை.

குணங்கள் 3 :—சத்துவம், ரஜம், தமம்.

மண்டலங்கள் 3 :—அக்கினி மண்டலம் (குண்டலி), சூரிய மண்டலம் (பேரறிவு), சந்திர மண்டலம் (அறிவு).

பிணிகள் 3 :—பித்தம், வாதம், சிலேத்துமம்.

விகாரங்கள் 8 :—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், ஈறிசை, டம்பம்.

ஆதாரங்கள் 6 :—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆஞ்ஞை.

தாதுக்கள் 7 :—இரதம், உதிரம், என்பு, தோல், தசை, மூளை, சுக்கிலம்.

வாயுக்கள் 10 :—வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன்.

கோசங்கள் 5 :—அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோன்மய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம்.

வாயில்கள் 9 :—கண்கள் 2, காதுகள் 2, நாசிகள் 2, வாய், குதம், குய்யம்.



தஞ்சைக் கூட்டுறவு மின்னியக்கப் பதிப்பகம், கரந்தை.

இந்நூல் கிடைக்குமிடம் :—

பழனியப்பா பிரதர்ஸ்,
புத்தக வியாபாரம்,
தெப்பக்குளம் போஸ்ட்டு,
திருச்சினுப்பள்ளி.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
நெ. 6. பவளக்காரத்தெரு,
மண்ணடி போஸ்ட்டு,
சென்னை.

